கல்கி
29.8.2004

# 2,3 விஷயம்!



## உதவியா இருக்குமே!

பெங்களூரில் அரசுப் பேருந்துகளில் ஊர்களின் பெயர்கள் எல்லாமே கன்னடத்தில் மட்டுமே உள்ளன. ஆங்கிலத்திலும் எழுதினால் கன்னடம் படிக்கத் தெரியாதவர்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும். இதை எல்லா மாநிலங்களிலும் பின்பற்றினால் டூரிஸ்ட்டுகள் சிரமப்பட மாட்டார்கள்.

- ஷர்மிளா ராவ்,
பெங்களூர்

## அதிரச வாழ்க்கை!

திருமணமான பெண்கள் முதன் முறையாகப் புகுந்த வீட்டுக்குச் செல்லும்போது தாய் வீட்டிலிருந்து முறுக்கு, பொருள் விளங்கா உருண்டை, அதிரசம் போன்ற பலகாரங்களை அனுப்புங்கள். புகுந்த வீட்டில் நாத்தனார்களும் மாமியாரும் அந்தப் பெண்ணிடம் முறுக்காக நடந்து கொள்வார்களாம். அவர்கள் இவளைக் குறித்து ஜாடை மாடையாகப் பேசுவதன் பொருள், விளங்காதாம்.

இவ்வளவையும் சகித்துக் கொண்டு வாழும் பெண்ணின் வாழ்க்கை அதிரசம் போல சுவையாக இருக்குமாம்.

இதற்காகவே இந்த மூன்று பக்ஷணங்களையும் அனுப்புவார்களாம்.

- எம்.கே. நாராயணன்,
மும்பை



## நீல நிறம் ஏன்?

சட்டக் கல்லூரி மாணவர்களுடன் கலந்துரையாடும் நிகழ்ச்சிக்கு வந்திருந்த சுவாமி விவேகானந்தர் "கண்ணபிரானை ஏன் நீலநிறமாக சித்திரிக்கிறார்கள்?" எனக் கேட்டார். பல மாணவர்கள் பதில் கூற முடியாமல் திகைத்தனர்.

"ஐயா, வானமும் நீலநிறம், கடலும் நீல நிறம். இவை எல்லையற்றவை. கண்ணனும் இவை போன்று எல்லையற்று நிற்கிறான். இந்த மாபெரும் உண்மையை விளக்கவே, கண்ணனை நீல நிறமாக உருவாக்கியிருக்கிறார்கள்" என்றார் ராஜகோபாலன் என்ற மாணவன்.

அவனது திறமையைக் கண்டு வியந்த விவேகானந்தர், அந்த மாணவரின் எதிர்காலம் ஒளிவீசட்டும் என வாழ்த்தினார். அந்த மாணவர் மூதறிஞர் ராஜாஜி.

- ஈரோடு
ரேவதிப்ரியன்



## புங்கை விதை பயோ-டீஸல்!

ஸ்ரீ வைகுண்டம் அருகிலுள்ள ஆழ்வார்தோப்பு கிராமத்தில் புங்கை மர விதைகளைக் கொண்டு பயோ-டீஸல் தயாரிக்கிறார்கள். நான்கு கிலோ விதையில், ஒரு லிட்டர் பயோ-டீஸல் கிடைக்கிறதாம்.

''எங்கள் ஊரின் தாமிரபரணி ஆற்றுக் கரையில் புங்கை மரங்கள் அதிகம். பயனில்லாமல் இருந்த இம்மரங்களின் விதைகளை, மகளிர் சுய உதவிக் குழுக்களின் முயற்சியால் பயோ-டீஸல் தயாரிக்கப் பயன்படுத்துகிறோம். இந்த டீஸலை லோடு ஆட்டோவுக்கு ஊற்றிச் சோதனை செய்தபோது, லிட்டருக்கு இருபத்துநான்கு கி.மீ. வரை மைலேஜ்



கிடைத்தது. இந்தத் தகவலறிந்து இந்துஸ்தான் பெட்ரோலிய நிறுவனம், எங்களிடம் தினமும் இருநூறு லிட்டர் டீஸல் வேண்டுமெனக் கேட்டிருக்கிறது'' என்கிறார் ஆழ்வார்தோப்பு பஞ்சாயத்துத் தலைவர் சுசிலா ஜூலியட்.

புங்கை மர இலைகளை ஆடுமாடுகள் முகர்ந்துகூட பார்க்காது என்பதால், இதை வளர்ப்பது எளிது. 'மரம் வளர்ப்போம்' வாசகத்துக்குப் பதில் 'புங்கை மரம் வளர்ப்போம், பயோ-டீஸல் பெறுவோம்' வாசகம்கூட கேட்சிங்காகத்தான் இருக்கிறது.

- டி.எல். ரெட்டி, வேலிடுபட்டி




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications
Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு



பெங்களூர் எம்.ஜி.ரோடிலிருக்கும் பாரிஸ்டாவில் காபி குடிக்கப் போன (நெசமாத்தேன்... பத்து தேதிக்குள் போகுமிடம்) நமக்கு ஸ்வீட் ஷாக்! பசங்க கண்ணு பூரா ஒரு பட்டாம்பூச்சியின் மேல்... யாரிந்த மோனலிஸா? வட்ட மிட்டுப் பிடித்து விட்டோம். அட... மாடல் கம் நடிகை சித்தாரா வைத்யா.

சிக் உடல், பளிச் முகம், டன் சிரிப்பு, டைட் ஜீன்ஸ் + டாப்ஸ், விரித்த ஷாம்பூ தலை, குல்ஃபி குரல்... என சிலுசிலு காற்றாய் லைம் டீ குடித்துக் கொண்டிருந்தார்.

"என்னுடைய முதல் கன்னடப்படம் கோகர்ணா. நான் இரண்டாவது ஹீரோயின். தியேட்டரில் சினிமா பார்த்து எனக்கு ஒரே 'ஷாக்'! (தியாகராஜன் பொறுப்பல்ல) என்னுடைய ரோல் எடிட்டிங் டேபிளில் கன்னாபின்னாவென்று கட் ஆகி, மைக்ரோ ரோல் ஆகியிருந்தது. சினிமா செம ஃப்ளாப். ஆனால் நான் அசரவில்லை. தொடர்ந்து நீடித்துக் கொண்டிருக்கிறேன்" என்று ஆரம்பித்தார் சித்தாரா.

அது சரி, ஒரு மாமாங்கத்துக்கு முன்னால், ஏற்கெனவே ஒரு சித்தாரா அறிமுகமாகி, இப்போது அண்ணி, அக்கா ரோலில் நடிக்கிறாரே... பெயரை மாற்றக் கூடாதோ?

"ஸோ வாட்... என் நிஜப்பெயரே சித்தாரா வைத்யாதான். நேமாலஜிஸ்டை கன்ஸல்ட் பண்ணி sithaara என்று டபுள் ஏ போட்டிருக்கேன்..!" என்று சொல்லும் சித்தாரா, 'ஏ'படங்களில் நடிக்க மாட்டாராம்.

"நான் பத்தாவது படிக்கும்போது நீதி சக்ரா' என்ற கன்னட மெகா சீரியலில் நடித்தேன். அதனால் 82 பர்ஸன்ட் தான் பரீட்சையில். இப்ப பி.காம் தபாலில் படிச்சிகிட்டிருக்கேன். டான்ஸ் ரொம்ப வருஷமா கத்துக்கறேன். அரங்கேற்றமும் ஆயாச்சு. என் அப்பா ஒரு பிஸினஸ் மேன். நான் ஆறாவது படிக்கும் போதே என் அம்மா இறந்து போயிட்டாங்க..." மெள்ள தம்மைப் பற்றி சொல்கிறார் சித்தாரா.

# சிலுசிலு காற்றே...

தற்சமயம் சித்தாரா அடிக்கடி படையெடுப்பது சென்னைக்கு. தமிழ் சினிமாவில் அறிமுகமாகிறார். (அப்படிப் போடு)

"முதல் ஆசை என்பது

படத்தின் பெயர். இயக்குநர் மதி. வினோத், சந்தோஷ் என இரண்டு புதுமுக ஹீரோக்கள். ஒரு ஜர்னலிஸ்ட்டாக நடிக்கிறேன். (நம் முகத்தில் குபீரென லைட்...) பாரதிராஜா ஸார் வீட்டில் தான் ஷூட்டிங். ஆனா அவரை இன்னும் பார்க்கவில்லை. (வேண்டாம்மா. ஏற்கெனவே ப்ரியா மணி பார்த்து, தற்சமயம் இமயமலையில் திரிவதாகக் கேள்வி) படம் அநேகமா தீபாவளி ரிலீஸாக இருக்கலாம். எங்க யூனிட்டே கலகல யூனிட்தான்... இதுக்கு மேல எதுவும் சொல்ல முடியாது..." மறுத்து விட்டது மோனலிஸா.

சித்தாராவின் ரோல் மாடல், திருமதி தீபக். இளைஞர்களை ஓரப் பார்வையாலே ஓங்கி அறைந்து விட்டு, தற்சமயம் தீபக் வீட்டில் + வாழ்வில் விளக்கேற்றியிருக்கும் சிம்ரன் தான் அந்த ரோல் மாடல். "நான் சிம்ரனுடைய பெரிய விசிறி. அவங்கள மாதிரி நடிச்சு பேர் வாங்கணும். யூ நோ சம்திங்... அவங்களுக்குக் குரல் கொடுக்கறவங்க தான் எனக்கும்..." (பாதி வெற்றி நிச்சயம்!) என்கிறார் ரசிகர்களுக்குத் தொல்லை தந்து, கூடவே வைத்தியமும் பார்க்கப் போகும் வைத்யா.

மூட்டை முடிச்சுடன் ரெடியாக பிருந்தாவனில் ஏறி, சென்னை சென்ட்ரலில் இறங்க துடித்துக் கொண்டிருக்கிறார் சித்தாரா. பல வருடங்களுக்கு முன்னால் கன்னடத்துப் பைங்கிளி சரோஜாதேவி விட்ட இடம் மூன்று தலைமுறைகளுக்குப் பிறகும் வெற்றிடமாகவே இருக்கிறதே...

- லதா சேகர்

# சித்தாரா!



# வாராய் நீ வாராய்!

சிட்டாடல் நிறுவனம் எடுத்த 'ஞான சௌந்தரி' படத்தின் ஆரம்பக் காட்சியில் இடம் பெறும் பாடல், ''அருள் தாரும் தேவ மாதாவே...''. படமும், பாடலும் சூப்பர் டூப்பர் ஹிட். அந்தப் பாடலைப் பாடிய ஜிக்கி என்கிற கிருஷ்ணவேணிக்கு முதல் பாடல் அது. ஒரே நாளில் பாபுலாரிடியின் உச்சத்தை எட்டிவிட்டார். பல்வேறு ஊர்களிலும் கிறிஸ்தவ அமைப்புகள் ஜிக்கியை வரவழைத்து, அந்தப் பாடலைப் பாட வைத்து மெய் மறந்தனர். அந்தக் காலத்தில் புழக்கத்திலிருந்த எல்.பி.ஜி. ரெக்கார்டு விற்பனையிலும் 'ஞான சௌந்தரி' சக்கைப் போடு போட்டது.

போன வருடம் நடிகர் எஸ்.எஸ்.சந்திரனின் மகன் திருமண வரவேற்பு; இசையமைப்பாளர் தேவாவின் மெல்லிசை நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது. மணமக்களை வாழ்த்த வந்தார் பாடகி ஜிக்கி. தேவா அவரிடம் 'ஒரு பாட்டு பாடறீங்களா?' என்று கேட்க, சந்தோஷமாய் சம்மதம் சொன்னார். கணீரென்ற குரலில் ஒன்றுக்கு இரண்டு பாட்டுகளாய் பாடி அசத்தினார்.

''அட! குரலில் கொஞ்சம்கூட மாற்றமில்லையே! பழைய குரல் அப்படியே இருக்கே!'' என்று ஆச்சரியப்பட்டார்கள் அனைவரும்.

'கல்யாணப் பரிசு' படத்தில் கணவர் ஏ.எம்.ராஜா இசையில், ஜிக்கி பாடிய 'துள்ளாத மனமும் துள்ளும்' பாடல் மிகப் பிரபலமானது. ராஜாவும், ஜிக்கியும் காதலித்துத் திருமணம் செய்து கொண்டவர்கள்.

'விடிவெள்ளி' படத்தின் ரீ ரிக்கார்டிங்கின்போது, மூடு அவுட் ஆகி, கோபமாகப் புறப்பட்டுப் போய் விட்டார் ஏ.எம். ராஜா. எங்கெங்கோ தேடிப் பார்த்தும் அவரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. நான், அவரது வீட்டுக்குப் போய் ஜிக்கியிடம் விசாரித்த போது, ரொம்ப யோசித்து கடைசியில், ''அநேகமாக சித்தூருக்குப் பக்கத்தில் உள்ள அவரது சொந்த கிராமத்துக்குத் தான் போயிருப்பார்'' என்றார். காரில் நாங்கள் புறப்பட்டு, அந்த கிராமத்துக்குப் போனோம். ராஜா அங்குதான் இருந்தார். சமாதானப்படுத்தி அழைத்துக் கொண்டு வந்தோம். அன்று ஜிக்கி மட்டும் சரியான தகவலைச் சொல்லாது போயிருந்தால் திண்டாடி இருப்போம்'' என்று நினைவு கூறுகிறார் சித்ராலயா கோபு.

கடைசிக் காலத்தில் கான்ஸரால் அவதிப்பட்டபோது, தமிழக முதல்வர் உதவியது குறிப்பிடத்தக்கது.

'மந்திரிகுமாரி' படத்தில் வரும் 'வாராய்... நீ... வாராய்...'' பாட்டு ஒன்று போதும்! ஜிக்கியின் பெயரை மறக்க முடியுமா என்ன?

- மௌலி



* வே.துரைமாணிக்கம்

* எஸ்.ரங்கநாதன்



# காப்பாற்றப்



* வி.ராஜாராம்

**கா**விரிப் பாசனம் என்பது பதினாறரை லட்சம் ஏக்கர். அதில் பொதுவாக குறுவை சாகுபடி நாலரை லட்சம் ஏக்கர், சம்பா சாகுபடி பன்னிரண்டு லட்சம் ஏக்கர். கடந்த மூன்று - நான்கு ஆண்டுகளாகவே குறுவை சாகுபடியானது, காவிரிப் பாசனப் பகுதிகள் முழுவதுமாக நிலத்தடி நீரை நம்பி மட்டுமே செய்யப்பட்டு வந்துள்ளது. பருவ காலங்களில் தொடர் மழைகளற்ற வறட்சி நிலையினால், காவிரி டெல்டாவில், நிலத்தடி நீர்ப் பாசனப் பகுதிகளின் சாகுபடியும் பெருமளவில் குறைந்து போய்விட்டது.

கடந்த முப்பது ஆண்டுகளில் படிப்படியாக குறுவை சாகுபடி நிலங்களின் பயன்பாட்டுப் பரப்பளவும் குறைந்து போய், தற்போது ஒன்றிலிருந்து ஒன்றரை லட்சம் ஏக்கர் அளவுக்கு வந்துவிட்டது. அதுவும் இந்த ஆண்டு காவிரி டெல்டாவில் குறுவை சாகுபடியானது, நிலத்தடி நீர்ப் பகுதிகளில் நாற்பதாயிரம் ஏக்கரில் மட்டுமே பயிரிடப்பட்டு உள்ளதாகச் சொல்லப்படுகிறது. அடுத்து இப்போதிருந்தே ஆரம்பக்கட்ட வேலைகளில் இறங்க வேண்டியது சம்பா சாகுபடிக்கு. தற்போது மேட்டூரில் தண்ணீர் தொண்ணூற்றி இரண்டு அடிக்கும் மேலே உயர்ந்து வந்துள்ள போதிலும், காவிரிப் பாசனப் பகுதிகளில் சம்பா சாகுபடியை முழுமை யாகக் காப்பாற்றிக் கொள்ள முடியுமா என்கிற கேள்வி எழுகிறது.



# படுமா சம்பா சாகுபடி?

தற்சமயம் மேட்டூர் அணைக்கு கபினி அணையிலிருந்து மட்டுமே தண்ணீர் வந்துள்ளது. கர்நாடகாவின் கிருஷ்ணராஜ சாகர் உட்பட, எந்த அணைகளில் இருந்தும், ஒரு சொட்டுத் தண்ணீர் கூட மேட்டூருக்குத் திறந்துவிடப்படவில்லை. இந்த நிலையில் கர்நாடகாவில் தென் மேற்குப் பருவ மழை இன்னும் கொஞ்சம் வலுத்துப் பெய்யத் துவங்கினாலே போதும். கபினி தவிர, ஏனைய அணைகளான ஹாரங்கி, ஹேமாவதி, கிருஷ்ண ராஜ சாகர் போன்ற அணைகளில் நிரம்பி வழிகின்ற தண்ணீர், தவிர்க்கவே முடியாத காரணங்களினால் மேட்டூர் அணைக்கு வந்தே தீர வேண்டிய கட்டாயச் சூழலும் இருக்கின்றது.

காவிரி டெல்டாவின் சம்பா சாகுபடிக்கான பன்னிரண்டு லட்சம் ஏக்கரானது, கடந்த பத்தாண்டுகளில் இரண்டு லட்சம் ஏக்கருக்கு மேல் குறைந்துவிட்டது. அவற்றிலும் யூகலிப்டஸ், சவுக்கு, தென்னை, வாழை, கரும்பு போன்ற வேறு பயிர்கள் பயிரிடப்பட்டுள்ளன. மீதமுள்ள பத்து லட்சம் ஏக்கரிலும், கடைமடைப் பகுதிகளில், இரண்டு லட்சம் ஏக்கருக்கு சம்பா சாகுபடி செய்ய முடியாத சூழ்நிலையே தற்போதும் தொடர்கிறது. தினசரி மேட்டூரிலிருந்து ஒரு வினாடிக்கு பதினைந்தாயிரம் கன அடி தண்ணீர், தொடர்ந்து முப்பது நாட்களுக்காவது திறந்து விடப்பட்டால் மட்டுமே, கடைமடைப் பகுதி வரை உள்ள காவிரி டெல்டா பகுதிகளில் சம்பா சாகுபடி முழுமையாக நடைபெறும். இதற்கு ஏது வழி?

ஆகஸ்ட் மாத இறுதிக்குள் நாற்று நட்டால்கூடப் போதும். தை மாத இறுதிக்குள் சம்பா சாகுபடி அறுவடைக்கு வந்து விடும். இந்த ஆண்டு எட்டு லட்சம் ஏக்கரில் சம்பா சாகுபடி ஆகும் என்கிற நம்பிக்கை, காவிரி டெல்டா விவசாயிகள் மத்தியில் இருக்கின்றது. அந்த நம்பிக்கை ஈடேறுமா என்பதனை அறிந்து கொள்ள, விவசாயிகள் சங்கத் தலைவர்களில் சிலரைச் சந்தித்தோம்.

“தமிழ்நாட்டின் காவிரிப் பாசனப் பகுதிக்கென குறுவை, சம்பா சாகுபடிகளுக்கு குறைந்தபட்சம் முன்னூற்றைம்பது டி.எம்.சி. தண்ணீர் தேவை. இந்த ஆண்டு குறுவை சாகுபடி தடைபட்டுப் போனதால், சம்பா சாகுபடியை நாம் உத்தரவாதப்படுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது. சம்பா சாகுபடிக்கு மட்டும் நமக்குக் குறைந்த பட்சமாக இருநூற்றைம்பது டி.எம்.சி. தண்ணீர் அவசியம் தேவைப்படுகிறது. இதில் ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் வடகிழக்குப் பருவ மழை தமிழகத்தில் சீராக இருந்தால், அதன் மூலமாக சுமார் நூறு டி.எம்.சி. தண்ணீர் காவிரிப் பாசனப் பகுதிகளுக்குக் கிடைக்க வாய்ப்புள்ளது. இதுபோக நூற்றைம்பது டி.எம்.சி. தண்ணீருக்கு மேட்டூர் அணையை மட்டுமே நம்பியுள்ளோம். தற்போது மேட்டூர் அணையின் பயனாகும் தண்ணீரின் இருப்பு, ஐம்பது டி.எம்.சி. பற்றாக்குறையான நூறு டி.எம்.சி. தண்ணீருக்கு நாம் கர்நாடக அணைகளையே எதிர்பார்த்துக் காத்திருக்க வேண்டியுள்ளது. தற்போது கர்நாடகாவில் நல்ல மழை பெய்து வருகிறது. முன் கூட்டியே அங்கு பதினாறு லட்சம் ஏக்கரில் சாகுபடிப் பணிகள் முடிந்து போய்விட்டன. அதனால் இந்தப் பருவத்தில் கர்நாடகாவுக்குத் தண்ணீர்த் தேவை இருக்காது. எனவே, தொடர்ந்து தமிழக விவசாயிகளுக்குத் தேவையான தண்ணீரை, நடுவர் மன்றத் தீர்ப்பின்படி மத்திய அரசும், மாநில அரசும் அவசரக் கால நடவடிக்கைகள் எடுத்துப் பெற்றுத் தர வேண்டும். அரசியல் விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற்பட்டு, இரு மாநில விவசாயிகளின் நலனைக் கருத்தில் கொண்டு, கர்நாடக அரசு காவிரி விஷயத்தில் செயல்பட வேண்டும்!” என்கிறார் தமிழ்நாடு விவசாயிகள் சங்கப் பொதுச் செயலாளர் வே. துரை மாணிக்கம்.

“மத்திய - மாநில அரசுகள் தங்களுக்குள் இணக்கமான சூழலை உருவாக்கி, காவிரி நடுவர் மன்றத் தீர்ப்பின்படி, அந்தந்த மாதங்களில் மேட்டூர் அணைக்கு உரிய அளவுத் தண்ணீரைப் பெற்றுத் தந்தாலே போதும். இந்த ஆண்டு சம்பா சாகுபடியை காவிரிப் பாசன விவசாயிகள் நிச்சயமாகக் காப்பாற்றிக் கொள்வார்கள்!” எனக் கூறுகிறார் காவிரி டெல்டா நீர்ப் பாசன விவசாயிகள் நலச் சங்கத்தின் செயல் தலைவர் மகாதானபுரம் வி. ராஜாராம்.

“நமக்கு செப்டம்பர் இருபது வரைக்கும் தென் மேற்குப் பருவ மழை நன்கு பெய்திட வாய்ப்புகள் இருக்கின்றன. கர்நாடக அணைகளிலிருந்து வெளியேற்றப்படும் உபரித் தண்ணீரானது, மேட்டூர் அணைக்கு வந்தே தீர வேண்டிய கட்டாயத்தில் இருக்கின்றது. எனவே, இந்த ஆண்டு காவிரி டெல்டா விவசாயிகள் சம்பா சாகுபடியை நிறைவாகவே செய்து முடித்து விடுவார்கள்!” எனச் சொல்கிறார் காவிரி நடுவர் மன்றம் அமையக் காரணமாக இருந்தவரும், காவிரி நீர்ப்பாசன விவசாயிகள் நல உரிமைப் பாதுகாப்புச் சங்கத்தின் செயலாளருமான மன்னார்குடி எஸ். ரங்கநாதன்.

கட்டுரை, படங்கள் :

**இருள்நீக்கியான்**

# சர்க்கரை இல்லை, நெய் இல்லை – சக்தியின் எல்லை!



## ஸ்யவன்விட் கிரான்யூல்ஸ்!

பைத்யநாத் ஸ்யவன்விட் உங்கள் உடலுக்கு பலத்தை உற்பத்தி செய்கிறது.

* பைத்யநாத் ஸ்யவன்விட் நெல்லிக்காய் மற்றும் மூலிகைகள் இணைந்த ஆற்றலினால் நோய் எதிர்ப்புச் சக்தியை பெருக்குகிறது.

* பைத்யநாத் ஸ்யவன்விட் தன்னிகரற்ற ஆரோக்கியக் கலவை முற்றிலும் சர்க்கரை மற்றும் நெய் கலக்கப்படாததாகும்.

* பைத்யநாத் ஸ்யவன்விட் மூலம் உங்களுக்குத் தினந்தோறும் ஏற்படும் இருமல், ஜலதோஷம் மற்றும் இது போன்ற நோய்களிலிருந்து முழுவதுமாகப் பாதுகாக்கிறது.




* பைத்யநாத் ஸ்யவன்விட் நீரிழிவு மற்றும் இரத்தக் கொதிப்பு பிரச்னை உள்ளவர்களுக்கு சக்தியைக் கொடுப்பதற்காகத் தகுந்த முறையில் தயாரிக்கப்பட்டதாகும். ஆரோக்கியத்தை நேசியுங்கள். பைத்யநாத் ஸ்யவன்விட் வாங்குங்கள்.

**FREE HOME DELIVERY IN CHENNAI**

*மேலும் விவரங்களுக்கும்,*
*இலவச வண்ணப் பிரசுரங்களுக்கும் தொடர்பு கொள்க:*




**Shree Baidyanath Ayurved Bhawan (Pvt.) Ltd., Patna**

**137, Choolai High Road, I Floor, Chennai - 600 112.**

**☎ : 26610800/26615600. E.mail: maan@eth.net**

**STOCKISTS:**

**Chennai :** Srinath Medical Agencies 25352799, 25359087 Roopam Distributors -25352661, Pushti Ayurvedics -24810329, Mahaveer Agencies- 24837740/3726647/48, Food World-52152124 to 28, Sri Chakravarthis - 24933484, Maan Pharmaceuticals - 26610800, Mahima Distributors- 26615600, Vivek Medical - 26651178 **Pondicherry:** G.K. Medical Agencies - (0413) 2220385 **Coimbatore:** Aruna Agencies - 0422 - 2391961, Viswanathan Indian Medical Stores - 0422-2238273/230041, Reliance Agencies - 0422 - 2382639, **Salem :** Viswanathan Indian Medical Stores - 0427-2332775, The City Medicals stores - 0427-2266088, **Rasipuram:** Gnanam Agencies- - 04287 - 320011, **Madurai:** Dhanalaxmi & Co-0452 - 25373839, Sri Rajpriya Agencies - 0452 - 2630495, **Tiruvannamalai:** Rahim Medical Agencies - 250189, (R) 236723, **Erode:** Shri Ramana Medical Agencies - 0424 - 2253421/2250390 **Kozhikode:** Malayalam Ayurvedics Pvt.Ltd- - 0495 - 2721919.

*"பைத்யநாத் சியவன் பிராஷ் ஸ்யவன்விட் எனக்கு மிகவும் பிடித்தமானது. ஏனென்றால்..." என்று பத்து வரிக்குள் ஒரு போஸ்டு கார்டில் எழுதி மேற்கண்ட விலாசத்திற்கு அனுப்பி வியக்கத்தக்க பரிசுகளை பெறுங்கள்.*





# புதிய சிம்ஃபொனி!

ஏற்கெனவே இசையமைத்த சிம்ஃபொனி இன்னும் வெளிவரவில்லை. ஆனால் மீண்டும் ஒரு சிம்ஃபொனியை வடித்துவிட்டார் இளையராஜா. இந்த முறை, திருவாசகத்துக்கு சிம்ஃபொனி வடிவம் கொடுத்திருக்கிறார். கடந்த ஜூலை முதல் தேதி தொடங்கி, பதினைந்தாம் தேதிவரை, ஹங்கேரியின் தலைநகர் புடாபெஸ்டில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது இந்த அறுபது நிமிட ஆக்கம்.

"படித்தாலே உருகவைக்கும் மணிவாசகப்பெருமானின் திருவாசகப் பாடல்களுக்கு, இசையால் உயர்வு செய்து, உலக அரங்கிற்கு எடுத்து செல்வதுதான் நோக்கம்" என்கிறார் இத்திட்டத்தின் ஒருங்கிணைப்பாளர், ஜெகத் காஸ்பர். ஹங்கேரியில் பதிவு செய்யப்பட்ட இசை, ஆகஸ்ட் பதினைந்து அன்று சென்னைக்கு வந்து விட்ட நிலையில் இனி மிச்சமிருப்பது பாடல் பதிவு மட்டும்தான்.

ஹங்கேரியில் இசைஞானியின் திருவாசக சிம்ஃபொனியை ஏற்பாடு செய்தவர், லாஸ்லோ கோவாஸ் என்ற புகழ்பெற்ற ஹங்கேரியின் பிறவி இசைக் கலைஞர். ஒலிப்பதிவு மற்றும் ஒலிக்கலவையை செய்திருப்பவர், ஆஸ்கர் உட்பட எட்டு கிராமி விருதுகளை, இசைக்காக அள்ளிய ரிச்சர்டு கிங். கேசட், சிடி வடிவில் இந்த சிம்ஃபொனியை இசை ரசிகர்கள் விரைவில் எதிர்பார்க்கலாம்.

- ஸ்ரீ

## பதினாறு குழந்தைகள் பலியுண்ட பரிதாபம்!

வரலாறு காணாத பாதுகாப்பு ஏற்பாடுகள் இவ்வாண்டு சுதந்திர தினத்துக்காக நாடெங்கும் செய்யப்பட்டதாகச் சொல்கிறார்கள். ஐம்பத்தேழு ஆண்டுக்கால சுயாட்சிக்குப் பிறகும் இத்தகைய பாதுகாப்புக்கு அவசியமிருக்கிறது என்பது, பெருமைக்குரிய விஷயமில்லை. எல்லை மாநிலங்களின் வழியே ஊடுருவி வரும் அந்நிய நாட்டு பயங்கரவாதிகளிடமிருந்து நாட்டைப் பாதுகாக்க வேண்டிய கட்டாயம் ஒரு புறம் என்றால், விடுதலை அமைப்புகள் எனப் பிரகடனப்படுத்திக் கொண்டு, உள்நாட்டுக் கலகங்கள், கலவரங்களுக்குக் காரணமாக அமைகிற வன்முறைக் கூட்டங்களிடமிருந்தும் நாட்டைக் காப்பாற்ற வேண்டிய அவல நிலை இன்னொரு புறம்.

இந்தச் சூழ்நிலையில், அஸ்ஸாம் மாநிலத்தில் சுதந்திர தினம் கொண்டாடக் கூடாது என, உல்ஃபா தீவிரவாத அமைப்பு தடை விதித்திருக்கிறது. அத்தடையை மீறி சுதந்திர தினம் கொண்டாட முற்பட்ட பள்ளிக் குழந்தைகள் பதினாறு பேர், அவ்வமைப்பின் குரூரமான கொலைச் சதிக்குப் பலியாகியிருக்கின்றனர். நாற்பது பேர் படுகாயம் அடைந்துள்ளனர்.

அஸ்ஸாம் அரசு, முக்கிய நகரங்களிலும், பொது இடங்களிலும் பாதுகாப்பைப் பலப்படுத்தியதேயொழிய, தேமாஜி என்கிற உள்ளடங்கிய மாவட்டத்தில் உல்ஃபா தாக்கும் என்று




# கல்கி



2004 ஆகஸ்ட் 29
தாரண ஆவணி 13
மலர் : 63
இதழ் : 5


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




எதிர்பார்க்கவில்லை. இந்த மாவட்டத்தின் பள்ளிச் சிறுவர்கள், உல்ஃபா வைத்த வெடிகுண்டால் சின்னாபின்னமாகிவிட்டனர்!

யுனைடட் லிபரேஷன் ஃப்ரன்ட் அஃப் அஸ்ஸாம் என்கிற பிரிவினைவாத அமைப்பு, அஸ்ஸாமில் கடந்த இருபது ஆண்டுகளுக்கும் முன்னர் தொடங்கப்பட்டது. முளை யிலேயே பிரச்னையைக் கிள்ளி எறியாமல், மத்திய அரசு (அடுத்தடுத்த மத்திய அரசுகள்) ராணுவத்தை அம்மாநிலத்தில் நிறுத்துவதன் மூலம், மக்களுக்குப் பாதுகாப்புத் தர முயன்றது.

ஒரு குறுகிய வரம்புக்குட்பட்ட காலத்துக்கு மட்டுமே ராணுவப் பாதுகாப்பு நற்பயன் அளிக்க முடியும். பிரச்னையின் காரணத்தைக் களைவதுதான் நிரந்தரத் தீர்வு. ஆனால், நமது மத்திய அரசுகள், அஸ்ஸாம், மணிப்பூர் போன்ற மாநிலங்களில் எழுந்துள்ள பிரிவினைவாதத்தின் மூல காரணத்தைப் புரிந்து கொண்டு, திறமையுடன் பேச்சு வார்த்தை நடத்தி, தீவிரவாத / பயங்கரவாத அமைப்புகளுக்கு முடிவுகட்டத் தவறி விட்டன. 'சுதந்திர தினம் கொண்டாடக் கூடாது' என்று அச்சுறுத்துகிற அளவுக்கு, ஓர் அமைப்பு இன்று வளர்ந்து நிற்கிறது!

எல்லைப் பிரதேச மாநிலங்கள் என்பதால், இங்குள்ள பிரிவினை அமைப்பினர், அண்டை நாடுகளுக்குள் புகுந்து கொண்டு அடைக்கலம் பெற்று வருகின்றனர். அஸ்ஸாமின் உல்ஃபா தீவிரவாதிகளுக்கு பங்களா தேஷ் புகலிடம் அளித்து வருகிறது.

உள்துறை அமைச்சகமும் அயலுறவுத் துறையும் இணைந்துதான் இந்த அக்கிர மத்தைத் தடுக்க முடியும்.

விரைவாகவும், விவேகமுடனும், சாணக்கியத்துடனும் செயல்படவேண்டிய அஸ்ஸாம் அரசோ, அந்தக் கடமையில் தவறிவிட்டு, மரணமடைந்த குழந்தைகளின் வீரத்தை மெச்சி விருது வழங்கப்போவதாகச் சொல்கிறது. தடையை மீறி சுதந்திர தினம்




கொண்டாட முன் வந்ததற்காக வீர விருது; உயிரை விட்டதற்காக ஐந்து லட்சம் ரூபாய் நஷ்ட ஈடு!

அரசின் இன்றையச் செயல்பாடு, காயம்பட்ட மனங்களுக்குத் தற்காலிகக் களிம்புதான். அடுத்த காயம் இதைக் காட்டிலும் கொடூரமாக இராது என்பதற்கு, எந்த உத்திரவாதமும் இல்லை.

உல்ஃபா தீவிரவாதிகளை அழைத்துப் பேசுவது; அவர்களுடைய நியாயமான கோரிக்கைகளை ஏற்பது; வேலைவாய்ப்புப் பெருக்கம், பொருளாதார முன்னேற்றம் ஆகியவற்றுக்கு வழிவகை செய்து, தீவிரவாதிகளை அவர்களுடைய வன்முறைப் போக்கிலிருந்து சராசரி வாழ்க்கைக்குத் திசை திருப்புவது, விட்டுக் கொடுக்க வேண்டியவற்றில் விட்டுக் கொடுத்து முன்னேறுவது, கட்டிக் காக்க வேண்டியவற்றைக் கட்டிக் காத்து இரும்புக் கரத்துடன் செயல்படுவது – இப்படி திட்டமிட்டச் செயல்பாடு இருந்தாலன்றி, அஸ்ஸாம் மாநிலத்தின் பிரச்னைகளுக்குத் தீர்வு பிறக்காது.

முதல்வர் தருண் கோகோய், இதற்கான முயற்சிகளை இனியேனும் தாமதமின்றித் தொடங்க வேண்டும். மத்திய அரசும் அவருக்குத் தோள் கொடுத்துத் துணை நிற்க வேண்டும்.

நேருக்கு நேர் யுத்தம் என்ற நிலையில்தான் ராணுவம் மட்டுமே உதவும். பயங்கரவாதத்தை வெற்றி கொள்ள, உளவுத்துறையின் திறமையும் அரசியல் விவேகமும் கூடுதல் தேவைகள்.

இன்றைய அஸ்ஸாம் மக்கள், பச்சிளம் குழந்தைகளைக் கொல்லத் துணிந்த உல்ஃபா தீவிரவாதிகளை வெறுக்கலாம்; ஆனால், இந்திய அரசின் கையாலாகாத போக்கு தொடருமானால், சக்தியற்ற போலீஸ்காரனை நம்புவதைவிட, சண்டைக்காரனிடம் சரணடைவதே மேல் என்ற முடிவுக்கு அம்மக்கள் வந்துவிடக் கூடும். ⊙

த்ரீ டேக்ஸ்

* மதுர - விஜய், ரக்ஷிதா

* ஆயுதம் - பிரசாந்த், சினேகா

# மச்சான் பேரு மதுர!

### டேக் - 1

**வி**ஜய் படங்களின் வெற்றியில் பெரும்பங்கு வகிப்பது, விறுவிறுப்பான பாடல்தான் என்பது அவரது செண்டிமெண்ட். "திருமலையில் ஒரு 'திம்சுகட்டை!' கில்லியில் ஒரு 'அப்படிப்போடு'! இப்போது 'மதுர' படத்தில் இடம் பெற்றிருக்கும் 'மச்சான் பேரு மதுர! நீ நின்னு பாரு எதிர!' என்ற பாடல் புழுதி கிளப்பப் போகிறது பாருங்கள்" என்று அடித்துச் சொல்பவர், விஜய்யேதான்.

### டேக் - 2

**தி**ரையுலகில் எப்படியாவது ஓர் அடையாளத்தைப் பெற்றுவிட வேண்டும் என்று காத்திருக்கும் பல ஆயிரம் இளைஞர்களில், கார்த்திக்கும் ஒருவர். நடிகை ரோகிணி, இயக்குனர் எஸ்.எஸ். ஸ்டேன்லி ஆகியோரிடம் உதவி இயக்குனராகப் பணிபுரிந்தவர். இயக்குனர் கனவுடன், தாம் தயார் செய்த கதையைத் தமது உயிர் நண்பர் ரிஷிகுமாரிடம் சொல்லியிருக்கிறார். அச்சக உரிமையாளராக இருக்கும் ரிஷி, கதையைக் கேட்டு அசந்துபோய், "இந்தக் கதை கண்டிப்பாக ஜெயிக்கும். நானே தயாரிக்கிறேன்" என்று சொல்ல, இயக்குனர், "இந்தக் கதைக்கு நீயே பொருத்தமாக இருப்பாய்" என்று சொல்லி அவரை ஹீரோவாக்கி விட்டார். பிரின்டிங் மெஷின்களைக் காதலித்துக் கொண்டிருந்தவர், இப்போது 'காத்திருப்பேன்' படத்துக்காகச் சுஜிதாவை காதலித்துக் கொண்டிருக்கிறார். ரசிகர்களைக் காக்க வைக்காமல் சீக்கிரம் வெளியிட்டால் தலை தப்பிவிடும் என்ற தந்திரம் தெரிந்து, படத்தை வேக வேகமாய் சுட்டுத் தள்ளுகிறது இந்தத் தன்னம்பிக்கைக் கூட்டணி!

* காத்திருப்பேன் - ரிஷி, சுஜிதா

### டேக் - 3

**ஷா**க் தந்த வெற்றியில், உறைந்து போய்விடாமல், பிரசாந்த் அடுத்து நடித்துக் கொண்டிருக்கும் படம் 'ஆயுதம்'. இதுவும் ஷாக் பாணியில் அமைந்த த்ரில்லர் என்று கேள்வி! ஆனால் ஆவிக்கு கெட் அவுட்!

- ரவுண்ட்ஸ் பாய்

# பேய் வீடு!

அந்த பிரமாண்டமான வீடு திடீரென்று செய்தியில் அடிபட்டது. அதில் பேய் நடமாட்டம் உள்ளது என்று பரபரப்பாக வதந்தி பரவிவிட்டது.

தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார் வீட்டின் சொந்தக்காரர் சுந்தர்லால். நாற்பது லட்சம் மதிப்புள்ள சொத்து. பாதிக்குப் பாதி போனால் கூட பரவாயில்லை. வீட்டை விற்றுவிட வேண்டும் என்று தீர்மானித்தார். ஒரு வருடமாய், யாருமே வராதபோது, இப்போது யாரோ படகுக் காரில் வருகிறார்களே என்று ஆவலுடன் எட்டிப் பார்த்தார்.

அசோக்கும், பீட்டரும் காரிலிருந்து இறங்க, அசோக் சொன்னான், ''இவர்தான் வீட்டு ஓனர்.''

அசோக் சுந்தர்லாலை, ஏற இறங்கப் பார்த்து, பீட்டரிடம் மெதுவாய், ''ஆளைப் பார்த்தால் பயமாய் இருக்கிறது. கால் முழுசாய் இருக்கிறதா என்று சந்தேகம்.'' என்றான்.

பீட்டர் ''உளராதே'' என்றான்.

''நல்ல வீடு. ஐம்பது லட்சம் கேள்.''

''ஸார், ஐம்பது லட்சம் என்றால் முடித்துவிடலாம்'' என்றவுடன், சுந்தர்லால் மகிழ்ச்சியில் ''முடித்து விடலாம்'' என்றார்.

அசோக், பீட்டரின் காதில் ரகசியமாக, ''முன்னூறு ஆண்டுகளுக்கு முன் நாம் ஓடிப் பிடித்து விளையாடிய இடம். கண்டிப்பாக நமக்கு இது வேண்டும்'' என்றான்.

ஜைகலாஷ்குமார்







போஸ்ட் கார்ட் கதை

# நாடகம் தந்த புரிதல்!

சி.அண்ணாமலை

நாடகம் என்றால் கிழாகப் பார்க்கும் ஒரு பார்வை தமிழர்களிடம் பொதுவாக உள்ளது. காரணம் நல்ல நாடகங்கள் பரவலாக நிகழ்த்தப்பட்டு, அனுபவம் பெறாத சூழலில் - அக்கலையின் சிறப்புகளை அறியாத சூழலில், இதுதான் கதி போலும்!

உலக அளவில் நாடகம் செய்த சாதனைகள் நிறைய உள்ளன. இன்றும் கலைகளில் சிறந்ததாகவும், பல்கலைகளின் கூட்டு என்றும் நாடக அரங்கைச் சொல்கிறார்கள். உண்மையும்கூட. இதை சமீபத்திய எனது சுவிட்சர்லாந்து பயணத்தின் போது நேரிடையாகக் கண்டேன்.

தமிழகத்தில் இரண்டாவது மூன்றாவதாய்ப் பார்க்கும் நாடகக் கலைக்கு, சுவிட்சர்லாந்தில் முதலிடம். பனி, நாட்டையே வெள்ளையாக்கி எல்லா இடங்களிலும் பூத்துக் கிடந்தாலும், குளிர் வைராக்கியமெடுத்தது மாதிரி வீசினாலும், நாடக அரங்கில் காலி சீட்களைப் பார்க்க முடியவில்லை.

'பல வருடங்கள் இல்லாத குளிரும், பனியும் இந்த ஆண்டுதான்' என்று சொல்லிக் கொண்டே வேலைகளைச் செய்கிறார்கள். குளிர் பற்றிய புலம்பலோ, பனி பற்றிய வேதனையோ இல்லாமல், நாடகங்களைப் புன்னகையுடன் பார்க்கிறார்கள்.

நாடகம் பார்வையாளருக்குத் தோழராக வேண்டும். 'நான் நடிக்கிறேன் நீ பார்' என்ற தோரணையற்றதாக இருக்க வேண்டும், பார்வையாளர்களை நாடகத்தில் பங்கேற்கச் செய்ய வேண்டும், புதிய உலகைக் காட்ட வேண்டும், பார்வையாளர்களின் எதிர்வினையை நேரடியாக வேண்டுவதாக இருக்க வேண்டும்... என்கிற நெருக்க வாய்ப்பாடுகள் கூடுதலாக உள்ளன. பார்த்துவிட்டு விரயப் பெருமூச்சு விடுவதோ, சிரித்துவிட்டு டிக்கெட்டைக் கிழித்துப் போடுவதோ காண முடியவில்லை.

நாடகம் புதுப்புது முயற்சிகளில் ஏறி Forum theatre, Invisible theatre Instant theatre, Business theatre என்று பல வழிகளில் பிரயாணம் செய்கிறது. சந்தித்த சில இயக்குநர்கள் நாடகக் கலையில் ஆழமான அறிவு பெற்றவர்களாக இருந்தார்கள்.

அந்த நாட்டில் நூற்றுக்கணக்கான நாடகக் குழுக்கள் தொடர்ந்து நாடகங்கள் போட்டே ஜீவிக்கின்றன. மக்கள் நாடகம் பார்ப்பது தங்கள் கடமை என்பதுபோல் பெருமையடிக்காமல், ரூபாய் ஐயாயிரம் வரை கொடுத்து டிக்கெட் வாங்குகிறார்கள். குறிப்பாக, இளைய சமுதாயத்தினர் நம்மூரில் வெளிநாட்டுக் குளிர்பானங்களை வாங்குகிற லாகவத்தில் டிக்கெட்டுகளை வாங்கி, நாடகத்தை வாழ வைக்கிறார்கள். நாடகங்களும் புது அனுபவமாய், சிந்தனையைத் தூண்டுவனவாய் உள்ளன.

1985ம் ஆண்டு நிறைய ஈழத் தமிழர்கள் சுவிஸ் நாட்டுக்கு வந்தபோது, அந்த நாட்டு மக்களுக்கு தமிழர்களைப் பற்றித் தெரியவில்லை. அதனால் அவர்களின் பார்வை வினோதமாய் மாறியிருந்தது. தமிழர்களுக்கோ பனி தொடங்கி மொழி



* சுவிஸ் நாடகக் கலைஞர் ஒட்டோ ஹுப்பர் மற்றும் தமிழ்க் கலைஞரான அன்ரன் பொன்ராசா

* சுவிட்சர்லாந்தில் அரங்கேறிய 'கடலம்மா' நாடகக் காட்சி



(டொய்ச்) ச்றாக, எல்லாமே புதிது. இந்நிலையில் சுவிஸ் நாடகர்கள், தமிழ் நாடகர்களுடன் இணைந்து நாடக உருவாக்கத்தில் மூழ்கினர்.

சுவிஸ் மக்கள், தமிழர்கள் பற்றி அறிய நாடகங்கள் மிகவும் உதவின. இதற்கு நாடகக் கலை, சுவிஸில் முதலிடம் பெற்றிருந்தது துணையாக அமைந்தது. பிறகு அந்நாட்டினர் தமிழர்களிடம் பழகத் தொடங்கினர். அகதி முகாம்களில் இருந்தவர்களை நம்பி, வேலை தர முன் வந்தனர். வேலை நன்றாகச் செய்ததால் மதிப்பு கிடைத்தது.

நம்பிக்கை பெற்றார்கள். இன்று சுவிஸ் நாட்டில் மதிப்புமிக்க வெளிநாட்டுச் சமூகம், தமிழ்ச் சமூகம் என்று சொல்லப்படுகிறது. காதல், திருமணம் போன்றவையும், தமிழ், சுவிஸ் சமூகங்களுக்கிடையில் பூத்திருக்கின்றன.

சுவிஸ் நாடகங்கள் போல் இன்று தமிழ் நாடகங்களும் முக்கியத்துவம் பெறத் துவங்கியுள்ளன. தமிழ் நாடகங்களில் சுவிஸ்காரர்களும் டொய்ச் நாடகங்களில் தமிழர்களும் பங்கேற்று, இனிய சூழலில் நட்பு வளர்க்கிறார்கள்.

இன்று சுவிஸ் மக்களின் வாழ்வில், நாடகம் பெற்றிருக்கும் இடம் முக்கியமானது. தமிழர்கள் சுவிஸ் நாட்டில் மிகச் சிறந்த நாடகங்களை உருவாக்குபவர்களாகவும் மாற வாய்ப்பிருக்கிறது.



அனைத்து ஏற்பாடுகளையும் பக்காவாக கோ-ஆர்டினேட் செய்து எனக்கு நல்ல பெயர் வாங்கித் தந்தார். இப்படி ஆயிரமாயிரம் கதைகளும் கவிதைகளும் வழங்கலாம் அவரைப் பற்றி. நம் இந்து சாஸ்திரப்படி இளமை, இல்லறம், முதுமை அனைத்தும் அனுபவிப்பவனே முழு மனிதன் ஆவான். ஆகவே இளைஞர்களே, கட்டாயம் திருமணம் செய்து கொண்டு மனைவியின் மகத்துவம் பெறுங்கள்!" சின்ன லெக்சரே அடித்து விட்டார்.

# அப்படியே ஒன்றிட்டாங்க!

'**ம**னைவி' ஷூட்டிங்கில் நிற்க நேரமில்லாமல் பரபரத்துக் கொண்டிருந்த விஜய் ஆதிராஜிடம், மனைவி புராணம் பாடச் சொன்னோம். "மண்ணில் இந்த மனைவியின்றி யாரும் வாழ்தல் கூடுமோ?" என்று உச்சஸ் தாயில் பாட ஆரம்பித்து விட்டார்.

"இப்பொழுது நாங்கள் கூட்டுக் குடும்பமாக வசித்தாலும் பீரோ சாவியிலிருந்து, சமையல் பொறுப்பு வரை என் அம்மாவிடமே விட்டு விட்டதால், மாமியார் மெச்சிய மருமகளாகி விட்டார் என் மனைவி ரஷ்ணா. ஏற்கெனவே 'தாஜ்' ஓட்டலில் மேலாளராகப் பணிபுரிந்ததால் ஜேம்ஸ் வசந்தன், உமா பத்மநாபன் மற்றும் நண்பர்களின் குடும்பங்கள் அனைத்தும் மில்லினிய கொண்டாட்டத்திற்காக கோவா போனபோது,

## "காலில் விழலையே!"

"**வெ**ங்கட்'ங்கிற இவரோட ஒரிஜினல் பெயரே மறந்து போச்சு. எங்க அப்பா - அம்மாவே 'போஸ்'னுதான் கூப்பிடறாங்க." போஸின் காதல் மனைவி சோனியா சிரிக்கிறார்.

"கல்யாணத்தின் போது இவர் மெட்டி போடுவாரு. நல்லா காலுல விழ வைக்கலாம்னு எதிர்பார்ப்போட இருந்தேன். ஆனா இவர் நாயுடு இனத்தை சேர்ந்தவர்ங்கிறதால, இவரோட அக்கா கணவர்தான் முறைப்படி மெட்டி போட்டாங்க" என்று ஆரம்பித்தார் சோனியா.

"அதிசயமா என் பொண்டாட்டிக்கு மட்டும் மெட்டி நகைகள் மேல தான் ஆசை. இது வரைக்கும் பத்து



மாறிவிட்டார்.

"சிம்பிள் ஐடியா! கோனில் பொங்கி வழியும் ஐஸ்கிரீமை



'ரஷ்ணா' ப்ரியன்.

ம்... சாருக்கு வீட்ல செமத்தியான கவனிப்புதான் போல!

## ஐஸ்... பேபி

'சின்ன பாப்பா பெரிய பாப்பா'வில் பெரிய பாப்பாவாக நடித்த பல்லவி மேனனிடம் ''எப்பொழுதெல்லாம் 'சின்ன பாப்பா'வாய் மாறி விடுவீர்கள்?'' என்றோம். ப்ரீகேஜி பாப்பாவாகவே என் கண்ணில் காட்டுங்கள். நான் க்ளீன் போல்டு. புதுத் துணி, பொம்மையெல்லாம் கண்டால் சின்னப்



மெட்டிகள் வாங்கிக் கொடுத்திருக்கேன்னா பார்த்துக்குங்களேன். ஒரே விரலில் நாலு ஐந்து மெட்டியெல்லாம் போடுவாங்க. அதுல சலங்கை பொருத்தியதால, வீட்டுலே 'சல்சல்'னு மெட்டி ஒலி எப்பவும் கேட்டுட்டே இருக்கும்" என்றார் போஸ். இவர் வீட்டில், இப்போது தொட்டில் ஒலியும் புதுசாகக் கேட்கிறது. குழந்தை பெயர் தேஜஸ்.



## சின்னத்திரை டால்ஃபின்

'எதிர்நீச்சல்' திவ்யதர்ஷினியைச் சந்தித்தோம். ''சார், எனக்கு தண்ணில கண்டம் இல்லையாம். எதுக்கு அனாவசியம்னு நீச்சலே கத்துக்கலை. அதே போல எதிர் நீச்சல் போடற அளவுக்கு வாழ்க்கையில எதிலும் கஷ்டமும் பட்டதில்லையே'' என்று யோசிக்க ஆரம்பித்தவரைப் பார்த்து, 'அட, இப்படியொரு அதிசயப் பிறப்பா?' என்று எண்ணுவதற்குள், நல்ல வேளை, கடவுள் இவருக்கும் கொஞ்சம் கஷ்டம் கொடுத்திருக்கிறார்.

''அப்பா தமிழ் - தஞ்சாவூர்க்காரர். அம்மா - மலையாளி. சமீபத்துல அப்பா திடீர்னு இறந்ததால, அவருடைய சொத்துக்களை அபகரிக்க சில உறவினர்கள் திட்டம் போட்டிருக்காங்க. ஆண் துணை இல்லாத பிரச்னையில் முன்நின்று போராடிட்டிருக்கேன்'' என்று சீரியஸ் மூடில் இருந்தவர், 'பளிச்' ஆனார். ''அக்கா பிரியதர்ஷினி பையன் ரிஷி இருக்கானே, அவன் பண்ற வால்தனம் தாங்கவே முடியலைங்க. நான் தான் அவனுக்கு இளிச்சவாய், ஹைய்யோ, இவன்கிட்ட போராடறதுதான் பெரிய எதிர்நீச்சல்'' என்று சொன்னார் லேடி குற்றாலீஸ்வரனாக!



## கோலாகலமான பேட்டி!

''டிசைனோ, சுழியோ எந்த கோலமானாலும் அழகா போட்டு அசத்திடுவேன். கோல ஸ்டிக்கர் ஒட்டற வேலையே பிடிக்காது. யார்கிட்டேயாவது ஃபோனிலே பேசிக்கிட்டிருந்தா கூட, கை பாட்டுக்கு தானா ஏதாவது கோலம் போட்டுக்கிட்டிருக்கும்.'' இப்படியெல்லாம் கோலாகலமாகப் பேட்டி தர ஆசைதான்! ஆனால் என்னங்க பண்றது... சுமாராதான் கோலம் போடுவேன்" என்று உண்மையை ஒப்புக் கொண்டார் கோல விழியாள் தீபா வெங்கட்.

➡ பிள்ளைகளின் கண்களெல்லாம் விரியுமே, அப்படித் தாங்க நானும். இதோ இந்த ட்ரெஸ் கூட புதுசு தான். அப்புறம், வேர்த்து வழிய ஷூட்டிங்கிற்கு கிளம்பிப் போனா, அங்கே டைரக்டர் இன்னைக்கு ஷூட்டிங் கேன்சல்மான்னு சொல்லும் போது கிளம்பும் பாருங்க ஒரு சந்தோஷம், ஐய்யோ, அதுக்கு ஈடு இணையே கிடையாது. நேரா வீட்டுக்கு வந்து பச்சைக் குழந்தை மாதிரி தூங்கிட்டே இருப்பேன்'' என்றெல்லாம் பேசி பல்லவியாக மாறியவர், நம்மை ''நிருபர் அங்கிள்'' என்று மழலைக் குரலில் கூப்பிடுவதற்கு முன், லாலிபாப் ஒன்றைக் கையில் கொடுத்து விட்டுக் கிளம்பினோம்.

- கண்

# "சினிமாவில் சூழ்ச்சியும் தெரியணும்!"

சூறாவளியாகக் கிளம்பி புஸ்வாண மாகிவிட்ட பாலியல் பலாத்காரக் குற்றச் சாட்டு ஏற்படுத்திய மன உளைச்சலி லிருந்து விடுபட்டு ரிலாக்ஸாக இருந் தார் சேரன்.

''உங்களை விட எங்களுக்கு உங்கள் மீது நம்பிக்கையிருக்கிறது. உங்கள் வளர்ச்சியைப் பொறுத்துக் கொள்ள முடியாதவர்களின் சூழ்ச்சி இது. நாங்கள் இருக்கிறோம்.''

இதே போன்ற ஆறுதல் தொனியில் எழுதப்பட்ட நூற்றுக்கணக்கான ரசிகர் கடிதங்களை நம்மிடம் காட்டிய சேரன், ''ரசிகர்களின் இந்த நம்பிக்கைதான் என்னை பின்நோக்கித் திரும்பாமல் நடை போட வைக்கிறது'' என்று நிமிர்ந்து உட்கார்ந்து, கேள்விகளை எதிர்கொண்டார்.

*வெள்ளி விழா நாயகன் என்ற கிரீடம் கிடைத்திருக்கிறது. ரசிகர்கள் உங்களை இப்போது பார்ப்பதற்கும், முன்பு இயக்குனராக மட்டும் பார்த்த தற்கும், கண்ணோட்டம் மாறி இருக் கிறதா?*

சேரன் என்பவன், அறிவுபூர்வமாக வும், வழிகாட்டியாகவும் இருக்கக் கூடிய படங்களை உருவாக்கும் இயக்குனர் என்ற பார்வை, மாணவ, மாணவிகள் மத்தியில் இருக்கிறது. சேரன் படமா, குடும்பத்தோடு போய்ப் பார்க்கலாம் என்ற அபிமானம் ரசிகர்களிடம் இருக் கிறது. சாதாரண மக்கள் மத்தியில், நான் பிரபலமாகியிருக்கிறேன். இவர்கள் என்னை ஹீரோவாகப் பார்க்கவில்லை. இவனது கதாபாத்திரம், நாம் வாழ்ந்த வாழ்க்கையை, அனுபவித்த வலியை, சந்தித்த வெற்றி தோல்விகளை அனு பவிக்கிறது என்று அவர்கள் நினைக் கிறார்கள். இதனால் தம்மையும் அறியாமல் என் மீது ஒரு சகோதர பாசம் வந்து விடுகிறது. அந்தப் பாசம் நிஜமானது என்று நம்புகிறேன்.

ஹீரோவானவுடன் எனக் கொரு வட்டமிருக்கு. கூட்டமிருக்கு என்று சொல்வதில் எனக்கு விருப்பமில்லை. என் னைச் சுற்றி ஒளிவட்டம் இருப்பது போன்ற கற்பனையில் நான் வாழ விரும்பவில்லை.

*ஒரு படம் பெரிய வெற்றியைத் தொட்டுவிட்டால் அதில் நடித்த நடி கருக்கு புற்றீசல் போல ரசிகர் மன்றங் கள் தொடங்கப்படும். சேரனுக்கு எப்படி?*

இதே நோக்கத்தோடு, தமிழகம் முழுவதுமிருந்து கொத்துக் கொத்தாக கிளம்பி வருகிறார்கள். ரசிகர் மன்றத் தால், உங்கள் சொந்த வாழ்க்கைக்கு என்ன பயன் என்று கேட்கிறேன். முதலில் உங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொண்டு தன்னிறைவு பெறுங் கள், தகுதிகளை உயர்த்திக் கொள்ளுங் கள். அதன் பிறகு வாருங்கள். மக்களுக்கு நம்மால் முடிந்த விழிப்புணர்வைத் தருவோம். இதற்கு உங்களது பெற் றோரின் அனுமதியும், கையொப்பமும் வேண்டும் என்று சொல்லி அனுப்பி விடுகிறேன். ஏற்கெனவே ஓரளவு படித்த வர்கள், தங்கள் பகுதியின் மக்கள் பிரச்னைகளை நன்கு அறிந்தவர்கள், இவர்கள் குரல் கொடுத்தால் அங்குள்ள அதிகாரிகள் காது கொடுத்துக் கேட்பார் கள் என்றால், அவர்களைச் 'சேரன் மக்கள் விழிப்புணர்வு இயக்கத்தில்' செயல்பட அனுமதிக்கிறோம். அறிவு பூர்வமாகப் போராட எனக்கு ஆயிரம் பேர் இருந்தால் போதும். கூட்டம் சேர்க் கவும், பேனர் கட்டவும் எனக்கு ரசிகர் மன்றம் வேண்டாம்.

ரசிகர் மன்றத்தால் ஆட்டோகிராஃப் ஓடவில்லை. நல்ல கதை என்பதால் ஓடியது. ஒரு படத்துக்கு ஓபனிங் கூட்டத்தை செயற்கையாக உருவாக்க ரசிகர் மன்றத்தைப் பயன்படுத்துபவர்

# சேரன் குமுறல்

களுக்கு, தங்கள் படத்தின் மீது நம்பிக்கையில்லை என்று அர்த்தம். இது இன்றைய காலகட்டத்துக்கு கைகொடுக்காது.

**ஆனால், உங்களிடம் ஆட்டோகிராஃப் கேட்டு மொய்த்த ரசிகர்களுக்கிடையில் தள்ளு முள்ளு, காயம் என்று செய்தி வந்ததே?**

என்னிடம் ஆட்டோ கிராஃப் கேட்டு சிலர் முண்டியடித்தார்கள். ''இதற்காக இப்படி மொய்க்க வேண்டும் என்ற அவசியமே கிடையாது. இதை வாங்கிக் கொண்டு போவதால் உங்களுக்கு எந்த நன்மையும் கிடை



யாது. ஆட்டோகிராஃப்பை ஒரு நினைவாக வைத்திருக்கலாம், அவ்வளவுதான். அதை ஒழுக்கமாக நின்று வாங்கினால் என்ன?" என்று கேட்டதும், வரிசையில் நின்று வாங்கினார்கள். நானும் ஒவ்வொருவருடனும் ஒன்றிரண்டு வார்த்தைகள் பேசி, பெயர் கேட்டு, ஆத்மார்த்தமாக ஆட்டோகிராஃப் போட்டேன். நாம் சொல்வதில் உள்ள நேர்மையைப் புரிந்து கட்டுப்படுகிறார்கள். இந்த ரசிகனை தவறாகப் பயன்படுத்தக் கூடாது.

***ஆட்டோகிராஃப் வெற்றிக்குப் பிறகு ஒரு நடிகராகவும் உங்களைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறீர்கள். நடிகர் சேரனுக்காக சமரசம் செய்வீர்களா?***

வாய்ப்பே இல்லை. நடிகர் சேரனுக்காக தனி பக்கபலமோ, பந்தாவோ கிடையாது. கதை நன்றாக இருந்து, கதாபாத்திரம் சிறப்பாக அமைந்தால், நடிகர் சேரன் ஜெயிக்க முடியும். கதாநாயகனை மட்டும் வைத்து பதினான்கு ரீல்கள் எடுக்க முடியாது. நடிகர் சேரன் கூண்டுக்குள் போட்ட புலி. இயக்குனர் சேரன்தான் என்றைக்கும் ரிங் மாஸ்டர். இறுதி வரை நல்ல சினிமா எடுப்பதுதான் எனது பாதை. அதே நேரம், நானே தொடர்ந்து நடிப்பேன் என்று சொல்ல முடியாது. இயக்குனர் சேரனின் கதைக்குப் பொருத்தமாக இல்லாவிட்டால், வேறு பொருத்தமான நடிகரை நடிக்க வைப்பதுதான் சரி.

***ஆனால் உங்களைப் போட்டியாக நினைப்பவர்கள் உங்களுக்கு எதிராக எப்படி வேண்டுமானாலும் காய்களை நகர்த்தலாம் இல்லையா?***

நகர்த்துவார்கள்தான். அதை நாம் சமாளித்துத்தான் ஆகவேண்டும். இங்கே நல்லவனாக மட்டும் இருந்தால் போதாது. புத்திசாலியாகவும் இருக்க வேண்டும். அடுத்தவன் செய்யும் சூழ்ச்சியைத் தெரிந்து கொண்டு, திறமையாகப் போராடத் தெரிந்திருக்க வேண்டும். நான் நல்லவன், தர்மம் தலைகாக்கும் என்று வீட்டுக்குள்ளேயே உட்கார்ந்திருந்தால் ஒன்றும் நடக்காது.

***டூரிங் டாக்கீஸ், பொக்கிஷம் என்று உங்களின் அடுத்த திரைப்பட முயற்சிகளின் தலைப்புக்களே எதையோ சொல்ல வருகின்றனவே?***

எனது அப்பா பல டூரிங் டாக்கீஸ்களில் சினிமா ஆபரேட்டராக வேலை பார்த்தவர். எனக்கும் டூரிங் டாக்கீஸ் என்பது மாறுபட்ட பல அனுபவங்களைக் கொடுத்திருக்கிறது. டூரிங் டாக்கீஸ்களில் நான் நிறைய கற்றுக் கொண்டிருக்கிறேன். அதை திரைப் படத்தில் கொண்டு வரும் முயற்சிதான் 'டூரிங் டாக்கீஸ்' படம். இந்த கதைக்கும் என்னைப் போன்ற ஒரு சராசரி முகம்தான் பொருந்தும் என்பதால், நானே நடிக்கிறேன்.

பொக்கிஷத்தைப் பொறுத்த வரை, நாம் வாழ்க்கையில் எவற்றை பொக்கிஷமாக நினைக்கிறோம்; ஒரு சில விஷயங்களைத்தானே? அப்படி ஒரு மனிதன் தன் வாழ்நாளில் சேகரித்த ஒரு சில விஷயங்கள்தான் பொக்கிஷம். இந்த இரண்டு படங்களுமே வெவ்வேறு களங்களில், வெவ்வேறு மனிதர்களின் வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டப் போகின்றன.

சந்திப்பு: **ஜெயந்தன்**



''எதுக்கு கமலா இன்னிக்கு துக்கம் அனுஷ்டிக்கிறே?''

''மறந்துட்டீங்களா? போன வருஷம் இதே நாள்லதானே 'அவர்கள்' சீரியல்ல அவர்ணா இறந்து போனா!''

- வசந்தி வள்ளுவன்

**108 பசுக்களை பாதுகாத்து பராமரிக்கப்படும் பசுமடத்தில் மஹாளய அமாவாசை நாளில் கோபூஜை செய்து பித்ருக்களின் ஆசி பெற அன்புடன் அழைக்கிறோம்!**




தங்கள் முன்னோர்களின் ஆசி பெற்றிட

பசுமடத்திற்கு கோதானம் செய்வீர்!

- வயது முதிர்ந்த, பால் வற்றிய, ஊனமுற்ற, நோயுற்ற பசுக்களைப் பாதுகாக்க, உங்கள் அன்பு காணிக்கையை கனிவுடன் மனமுவந்து தாரீர்!
- கோமாதாவிற்கு உணவு வைப்பதால் லக்ஷ்மி நம் இல்லத்தில் என்றும் குடியிருப்பாள். செல்வம் செழித்திருக்கும், சுபகாரியங்கள் நடைபெறும்.
- நமது முன்னோர்களுக்கு உணவு அளிக்க விரும்பினால் பசுவிற்கு கொடுத்தால் போதும் அது நம் முன்னோர்களுக்கு சென்று அடையும்.
- ஆயிரம் தோஷம் நீங்கி, முன்னோர்களின் அருளாசி பெற பசுக்களை போற்றி பரந்தாமனின் அருளைப்பெறுவோம்!
- முப்பத்து முக்கோடி தேவர்களும், அனைத்து புண்ணிய தீர்த்தங்களும் குடிகொண்டுள்ள பசுவிற்கு பூஜை செய்வதால் இறைவன் நமக்கு வேண்டிய வரங்களைத் தருவார்
- அன்பர்கள் தங்களுடைய திருமண நாள், பிறந்த நாள், பண்டிகை நாட்கள் முன்னோர்கள் திதி நாட்கள், அன்பிற்குரியவர்களின் நினைவு நாள் என தங்களுக்கு உகந்த நாட்களில் கோ பூஜை கோதானம் செய்து பசுக்களின் பராமரிப்பிற்கு நன்கொடை அளித்து லக்ஷ்மி தேவியின் ஸ்வரூபமான ஸ்ரீ கோமாதாவின் பூஜையால் சகல நன்மைகளையும் பெறலாம்.



பசுமடத்தில் 108 பசுக்களுக்கு நடைபெறும் கோ பூஜையில் அன்பர்கள்...

**பசு மடத்தில் உள்ள 108 பசுக்களில் ஒரு பசுவை பராமரிக்க**

**ஒரு நாளுக்கு..........ரூ: 15.00**

**ஒரு வாரத்திற்கு.......ரூ: 105.00**

**ஒரு மாதத்திற்கு.......ரூ: 465.00**

**ஒரு வருடத்திற்கு....ரூ: 5400.00**

**தேவைப்படுகிறது**

பசுக்களைப் பாதுகாக்க தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

- ரூ. 500- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் மூன்று மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5400- அனுப்பும் அன்பர்களுக்கு, வருடத்திற்கு ஒரு முறை ஐந்து ஆண்டுகளுக்கு யாருக்கு திதி செய்ய விரும்புகிறீர்களோ, அவர்களுக்கு திதி நாளில் 108 பசுக்களுக்கு கோபூஜை செய்யப்பட்டு பசுவும் கன்றும் சேர்ந்த விக்ரகமும், ஆன்மீகம் மாத இதழ் ஐந்து வருடங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

108 பசுக்களை பாதுகாக்கும் திருப்பணியில் பங்குகொள்ளும் அன்பர்கள் விரும்பும் நாட்களில் கோ பூஜை செய்து பிரசாதம் அனுப்பிவைக்கப்படும். அன்றாடம் நடைபெறும் கோ பூஜையில் அன்பர்கள் கலந்துகொள்ளலாம்.



நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.

தங்களால் இயன்ற தொகை நன்கொடையை Cheque / D.D / M.O. மூலமாக Shri Ghosala Seva Trust, Chennai. என்ற பெயரில் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி உதவுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

# பசு மடம்

**(Recognised by Animal Welfare Board of India)**

**பசுக்கள் பாதுகாப்பு இல்லம்**


பெருமாளகரம், திருவேற்காடு (P.O), சென்னை - 600 077.

Ph : 2495 9302, 2461 7378. Fax : 044-5206 6525. E-mail : siva siva@vsnl.net.




108 பசுக்களை பாதுகாத்து பராமரிக்கப்படும் பசுமடத்திற்கு நன்கொடை அளித்து திருக்கயிலை நாதனை தரிசனம் செய்த புண்ணிய பலனையும், முப்பத்து முக்கோடி தேவர்களின் அருளாசியுடன் பித்ருக்களின் ஆசியையும் பெறலாம்!

சத்தியப்ரியன்

17

முத்தையா செட்டியார் பெரிய புள்ளி. அவருடைய மணிவிழா பிருமாண்டமாக நடந்து கொண்டிருந்தது. அவரது மூன்று மகன்களும், இரண்டு மகள்களும், வருபவர்களை எல்லாம் வாடாத புன்னகையுடனும் மாறாத அன்புடனும் வரவேற்ற வண்ணமிருந்தார்கள்.

ஹோமங்கள் ஒருபுறம் வேத விற்பன்னர்களை வைத்து நிகழ்ந்து கொண்டிருந்தன. அமிர்தமிருத்யுஞ்ஜேச்வரனுக்கும், அமிர்தகடேசுவரருக்கும் சிறப்பு ஹோமங்கள். முதல் நாளிலிருந்தே சங்கல்பத்துடன் தொடங்கிய மணிவிழா கணபதி ஹோமம், நவக்ரஹ ஹோமம், தீப லெட்சுமி பூஜை, ஹோமம், ஜெபம் செய்யும் அந்தணரை வேண்டி வரித்துக் கொள்ளும் ஆசாரிய வர்ணம், யாகாரம்பம், பூர்ணாஹுதியுடன் முடிந்து, இதோ இன்று விடியற்காலை ஐந்து மணியிலிருந்து மீண்டும் சங்கல்பத்துடன் மணிவிழா நடந்து கொண்டிருந்தது.

முத்தையா செட்டியாரின் இரண்டாவது மகனும், மருமகளும் அருணாசலத்தின் வீடு தேடி பத்திரிகை கொடுக்க வந்திருந்தார்கள்.

"பழனியில தாமரையையும், அவுக அண்ணனையும் பார்த்திருக்காகளாம். ரொம்பப் பிடிச்சுப் போயிருச்சாம். வாய் ஓயாம தாமரையைப் பத்தியும், கதிரேசனைப் பத்தியும் பேசிக்கிட்டே இருக்காக. அவசியம் வரணும். கடைக்குப் போகணும்னு சாக்கு சொல்லிரக்

கூடாதுன்னுதான், அதிட்டவசமா அவுக நட்சத்திரமே ஞாயித்துக்கிளமையா வருது" என்றார்கள். உபசரிப்பில்தான் எவ்வளவு அன்பு!

அவர்கள் போன கையோடு முத்தையா செட்டியாரிடமிருந்து தொலைபேசி அழைப்பும் வந்தது.

"யாரு தாமரையா? ரெண்டுபேரும் அமுக்கு மாதிரி இருந்து காதல் பண்ணிட்டு, காலம் கனியும் வரை காத்திருந்து, சரியான ஆளுங்கதான். மறக்காம மணிவிளாவுக்கு வந்திரு. கதிரேசன் வீட்டுக்கும் பத்திரிகை போகுது. மணிவிழாவோட சிறப்பு என்ன தெரியுமா? வேற ஒரு ஜோடிக்குக் கலியாணம் பண்ணி வைக்கிறதுதான். அது ஏன் நீங்க ரெண்டு பேரா இருக்கக் கூடாது?" என்றார்.

தாமரையின் முகம் சிவந்து பதில் பேச முடியாமல் போனது.

# வலம்புரி முத்து



**தா**மரை அலைபாய்ந்து கொண்டிருந்தாள். இனிமேல் யாரைப் பற்றியும் கவலை இல்லை. அவள் சிந்தனைப்படி நிச்சயதார்த்தத்தின் பொழுது, தாம்பூலத் தட்டு மாற்றிக் கொள்வது மட்டும்தான் முடிவாய் நிகழ வேண்டியது. வளவில் தெய்வானை ஆச்சி வீட்டில் வாக்கப்பட்டு போனாலும், சும்மா திரியும் நேரங்களில் டெலிவிஷன் பார்ப்பது, ஊர்வம்பு பேசுவது, உப்புக் கண்டம் போடுவது, ஊறுகாய் போடுவது என்றில்லாமல் எம்.சி.ஏ. முடிக்க வேண்டும். அழகப்பா பல்கலைக்கழகத்திலும் விதவிதமான கம்ப்யூட்டர் படிப்புகள் வந்திருப்பதாக தேனப்பன் சார் சொல்கிறார். பழைய மாணவி என்ற அபிமானம் அவர்களுக்கு இருக்கும் பொழுதே கதிரேசன், தெய்வானை ஆச்சியின் அனுமதியுடன் மேல் படிப்பையும் முடிக்க வேண்டும். அதற்கு தெய்வானை, ஆச்சியும், கதிரேசனும் சம்மதிப்பார்களா?

"தாமரை!" அண்ணி சிதை அவளை உலுப்பினாள்.

"என்ன?"

"ஹோமகுண்டத்திலிருந்து முத்

தையா செட்டியார் ஒன்னக் கூப்பிடுறாரு பாரு" என்றாள்.

எல்லார் மத்தியிலும் தன்னை மட்டும் தனியாக அழைத்தது அவளுக்குச் சங்கடமாக இருந்தது.

கணேச பஞ்சரத்னம், விஷ்ணு சகஸ்ர நாம பாராயணம், லக்ஷ்மி அஷ்டோத்ரம் என ஒன்றாகச் சேர்ந்து ஜபித்துக் கொண்டிருந்தனர். ஆயுஷ் ஹோமம் நடந்து கொண்டிருந்தது.

மூன்று வேதிகைகள் அமைத்து மூன்றிலும் மொத்தம் இருபத்தியெட்டு குடங்களில் திருமஞ்சனத் தீர்த்தம் நிரப்பப்பட்டிருந்தது. அழகான கோலங்கள் போடப்பட்டு, தானியங்கள் பரப்பப்பட்டிருந்தன. தெற்குப் பக்க வேதிகையில் பதினொரு குடங்கள். நவக்கிரகத்திற்கு ஒன்பது, ராசி தேவதை, காலாதி தேவதைகளுக்கு தலா ஒன்று என மொத்தம் பதினொரு குடங்கள். நடுவேதிகையில் பதினைந்து குடங்கள். வடக்குப் பக்க வேதிகையில் பிரபவ முதல் அட்சய வரை உள்ள அறுபது ஆண்டுகளான சஷ்டிதேவிக்கு ஒரு குடமும் அஸ்வதி முதல் ரேவதி வரை உள்ள இருபத்தியேழு நட்சத்திரங்களுக்கு ஒரு குடமும், மொத்தம் இரண்டு குடங்கள். மொத்தம் இருபத்தியெட்டுக் குடங்களும் வெள்ளியில் மின்னிக் கொண்டிருந்தன. பூக்களின் மணமும், சந்தன மணமும், ஊதுபத்தி, சாம்பிராணி, கூடம் மணமுமாய் அந்த இடம் மணத்து வழிந்தது. மல்லிகை, முல்லை, பிச்சி, தாழம்பூ, தாமரை, அரளி, சாமந்தி, சம்பங்கி, பாரிஜாதம், நந்தியாவட்டை, ரோஜா என பல மலர்களும், எல்லா இடங்களிலும் குவியலாகவும், மாலையாகவும், உதிரியாகவும் காணப்பட்டன. ஹோம குண்டங்களிலிருந்து கிளம்பும் புகையானது, மெல்லிய படலமாய் அந்த அறை முழுவதும் பரவியிருந்தது.




முத்தையா செட்டியார் நல்ல வெண்ணிறப்பட்டு வேட்டி தரித்திருந்தார். மேனியெல்லாம் வெண்ணிறத் திருநீறு; சந்தனம். நெற்றியில் பட்டை பட்டையாக விபூதி, சந்தனம், குங்குமம். முத்தையா செட்டியாரின் மனைவி மங்கையர்க்கரசி ஆச்சி பட்டுப் புடைவை உடுத்தி, நகைகளை வாரிச் சொரிந்து கொண்டு, மஞ்சள் மினுங்கும் முகத்தில், செட்டியாருடன் வாழ்ந்த நாற்பது வருட வாழ்வின் சாரத்தைப் புன்னகையும், கனிவுமாய் முகத்தில் ஏந்தியபடி இருந்தார்.

"பூர்ணாஹுதி முடிஞ்சு எங்க இரண்டு பேருக்கும் புண்ணிய நீரால் திருமஞ்சனம் செய்வாங்க. அதுக்கப்புறம் நான் கிளவி கழுத்தில் தாலி கட்டுவேன். நீ ஆசி வாங்கிட்டு, சோத்தை தின்னுப்புட்டு ஓடிறாத. இரு! அவனும் வரட்டும். நாம நாலு பேரு மட்டும் ஒரே பந்தியில் உட்கார்ந்து சாப்பிடுவோம். சரியா?" என்றார் கண்ணடித்தபடி.

தாமரை பதில் சொல்லவில்லை. கதிரேசன் வராதது மட்டுமில்லை. சிதம்பரம் செட்டியார் வீட்டிலிருந்து ஒருவருமே வரவில்லை என்பது அவளிடம் சில கவலை ரேகைகளை முகத்தில் தோற்றுவித்தது. யாரிடம் கேட்பது? அவர்களுக்கு நெருக்கமானவர்கள் என யாரையும் கூட்டத்தில் காணவில்லை. கூட்டம் என்றால் பெருங்கூட்டமாய்த் திரண்டிருந்தது. மண்டபம் முழுவதும் நிரம்பிக் கிடந்தது. அந்தச் சொந்தம், இந்தச் சொந்தம் என விசாலாட்சி தாமரைக்குச் சொல்லிக் காட்டினாலும், நெஞ்சின் சொந்தமாய் அவனைக் காணவில்லை. ஏன் என்ற கேள்வி, பயமுறுத்துவதாக இருந்தது. அண்ணனிடம் செல்ஃபோன் இருந்தது என்றாலும், கதிரேசனுடன் பேசுவதற்கு செல்ஃபோனை வாங்கத்

தயக்கமாக இருந்தது. நேரம் போய்க் கொண்டே இருந்தது.

**ம**ணிவிழா நாயகர்களான முத்தையா செட்டியாரையும், மங்கையர்க்கரசி ஆச்சியையும் ஒரு நீள பெஞ்சில் உட்கார வைத்தார்கள். மாலை அணிவித்தார்கள். கையில் தேங்காய் கொடுத்தார்கள். புண்ணியாவசனம் செய்த நீரையும், அமிர்தகலச நீரையும் நகரச் சிவன் கோவில் சிவாசாரியார், மந்திரங்கள் முழங்க அபிஷேகம் செய்யத் தொடங்கினார்.

"ஏன் தாமரை, தெய்வானை ஆச்சி வீட்டிலிருந்து யாரையும் காணும்?"

"அதான் அண்ணமுண்டி எனக்குத் தெரியல."

"கதிரேசன் டெலிபோன் பண்ணினானா?"

"இல்லை."

புண்ணிய நீராடுதல் முடிந்த பிறகு, மங்கையர்க்கரசி ஆச்சி தாய் வீட்டுச் சீதனமான பட்டுச் சேலையை உடுத்தி வந்தார். முத்தையா செட்டியார் பட்டு வேட்டி, பட்டு மேல் உத்தரீயத்துடன் வந்தார். இருவரையும் ஜோடியாக அமரவைத்து, சின்னஞ்சிறுசுகள் எல்லாம் ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டிருந்தார்கள்.

அருணாசலம் குடும்பத்தினரும் ஆசி பெற, வரிசையில் நின்று கொண்டிருந்தனர். தாமரை வாசல் பக்கமே பார்வையை ஓடவிட்டுக் கொண்டிருந்தாள்.

மனம் நடுங்கியது.

அருணாசலம் முன்னால் போய்க் கொண்டிருந்தவர், முத்தையா செட்டியார் காலில் ஆசி பெறப் போனபொழுது முத்தையா செட்டியார் "என்ன சோமு! நம்ம வள்ளி மெடிக்கல்ஸ் சிதம்பரஞ் செட்டியார் வீட்டிலிருந்து யாரையும் காணும்?" என்றார்.

"அய்யாவுக்கு சேதி தெரியாதா?"

"என்ன சோமு சங்கதி?"

"தெய்வானை ஆச்சி பாவம்னு வளவுல சேர்த்துக்கிட்டாகளே ஒரு கொண்டிப்பய, வீட்டோடயே வளர்த்த பாம்பு, கதிரேசன்னு ஒரு பய...."

பின்னால் வந்த அருணாசலம் பதறிப் போய் "யாரு சிதம்பரஞ்செட்டியார் மகனா?" என்றான்.




"பணடி! அவன் ஆச்சிக்காப் பொறந்த பய! கூத்திக்குப் பொறந்த பயலாச்சே!"

தகவல் சொல்லிக் கொண்டிருந்தவரை இப்பொழுது கூட்டம் சூழ்ந்தது. தாமரை விதிர்த்து நின்றாள்.

"ஏகறது இருக்கட்டும். தாக்கலைச் சொல்லுமய்யா" என்றார் முத்தையா செட்டியார்.

"என்ன பொல்லாத தாக்கல். பய பொறப்பு புத்தியக் காட்டிப்புட்டான். அவனுக்கும் நாகப்பனுக்கும் விரோதம் பெரிசாயிருக்கு. கணக்கு காட்டாத பற்று லட்சக்கணக்கா ஏறிப் போச்சு. பெரியவரு ஏன்னு கேட்டிருப்பாரு போல. இன்ஷூரன்ஸ் பணம் கிடைக்குங்கற நப்பாசையில் சொந்த மருந்து குடோனுக்கு தீ வெச்சுப்பிட்டான் கோட்டிப் பய."

"சிவ சிவா!" என்றார் முத்தையா.

"அவன் அப்படிப்பட்ட பய இல்லியே" என்றார் பழனியப்பன்.

"நீ செத்த சும்மா இரும்" என்றான் மகன் தந்தையிடம்.

"அவந்தான் கடைக்குத் தீ வெச்சான்னு உமக்குத் தெரியுமா?"

"இதுக்கெல்லாம் பின்னோடியாய் போயி பாப்பாக. கடையில் வேலை பாக்குற பயலை மெரட்டி ராவில் தீ வெச்சிருக்கான். அந்தப்பய பேரு கெட்டிரும்னு, மறுநாள் போலீஸ்ல சரண்டர் ஆயிட்டான். கதிரேசனால வாயத் தொறக்க முடியல. லாக்-அப்பில் இருக்

கான். சார்ஜ் ஷீட் போட்டாகன்னா, இத்தனை நாள் உண்ட வீட்டுக்கு ரெண்டகம் பண்ணின பய கதி அதோகதிதான். கண்ணன் பஜார், கல்லுக்கட்டி பூரா இது தான் பேச்சு."

முத்தையா செட்டியார் தாமரையைப் பார்த்தார். தாமரை வேறு எவருக்கும் வருத்தப்படாமல் கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தாள்.

## ஜீன்ஸ் நோட்டு!




பில் கிளிண்டன் முதல் 'மதுர' விஜய் வரை பிரபலங்கள் அணியும் லீவை ஜீன்ஸ் உலகப் பிரசித்தி. லீவை ஸ்ட்ராஸ் என்கிற ஜப்பான் கம்பெனி தற்போது ரீசைக்கிள் செய்யப்பட்ட டெனிம் கொண்டு புது வகையான காகிதத்தை தயாரித்து உள்ளது. இந்தக் காகிதத்தால், 'ட்ராவல் தி வல்ட் இன் ஜீன்ஸ்' என்ற வாசகம் பொறிக்கப் பட்ட அழகான பயணக் கைவேடுகளை சந்தைப் படுத்தியுள்ளனர்.

இந்தக் கையேடுகளின் விற்பனையில், வரும் லாபத்தில் ஒரு பகுதியை 'திங்க் தி எர்த்' என்ற திட்டத்துக்குச் செலவழிக் கிறார்களாம்!

**- ஆர்.எல்**

"ப்ச்! கதிரேசனா இப்படி செஞ்சுப்புட்டான்?" எல்லாருடைய த்வனியும் ஒரே மாதிரியாக இருந்தது.

"பழனி போறப்பவே அய்யா சொல்லலீங்களா, குடிப்பிறப்பின் பேதம் அவனை ஒரு மன ஊனமுற்றவனாக மாத்திரும்னு. அப்படி ஆயிட்டான் போல முழு பைத்தியமா" என்றான் அருணாசலம், திருஞானத்தை மனதில் நினைத்தபடி. அவன் சடாரென மாறிப் பேசியது தாமரையை நடுக்க முறச் செய்தது.

"கதிரேசன் நல்லவர். என்ன நடந்துச்சுன்னு தீர விசாரிக்காம இப்படிப் பேசிறக் கூடாது" என்றாள் தாமரை.

"பெண்புத்தி பின்புத்திங்கறது சரி தான். இவ காதலிச்சாளாம். நல்ல பயல காதலிச்சா! இவ பேச்சை நம்பி நான் அவுக வீட்டில் நிச்சயம் பேசப் போனேனே."

"அருணாசலம்! இது பொது இடம். அய்யா வீட்டு சாந்தி கலியாணத்துக்கு வந்திருக்கோம். நம்ப குடும்ப விஷயத்தை மேடை ஏத்தாதே!" பழனியப்பன் மகளைத் தடுத்தார்.

"எனக்கு வெட்கம், மானம், ரோஷம் எதுவுமே இல்லை ஐயா! எல்லாருக்கும் தெரிஞ்சு போன விஷயத்தில், இனிமேல் நான் வெட்கப்பட என்ன இருக்கு? சொல்லுங்க! கதிரேசன் நல்லவர் இல்லியா? அவரு இப்படி ஒரு காரியத்தை செஞ்சிருப்பாரா?" என்றாள்.

"பட்டுன்னு தீர்ப்பு சொல்லிற முடியாது தாமரை. மோசமான சங்கதி நடந்து போச்சு. யாரு குத்தவாளின்னு கோர்ட்டு தானே முடிவு செய்யும்" என்றார் முத்தையா.

"இல்லை! நான் நம்ப மாட்டேன். கதிரேசன் நல்லவர். எங்கப்பா என்னை வளர்த்த வளர்ப்பு நல்ல வளர்ப்பு. அதனால நான் தேர்ந்தெடுத்தவரும் நல்லவர்தான். வலம்புரி முத்து தான். இன்னிக்கு என்னால சூழ்நிலை காரணமா அதை நிரூபிக்க முடியாமல் போகலாம். ஆனா கண்டிப்பா நான் நிரூபிச்சுக் காட்டுவேன். நான் என்ன நிரூபிக்கறது? அவருடைய நல்ல குணமே அவரை நிரூபிக்கும்" என ஆவேசம் வந்தவளைப் போல பேசினாள்.

முத்தையா செட்டியார் தம்பதி கால்களில் விழுந்து ஆசீர்வாதம் வாங்கிக் கொண்டாள். பெயருக்குச் சாப்பிட்டாள். உள்ளே அனலாய்க் கொதித்த அவளது கொதிப்பு, இப்போதைக்கு அணையக் கூடிய கொதிப் பாகத் தெரியவில்லை.

(தொடரும்)



# டிரில் மாஸ்டர்

**வ**டபழனி விஜய சேஷ மஹாலில் நாற்பத்தைந்து நட்சத்திரப் பட்டாளங்களையும், நூற்றைம்பது துணை நடிகர்களையும் வைத்துக் கொண்டு மைக்கில் கத்திக் கொண்டிருந்தார் 'குஸ்தி' இயக்குனர் ராஜ்கபூர்.

''டிரில் மாஸ்டர் வேலை மாதிரி ஆகிப்போச்சு. முழு நீள காமெடிப் படம்தான் இது. இவ்வளவு நடிகர்கள் இருந்தால் நல்லாயிருக்குமேன்னு தயாரிப்பாளர் முருகன் கிட்ட சொன்னேன். ஓ.கே.ன்னுட்டார். அப்புறமென்ன... இங்க பாருங்க... கூட்டத்தை'' என்றவரிடம், ''பிரபு, கார்த்திக் இருவரையும் வைத்து இயக்குகிறீர்கள்; கார்த்திக் சரியாக ஷூட்டிங்குக்கு வரமாட்டாருன்னு ஒரு பேச்சு இருக்கே'' எனக் கேட்டால் மறுக்கிறார்.

''அது தவறான தகவல். இங்க சரியான நேரத்துக்கு வர்றவர் கார்த்திக்தான்'' என்றார் ராஜ்கபூர்! நெசமா?

- அப்பு

# மழை வந்தால்

ரெயின்கோட், குடை விற்கும் கடைக்குப் போன மிஸ்டர் எக்ஸ், ஒரு குடை கேட்டார். வாங்கிக் கொண்டு குடையைப் பிரித்த மிஸ்டர் எக்ஸ், ஒரு பிளேடு எடுத்து குடையின் மேல் பக்கம் வட்டமாக வெட்டி எடுத்தார். கடைக்காரர் திகைப்புடன் கேட்டார், ''ஏன் புதுக்குடையில் ஓட்டை போட்டீங்க?''

"பின்னே, மழை வந்தால் தெரிய வேண்டாமா?'' என்றார் மிஸ்டர் எக்ஸ்.

- எஸ். ஜயஸ்ரீ,
சென்னை







மிஸ்டர் எக்ஸ் தலைக்கு மொட்டை அடித்திருந்தார். தமது பழைய நண்பன் கோபாலைப் பார்க்க நுங்கம்பாக்கத்துக்குச் சென்றார். நண்பனின் முகவரியைத் தொலைத்து விட்டதால், ஒருவரிடம், 'கோபால் வீடு தெரியுமா...?'' என்று கேட்டார். அவரும் ''இப்படி மொட்டையாகக் கேட்டா எப்படி ஸார்? என்றார். மிஸ்டர் எக்ஸ் பத்துநாள் கழித்து வந்து, அதே நபரிடம், ''சார், இப்போ எனக்குக் கொஞ்சம் முடி வளர்ந்திருக்கு! இப்பவாவது கோபால் வீட்டு அட்ரஸைச் சொல்லுங்க'' என்றாரே பார்க்கலாம்!

- கே. தனசேகரன்,
மதுரை

இரண்டு நண்பர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். ''வயிற்று வலிக்கு டாக்டரிடம் மருந்து வாங்கிச் சாப்பிட்டேன், கேட்கவே யில்லை'' என்று அதில் ஒருவர் குறைபட்டுக் கொண்டார். பக்கத்திலிருந்த மிஸ்டர் எக்ஸ் பலமாகச் சிரித்து, "கேட்கவில்லையென்றால் காது டாக்டரிடமல்லவா போக வேண்டும்?'' என்று கேட்டார்.

- ஆர்.கே. தேவி, பொள்ளாச்சி





# தெரியுமா மே?

மிஸ்டர் எக்ஸின் நண்பர் ராஜேஷ், தம் மகளுக்கு பூஜா எனப் பெயரிட்டு பூஜா ராஜேஷ் என்று அழைத்தார். மிஸ்டர் எக்ஸுக்கு அந்தப் பெயர் பிடித்து விடவே, தம் மகளுக்கும் பூஜா ராஜேஷ் என்றே பெயர் வைத்தார்.

- உ. முத்துக்குமரன், ஈரோடு





அந்த ஊரில் புலித்தொல்லை அதிகமாக இருந்தது. அந்த ஊருக்கு மிஸ்டர் எக்ஸ் போனார். எல்லோரும் இரவு ஆனவுடன் புலிக்குப் பயந்து வெளியே வர பயப்பட்டார்கள். ஆனால் மிஸ்டர் எக்ஸ் தைரியமாக வெளியே கிளம்பினார். அதைப் பார்த்த ஒருவர், ''இரவில் புலி நடமாட்டம் இருக்கு. வெளியே போகாதீங்க'' என்றார். அதற்கு எக்ஸ் அவரைப் பார்த்து, ''என்கிட்டதான் 'டைகர் பாம்' இருக்கே'' என்று சட்டைப் பையிலிருந்து எடுத்துக் காட்டினார்.

- ஆர். ரெங்கநாதன், சென்னை

ஒருமுறை மதுரைக்குச் சென்றிருந்த மிஸ்டர் எக்ஸ், ஒரு லாட்ஜுக்குச் சென்று ரிசப்ஷனிஸ்டிடம் ''ரூம் எதுவும் காலியாக இருக்குதா...?'' என்று கேட்டார்.

அப்போது ஃபோனில் பேசிக் கொண்டு இருந்ததால் ரிசப்ஷனிஸ்ட் எக்ஸிடம்,

''வெயிட் ப்ளீஸ்...!'' என்றாள்.

உடனே மிஸ்டர் எக்ஸ் கூறினார். ''செவன்ட்டி கிலோகிராம்ஸ்...!''

ஆர். பிரசன்னா, கரூர்



குட்பை
மிஸ்டர் எக்ஸ்!

## ஹலோ, இறைவா 5

உங்களுக்கெல்லாம் கதை கேட்கப் பிடிக்கும்தானே! ஒரு கதை கேளுங்கள். உங்களைப் போல பள்ளிக் கூட மாணவ, மாணவிகள்தான் இந்தக் கதையின் கதாபாத்திரங்கள்.

ஒரு பள்ளிக் கூடத்தில் இரண்டு மாணவர்கள். இரண்டு பேரும்



# சும்மா இருப்பானா

நெருங்கிய நண்பர்கள். ஒரே வகுப்பு. ஒரே மாதிரியான குடும்பப் பின்னணி. இரண்டு பேருமே நன்றாகப் படிக்கக் கூடியவர்கள். விளையாட்டிலும், இதர திறமைகளிலும் கூட சிறப்பானவர்கள் தான். ஒரு மாணவனின் பெயர் 'தன்னம்பிக்கை'. இன்னொரு மாணவனின் பெயர் 'சுய கௌரவம்.'

வகுப்பில் சேர்ந்தே உட்காருவார்கள். மதிய உணவைப் பகிர்ந்து கொள்வார்கள். ஒன்றாக விளையாடுவார்கள். படிப்பார்கள். பரீட்சை எழுதினாலும், இரண்டு பேர் மார்க்குகளும் ஏறத்தாழ ஒரே மாதிரிதான் இருக்கும்.

இப்படிப்பட்ட சூழ்நிலையில், வேறு ஓர் ஊரிலிருந்து ஒரு மாணவன் அந்தப் பள்ளிக் கூடத்தில் வந்து சேர்ந்தான். அதே வகுப்பு. புதுப் பையனின் பெயர் 'பொறாமை'. படிப்பில் சுமார் தான். விளையாட்டில் திறமைசாலி. ஏனோ, வந்து சேர்ந்த நாள்

முதலே, அவனுக்கு முன் சொன்ன இரண்டு நண்பர்களை யும் பிடிக்கவேயில்லை.

தன்னம்பிக்கை, சுய கௌரவம் நண்பர்களுக்கு இடையில் எப்படியாவது சண்டையை வரவழைத்து, அவர்களைப் பிரித்துவிட வேண்டும் என்று நினைத் தான். தானோ புதுப் பையன். அவர்களோ, பல வருட நண்பர்கள். எனவே அதே பள்ளியில் படிக்கும் வேறு யாராவது ஒரு பையனைத் தனக்குத் துணையாக வைத்துக் கொண்டால், தனது வேலை சுலபமாக இருக்கும் என்று நினைத்தான்.

யாரை நண்பனாக்கிக் கொள்வது என்று யோசனை செய்தான். கடைசியில் ஒரு பையனை அடையாளம் கண்டு கொண்டான். "ஆ! இவன்தான் நமக்கு தோஸ்த்!" என்று முடிவு செய்தான். அந்த தோஸ்த்தின் பெயர் என்ன தெரியுமா?

சிடுசிடுப்பு. எப்போது பார்த்தாலும், முகத்தைக் கடுகடுவென்று வைத்துக் கொண்டிருப்பதும், வாயைத் திறந்தாலே கடுமையாகப் பேசி, எல்லோரையும் திட்டுவதும் அவன் ரத்தத்தில் ஊறிப்போன சமாசாரங்கள்.

நண்பர்கள் பொறாமையும், சிடுசிடுப்பும், எப்படி தன்னம்பிக் கையையும், சுய கௌரவத்தையும் சண்டை வரவழைத்து பிரிப்பது, என்று சீரியஸாக சிந்தனை செய்தார்கள். முதல் கட்டமாக, பொறாமையும், சிடுசிடுப்பும், தன்னம்பிக்கையை நண்பனாக்கிக் கொண்டார்கள்.

ஆரம்பத்தில் சிரித்துச் சிரித்துப் பேசினாலும், சில நாட்களி லேயே இரண்டு பேரும் தன்னம்பிக்கையின் மனசில், சுய

மாணவர்கள் கட்டாயம் படிக்க வேண்டிய தொடர்!

# உற்சாகப் பிரியா?

கௌரவத்தைப் பற்றி தவறான அபிப்ராயங்களை ஏற்படுத்துகிற காரியத்தில் இறங்கினார்கள். "தன்னம்பிக்கை மட்டும் இல்லை யெனில் சுய கௌரவம் பூஜ்ஜியம்தான்" என்று தன்னம்பிக்கையை நம்ப வைக்கும் பணியில் ஜெயித்தார்கள்.

பள்ளிக் கூடத்தில் ஆண்டு விழாவுக்கான வேலை கள் தொடங்கின. தன்னம்பிக்கைக்குள்ளே ஏற்பட்ட மாற்றங்கள் எதையும் அறியாத சுய கௌரவம், "வர ஆண்டு விழாவில் 'வாங்க ஜெயிக்கலாம்' என்று நாம் இரண்டு பேரும் சேர்ந்து ஒரு குட்டி டிராமா நடத்தலாமா?" என்று கேட்க, முகத்தைத் திருப்பிக் கொண்டு அலட்சியமாகப் போய்விட் டான் தன்னம்பிக்கை.



மறுமுறை சந்தித்த சமயத்தில் மீண்டும் நாடகம் பற்றிக் கேட்க, "என்னைத் தொந்தரவு செய்யாதே! நான் பிஸி" என்று சொல்லி விட்டு, பக்கத்தில் நின்று

சுவாமி போதமயானந்தா

கொண்டிருந்த சிடுசிடுப்பின் தோளில் கைபோட்டபடி நடந்து போனான். அதன் பின் தன்னம்பிக்கை, சுய கௌரவத்திடம் முகம் கொடுத்தே பேசுவது கிடையாது.

சுய கௌரவத்தை இது ரொம்பவே பாதித்தது. ஆனாலும் என்ன செய்வது என்று புரியவில்லை. சுய கௌரவம் குழம்பிப் போனான். யாரிடமாவது ஆலோசனை பெற விரும்பினான்.

தன் பள்ளிக் கூடத்தில் பணி புரியும் ஆசிரியையிடம் இது பற்றிப் பேசுவது என்று முடிவு செய்தான். அதன்படி மறுநாள் மிஸஸ் நல்வார்த்தையைச் சந்தித்து, தனது பி யைப் பற்றி விரிவாகப் பேசினா

சுய ம், வருத்தத்தோடு சொன். ங்களைப் பொறுமையோடு கே கொண்ட மிஸஸ். நல்ல வார்த்தை, "சேச்சே! இதுக்குப் போய் மனம் தளர்ந்து போகலாமா? தன்னம்பிக்கையிடம் மாற்றம் ஏற்பட்டதற்குக் காரணம் அவனுடைய புது நண்பர்களான பொறாமையும், சிடுசிடுப்பும்தான். ஆனால், தன்னம்பிக்கையை பழையபடி ஆக்குவது ஒன்றும் சிரமமான விஷயமில்லை. எனவே தைரியமாக இரு! நாளைக்கு என்னை வந்து பார்!" என்று சொல்லி அனுப்பி வைத்தார்.

**ம**று நாள் லஞ்ச் பிரேக்கின்போது டீச்சர் முன் ான் சுய கௌரவம். அங்கே ஏற் ஒரு ாணவி உட்கார்ந்து கெ ா ர் பேசினார்! "இது கள் கூலில் தான் படிக்கிறாள். உ ்சாகப் பிரியா! இவளிடம் உன் ப ள பற்றிச் ெ ்டேன். இனி நீங்கள் இரண்டு பேரும் நண்பர்கள். எங்கே கை குலுக்கிக் கொள்ளுங்கள் பார்க்கலாம்."

சுய கௌரவமும், உற்சாகப் பிரியாவும் சந்தோஷமாய்க் கைகுலுக்கிக் கொண்டார்கள். "ஆல்தி பெஸ்ட் சுய கௌரவம் அண்டு உற்சாகப்பிரியா!" என்று வாழ்த்தினார் டீச்சர்.

இதற்கிடையில் சிடுசிடுப்பு, பொறாமை இருவரது சகவாசத்தில் ரொம்பவே பொலிவு இழந்து போயிருந்தான் தன்னம்பிக்கை. படிப்பில் முன்போல இல்லை. பரீட்சையில் மார்க் குறைந்துவிட்டது. தன்னம்பிக்கை மிகவும் டல்லாய் இருந்தபோதுதான், சுய கௌரவம், உற்சாகப் பிரியாவுடன் போய், மீண்டும் தன்னம்பிக்கையைச் சந்தித்தான். உற்சாகப்பிரியா, கலகலப்பாக தன்னம்பிக்கையிடம் பேசினாள்.

சுய கௌரவமும், உற்சாகப்பிரியாவும் நல் வார்த்தை டீச்சரின் ஆலோசனைப்படி, அடிக்கடி தன்னம்பிக்கையைச் சந்தித்துப் பேசினார்கள். தன்னம்பிக்கையிடம் நல்ல மாற்றங்கள் தெரிய ஆரம்பித்தன.

ஒரு புறம் மிஸஸ். நல்ல வார்த்தையின் ஆலோசனைகளின்படி, சுய கௌரவமும், உற்சாகப் பிரியாவும் தன்னம்பிக்கையை பழையபடி ஆக்க முயல, இன்னொரு பக்கம் பொறாமையும், சிடுசிடுப்பும் அதனைத் தடுக்க முயன்றார்கள். ஆனால் உற்சாகப் பிரியா சும்மா இருப்பாளா? முழு மூச்சில் இறங்கினாள்.

சீக்கிரமே பலன் கிடைத்தது. தன்னம்பிக்கை தலை நிமிர்ந்தான். சுய கௌரவமும், தன்னம்பிக்கையும் பழையபடி நெருக்கமானார்கள். இப்போது அவர்களுக்கு உற்சாகப் பிரியா என்ற நல்ல சிநேகிதியும் கிடைத்துவிட்டாள். மூவரும் சேர்ந்து ஆண்டு விழாவில் 'ஜெயிக்கலாம் வாங்க' என்ற நாடகத்தை நடத்தி, பாராட்டுப் பெற்றார்கள்.

(இப்போதைக்கு விடை பெறுகிறேன்)

படம் : **யோகா**



"மருமகளுக்கு ரொம்ப வயசாயிடுச்சு."

"அதனாலே?"

"என்னைத் தனியா தவிக்க விட்டுட்டு புருஷனும் மனைவியுமா முதியோர் இல்லத்தில் சேர்ந்துடப் போறாங்களோன்னு ஒரே கவலையாயிருக்கு..."

- பம்மல் நாகராஜன்

## பஞ்ச துவாரகா யாத்ரா

**GUJARAT TOURISM**

(A Govt. of Gujarat Tourism)

Tourism Complex, Wallajah Road, Chennai - 600 002.

Tel : 25366613 Res : 24794159

E-mail : gujarattourism@vsnl.net

GUJARAT TOURISM

14 நாட்கள் கொண்ட புனித யாத்திரையில் பார்க்கும் இடங்கள்

தாகோர் துவாரகா, பெய்ட் துவாரகா, கங்கரோலி, நாத் துவாரகா (அனைத்து துவாரகை), சோம்நாத், ஜோதிர்லிங்கம், உதய்ப்பூர், புஷ்கர், மவுண்ட் அபு, அம்பாஜி மற்றும் அகமதாபாத்

கட்டணம் நபர் ஒருவருக்கு ரூ. 12000/–

(சென்னை - பரோடா, அகமதாபாத் - சென்னை நவஜீவன் எக்ஸ்பிரஸ் ரயில் மூலம் இரண்டாம் வகுப்பு தூங்கும் வசதியுடன், A/C சொகுசு பேருந்து, டீலக்ஸ் டபுள் ரூம் (இரண்டு நபருக்கு), தென்னிந்திய சைவ உணவு, கைடு சர்வீஸ், நுழைவு கட்டணம் ஆகியவை இதில் அடங்கும்.

சென்னையிலிருந்து புறப்படும் நாட்கள்

**செப் 26 அக் 24, நவம் 12, 2004**

## இந்திய தரிசனம்

- காசி யாத்ரா Rs. 6900 Sep 21
- காசி - பத்ரிநாத் Rs. 9450 Sep 21
- ஜோதிர்லிங்கம் Rs. 8750 Oct 8
- சக்தி ஸ்தலம் Rs. 9950 Oct 9
- வைஷ்ணோதேவி Rs. 8900 Oct 9
- சிம்லா - மணாலி Rs. 5000 Every Sat.

ரயிலில் இரண்டாம் வகுப்பு, தங்கும் வசதி, தென்னிந்திய சைவ உணவு, போக்குவரத்து அனைத்தும் உட்பட்டது.

*For Booking contact our authorized selling agent*

**Travel Times (India) P. Ltd**

இந்திய அரசின் அங்கீகாரம் பெற்ற நிறுவனம்

11, Club House Rd, Anna Salai, Chennai-2.

**Ph : 28461213, 28461131, 28461113**



# S.V.முதியோர் இல்லம்



## Charitable Trust (Reg)

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப்படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளி களுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

முதிய பருவத்தில் மறதி நோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

*முதியோர் சேவை பெரியது!*

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

Charitable Trust (Reg)

# 50 / 88, Panchali Amman Kovil Street, Arumbakkam, Chennai - 600 106.

(Near Panchali Amman Temple) Tel. Off: 044 - 2475 5700, 2475 6700, 2475 7777, 2475 5799

e-mail:svhome@vsnl.net



வெய்யிலானாலும் இரவானாலும் தேடி வருகிற வன்தான் நண்பன். சரவணன் செந்தில் குமாரைத் தேடி வந்த போது நேரம் பிற்பகல் மூன்று மணி.

செந்தில் குமார் காதக் கோட்டையில் தனது பெட்டிக் கடையில் அமர்ந்தி ருந்தான். இருபத்து இரண்டு வயதில் பெட்டிக் கடையில் அமர்வதென்பது கஃடமான வேலைதான்.

செந்தில் குமாரின் பத்தொன்பதாவது வயதில் அவனது அப்பா கருப்புசாமி இறந்து போனார். இறந்த போது செந்திலுக்கு 'கே' என்கிற இனிஷியல், பெட்டிக்கடை என்கிற ஸ்தாபனம், பன்ரொட்டிக் காரனுக்கு நூற்றிப் பதினாறு ரூபாய் கடன் ஆகியவற்றை விட்டுச் சென்றார். அம்மாவைக் காப்பாற்றும் பொறுப்பும் செந்திலுக்கு வந்து சேர்ந்தது.

சகோதரிகள் யாரும் இருந்து தொலைக்காதது பற்றி அவன் ஆசுவாசம் கொள்வதுமுண்டு.

பி.ஏ. கார்ப்பரேட் படிப்பைத் தாராபுரத்தில் படித்தவன், பாதியில் கைவிட்டான். கந்துக் கடை, கண்டக்டர் வேலை, டெம்போவுக்கு டிரைவராகும் பயிற்சி ஆகியன அடுத்தடுத்து விரைவில் தோல்வியடைந்தன. சில விஷயங்கள் எடுத்த எடுப்பிலேயே தோல்வியில் முடிவடைவது பற்றி இயற்கைக்கு நன்றி சொல்ல வேண்டும். பெட்டிக் கடையின்

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை

# அடையாளம்

க.சீ.சிவகுமார்

மட்டப் பலகை வேறு இளவரசனைப் பட்டாபிஷேகத்திற்கு அழைத்துக் கொண்டிருந்தது. கடையைப் பொருள்களால் நிரப்ப அம்மாவின் தாலி உதவி செய்தது. தாலி மட்டும் தங்கத்தில் இல்லாமல் இருந்திருந்தால், அவற்றின் மதிப்பு வேறுவிதமாகத்தான் இருந்திருக்கும்.

செந்தில் கடையைக் கவனித்துக் கொண்டான். கருப்புசாமி புகைப்படத்திலிருந்து தினம் இரு ஊதுபத்தியை நுகர்ந்து கொண்டு அவனைக் கவனித்துக் கொண்டார்.

கால் மணி நேரத்துக்கு மேல் கடையில் ஆள் வராத இடைவெளி இருந்தால், அவர் செந்திலோடு பேசத் தொடங்கி விடுவார். இந்த மனமருட்சிக்குப் பயந்து செந்தில் பத்து நிமிடத்துக்கு மேல் ஆகிவிட்டால் கடைக்கு வெளியே உலவப் போடுவான். இன்று அப்படி உலவிக் கொண்டிருக்கும்போதுதான் சரவணன் வந்தான்.

**ச**ரவணன் சின்னதாராபுரத்திலிருந்து வருகிறான். சி.தா. புரத்தில் இருவரும் +2வில் இணைந்து படித்தனர்.

"டேய்" என செந்தில் வரவேற்றான். சரவணன் புன்னகையுடன் கடைக்குள் நுழைந்தமர்ந்து, கோல்ட் ஃபில்டரைப் பற்ற வைத்துக் கொண்டான்.

"கிங்ஸ் இல்லியாடா?" எனக் கம்பீரமாக வினவினான் செந்தில் புன்னகை செய்து கொண்டே.

"அளவாக் குடிடா. இன்னிக்கத்த லாபத்தப் பூரா நீயே ஊதித் தீத்துடாதே" என்றவாறு அருகில் வந்து உட்கார்ந்தான். இருவரும் நிறையப் பேசிக் கொண்டிருந்தனர். பேச்சு ஜடை வில்லைகளைப் பற்றியது என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. சரவணன் கோடந்தூர் ராசாக் கோயிலில் யுகாதித் திருவிழா என்றும், ஆடலுடன், பாடலும், கரகாட்டம், நாடகம் ஆகிய நிகழ்ச்சிகள் உண்டென்றும், இரவு அங்கே போகலாம் என்றும் தெரிவித்தான். இத்தனை இன்பமான நிகழ்ச்சிகள் ஒரே நாளில்

நடக்க வேண்டியதில்லைதான். சரவணன் சொல்லி முடித்த மறுகணமே இருவரும் கோடந்தூர் செல்வது உறுதியாகி விட்டது.

ஆறு மணிக்கு முன்னால் கடையைச் சாத்த அம்மா அனுமதிக்க மாட்டாள். சாயந்திரத்தின் இன்பத்திட்டங்கள் அதற்கு மிக முன்னமே முடிவாகி விட்டால், சூரியனின் நிஜமான சோம்பேறித்தனம் ஊர்ஜிதமாகிவிடுகிறது. அவ்வப்பொழுது பெருமூச்சு விட்டு காலத்தை ஊத வேண்டியதுதான். திருவிழா ஊர்களுக்கு இளைஞர்களைப் பொறுத்த மட்டில் மாலை ஐந்து மணிக்குள் போய் விடுவது நல்லது. பகல், சந்தியை, இருள் என எல்லா ஒளியிலும் பெண்களைப் பார்க்கலாம். கல்யாணமாகாத இவர்களின் பருவத்தினர் எனில், ஓர் ஐந்து மணி நேரத்துக்குள் நூறு முறையாகிலும் காதல் கம்பங்கள் உயர்வதையும், பின் அவை சடசடவென முறிவதையும். கண்ணால் பார்த்துக் காதால் கேட்கலாம். செந்தில் அம்மாவிடம் அனுமதி கேட்டபோது நாளைக்குக் கடை திறக்க வந்துவிட வேண்டும் எனக் கட்டளையிட்டு ஒப்புக் கொண்டாள். இருவரையும் பார்த்து, "கோயிலுக்கும் போங்கடா" என்றாள். சரவணன், "கண்டிப்பாம்மா" என உடனே சத்தமாக ஆமாதித்தான். அவனது குரலில் கண்ட உறுதியைப் பார்த்து, உண்மையில் கோடந்தூரின் ராஜலிங்க மூர்த்தி சுவாமி அதிர்ந்து போயிருக்க வேண்டும்.

இருவரும் வெள்ளக்கோவில் போய் வேன் பிடித்து கோடந்தூர் போனார்கள். அணுக்கள் அயர்வுறும் வரையிலும், கணுக்கால் வரை வெண் புழுதி படும் வரையிலும் சுற்றினார்கள். இதற்கு நோக்கமும் ஆக்கமும் உண்டா என்பதற்கு இப்போதைக்கு விடையில்லை.

இரவு பதினொன்றரை மணிக்கு சரவணன்,

"அய்யய்யோ, நாம எப்படிப் போறது பஸ்சு கிஸ்சு ஒண்ணும் இல்லையே?" என்றான். செந்தில் அவனது கேள்விக்கு முதற் கண் சிரித்தான். ஒரு சாதாரணப் பேச்சு வழக்கில் மொழி இவ்வளவு ஆழமாகச் செயல்பட வேண்டியதில்லை.

இருவரும் தத்தமது இல்லங்களுக்கு மீளுவது பற்றிக் கவலை கொண்டனர். அல்லறுவோருக்கு இயற்கை வாகனங்களை அனுப்புகிறது. ஆடலும் பாடலும் நடத்திய தலையூர்த் தில்லானா குருப்பின் டெம்போவில் இடம் பிடித்து, இருவரும் சின்னதாராபுரம் வந்தடைந்தனர். "நீயும் வீட்டுக்கு வாடா" என்று சரவணன் அழைத்தான். "இல்லடா, மேக்க மூணு மணிக்கு மொதல் வண்டி வந்துடும். அதுக்குப் போய்க்கிறேன்" என்று சரவணனுக்கு விடையளித்து விட்டு, செந்தில் சர்ச்சுக்கு எதிரில் உள்ள காம்ப்ளெக்ஸ் திண்ணையில் உட்கார்ந்தான்.

நேரம் இரவு ஒன்றரை.

அருகில் தள்ளுமாடல் டீக்கடை நீலச் சுடர் ஸ்டவ்வின் மேல் பாய்லர் வைத்து நின்றிருந்தது. நான்கைந்து ஆட்கள் கைலிவேட்டி வெள்ளை வேட்டியினராக அமர்ந்திருந்தார்கள். வெள்ளிக் கிழமைச் சந்தைக்கு கன்னிவாடி போகிறவர்கள். அவர்களும் செந்தில் போகிற பஸ்ஸை எதிர்பார்ப்பவர்களே.

அவன் தேவாலயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தபோதுதான் போலீஸ்காரர் வந்து சேர்ந்தார். இன்றைய அவரது



"காவங்கார்த்தால புருஷனுக்குக் காபி கொண்டு போறச்சே எதுக்கு ஏணியையும் எடுத்துட்டுப் போறே?"

"வாஸ்து புத்தகம் படிச்சதிலிருந்து அவர் பரண்மேலே தான் படுக்கறாரு!"

— மாமணி






## சூடா சுடறாங்க!

மலையாள பட உலகிலிருந்து நல்ல கதைகளை நைஸாக உருவி, பட்டி பார்த்து கொஞ்ச காலம் ஓட்டியது தமிழ் சினிமா உலகம். இப்போது கேரளத்தில் ஸ்டாக் தீர்ந்து போகவே, தவித்துப் போன கோலிவுட், இந்திக்குத் தாவி விட்டது. 'ஷாக்', 'வசூல் ராஜா' படங்களைத் தொடர்ந்து, 'மஸ்தி', 'மே ஹூன் நா' போன்ற படங்களும் தமிழுக்கு வரவிருக்கின்றன. 'மஸ்த்' ரீமேக்கில், அதில் நடித்து அசத்திய அம்ரிதா ராவே நடிப்பார் என ஸ்டுடியோ சுவர்க் கோழிகள் கூவுகின்றன.

- தாஜ்

இரவு உறங்குவதற்காகப் படைக்கப்பட்டிருக்கவில்லை. இலேசாகக் குடித்திருந்தார். அன்பின் சரிவை நோக்கிச் செல்லாமல், ஆளுமையின் பேருருவம் மட்டுமே எழுந்து நிற்கும் அளவுக்கே அவர் குடித்திருக்க வேண்டும் என்பது நடையிலும் மிடுக்கிலும் தெரிகிறது.

"யாருய்யா நீ?" ஒரு கைலிக்காரரைப் பார்த்து வினவினார். தேர்ந்தெடுத்த முகங்களைப் பார்த்து விசாரணை தொடங்கிவிட்டது. தனக்கு நேரப் போகும் ஆபத்தை உணராதவனாக, சுவாரசியமாக இதை வேடிக்கை பார்த்தபடி செந்தில் தள்ளி அமர்ந்திருந்தான். எதிர்பாராத கணத்தில் போலீஸ்காரர் செந்திலின் பக்கம் திரும்பி, "இங்க வாடா, என்ன அங்கிருந்து வேடிக்கை பார்த்துக்கிட்டு இருக்கே?" என்றார்.

அவனது காலேஜ் படிப்பிலும் பேண்ட் உடுப்பிலும் நம்பிக்கை வைத்து, தான் சந்தேகத்திற்கு அப்பாற்பட்டவன் என இதுகாறும் நம்பியிருந்த செந்தில் வெலவெலத்து அருகில் சென்றான்.

"யார்ரா நீ?"

கடினமான கேள்விதான்.

"செந்தில் குமார் சார்."

"ம்... எந்த ஊரு?"

"க...க.. காதக் கோட்டை சார்."

"இங்கென்ன வேலை."

"கோடந்தூர்ல ஒரு விசேஷம் சார். அதுக்குப் போயிட்டு வர்றேன் சார். பஸ்ஸுக்கு நின்னுக்கிட்டிருந்தேன்."

"அப்படி எல்லாம் விசேஷம் இருந்தா ஸ்டேஷனுக்கு தகவல் சொல்லுவாங்களே... எங்களுக்கு ஒரு இதும் வர்ல."

"அதுக்கு நா என்ன பண்ண முடியும்?"

"நீ என்ன பண்ண முடியுமா?' இடது கன்னத்தில் அடி விழுந்தது.

தேவாலயத்தின் முன் நின்றிருந்தும் மறு கன்னத்தைக் காட்டும் அறிவை இவன் பெறவில்லை.

"சார்... வருஷந் தவறாம அந்த ஊர்ல யுகாதியன்னிக்கு விசேஷம் நடக்கும் சார்."

"இப்படி முதல்ல சொல்ல வேண்டியதுதானே.. ம்... ஓட்றா... பஸ் ஸ்டாண்டுக்கு ஓட்றா, திரும்பிப் பாக்காமப் போ."

செந்திலைப் பிடரியைத் திருப்பி நெட்டினார் போலீஸ்.

அவனது முதுகில் போலீஸ்காரரின் குரல் கேட்டது; அருகிலிருந்த ஆட்களிடம் கூறிக் கொண்டிருந்தார்.

"இப்படித்தான் வந்து பக்கத்துல உட்காருவானுக. பேச்சுக் குடுத்து எவ்வளவு வச்சிருக்கீங்க, என்னன்னு நோட்டம் தெரிஞ்சுக்கிட்டு, ஆள் செட் பண்ணி அடிச்சுப் புடுங்கிடுவானுக. இவனுககிட்ட கவனமா இருக்கணும். எனக்கு மூஞ்சிய ஒருக்காப் பாத்தான்னா போதும், ஆள் எப்படின்னு கண்டு புடிச்சிடுவேன்."

ஆள் அரவமற்ற பஸ் ஸ்டாண்ட் தனிமையில் வெறிச்சோ என்றிருந்தது. மனிதர்கள் கூடுவதற்கு இன்னும் நேரம் பிடிக்கும். ○

## நன்றியுணர்வு

**பெ**ய்யும் மழை அறிவதில்லை
சருகுகளின் ரகசிய சுவாசம்
மூச்சுத் திணற வைக்கின்றன.

சுழன்றடிக்கும் காற்றுக்குத்
தெரிவதில்லை
சருகுகளின் இயலாமை
அலைக்கழிக்கப்படுகின்றன.

சுட்டெரிக்கும் வெயில்
உணர்வதேயில்லை
சருகுகளின் நிர்வாணம்,

எரிக்கின்றன யுகம் யுகமாய்,
இலையாயிருக்கையில்
வாழவைத்தமைக்கு
இப்படித்தான்
நன்றி தெரிவித்துக்
கொண்டிருக்கின்றன
வீழ்ந்த சருகுகள்.

**கவிதா குமரன்**

## வேலிகள்

**வடுவூர் சிவ. முரளி**

**வே**லியைத் தாண்டின
சில வெள்ளாடுகள்
தாண்டுவோரை
நாங்கள் தடுப்பதில்லை
படர்ந்த வேலிக்குப்
பாதிப்பு வராத வரையில்
யாரும் தாண்டட்டும்
எங்கேயும் மேயட்டும்
வேலிகள் மட்டும் இருக்கட்டும்
எப்போதும் போலவே
எங்களுக்கு வேலிதான் முக்கியம்!







# HOW AIRPLANES WORK



JAYASURIYA
# POSTER



# OLYMPICS
Features

# HARRY POTTER Puzzle

# GOKULAM

The magazine for children

September 2004 Rs.8/- only

# வசந்த காலம்

## அமரர் கல்கி

ஆ! "வஸந்த காலம்" என்று சொன்னதும் எத்தனை எத்தனை இன்பமான நினைவுகள் உண்டாகின்றன? அந்தச் சொற்றொடரைக் கேட்டதும் கிழவர்கள் குமரர்களாகின்றனர்; குமரர்கள் குழந்தைகளாகின்றனர்; குழந்தைகள் சிசுக்கள் ஆகின்றனர்; சிசுக்கள் கருக்களாகி விடுகின்றன! ஆஹா! வஸந்த காலத்தின் மஹிமையே மஹிமை!

வஸந்த காலம் என்றதும் காளிதாஸனின் சாகுந்தல நாடகத்தில் வரும் வஸந்த கால வர்ணனை ஞாபகம் வரப் பெறாதவர் யார்? அந்த வர்ணனை ஞாபகம் வந்ததும் மாந்தளிர்களையும் மாம்பூக் கொத்துக்களையும் நினைத்துக் கொள்ளாதிருக்க முடியுமா? மாம்பூ ஞாபகம் வந்ததோ இல்லையோ, மாம்பழம் யாருக்குத்தான் ஞாபகம் வராமலிருக்கும்? அதுவும் உயர்ந்த மல்கோவா பழத்தை நினைத்துக் கொண்டு விட்டால் நாவில் ஜலம் சொட்டப் பெறாதவர் யாரே உளர்? இதிலிருந்து, மாம்பழத்தின் சுவை அறிய முடியாத ஆங்கில நாட்டாரிடம் அநுதாபம் பிறத்தலும் இயல்பேயல்லவா?

எங்கள் வீட்டுச் சுற்றுப் புறத்தில் எங்கும் மாமரத்தைக் காணோம். ஆனால் அழகான வேப்ப மரங்கள் இரண்டு இருக்கின்றன. இவை அடர்த்தியான இளந்தளிர்களுடனும் புஷ்பங்களுடனும் வெகு ரம்மியமாகக் காணப்படுகின்றன. காலையில் எழுந்து பார்த்தால் தரையெல்லாம் வேப்பம்பூ பரப்பியிருக்கிறது. சற்று நேரத்திற்கெல்லாம் அந்தப் பூக்கள் அவ்வளவும் வாடி வதங்கிக் கருகிப் போகின்றன. ஆழ்ந்து நோக்கினால், உலக வாழ்க்கையில் இவ்வாறு உயர்ந்த முயற்சிகள் - பல உலர்ந்து கருகி வீணாகிப்போவதைப் பார்க்கிறோமல்லவா? பகவத் சிருஷ்டியின் மர்மமே மர்மம்.

ஆனால், வஸந்த காலத்துக்கும் வேதாந்தத்துக்கும் வெகு தூரம். வஸந்த காலத்தின் அதிபதியான தெய்வம் - மன்மதன் அன்றோ? இவ்விரண்டு மாதமும் மன்மதன் வெகு சுறுசுறுப்பாயிருப்பான் என்று சொல்லப்படுகிறது. காதலனைப் பிரிந்த காதலியும், காதலியைப் பிரிந்த காதலனும் எங்கே என்று அவன் தேடி அலைவானாம்.

ஒரு இளநங்கையின்மீது அந்தப்பாவி மன்மதன் பாணம் தொடுப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். அது சமயம் அவளுடைய புருஷன் இவளைத் தன்னந்தனியே விட்டுவிட்டு வேட்டையாடச் சென்றிருக்கிறான். (அது என்ன வேட்டை என்பதை நான் அறியேன். ஒரு வேளை உத்தியோக வேட்டையாயிருக்கலாம். அல்லது, பட்ட வேட்டையாயிருக்கலாம்; அல்லது மாப்பிள்ளை வேட்டையாகக் கூட இருக்கலாம்). அந்த சமயம் பார்த்து சுத்த வீரனான மன்மதன் தனது பராக்கிரமத்தைக் காண்பிக்கிறான். அந்தப் பெண் என்ன சொல்லுகிறாள் தெரியுமா? "மன்மதா! உலகிலேயுள்ள ராஜாங்கங்கள் எல்லாம் ஆயுதப் பரிஹரண முயற்சி நடத்தி வருவது



உனக்குத் தெரியாதா? இதற்காக எத்தனையோ கூட்டங்கள், மகாநாடுகள், ஆலோசனைகள் நடக்கின்றனவே? நீயும் ஏன் உன் ஆயுதங்களைப் பரிஹரணம் செய்து விடக் கூடாது?'' என்கிறாள். அதற்கு மாரன் சொல்கிறான் : - "பெண் பேதாய்! உலகிலுள்ள வல்லரசுகள் உண்மையில் ஆயுதப் பரிஹரணம் செய்யும்போது நானும் என் ஆயுதங்களைப் போட்டு விடுகிறேன்" என்று.

மன்மதனுக்கு உகந்த இந்த இளவேனிற் காலத்தில் எங்கெங்கும் கல்யாணங்கள் நடைபெறுதல்



இயல்பேயன்றோ? எங்கே பார்த்தாலும் மேளச் சத்தம் காதைத் தொளைக்கின்றது. மலர்களின் நறுமணமும் சந்தனத்தின் சுகந்தமும் பன்னீர் வாசனையும் கமகமவென்று வீசுகின்றன. ஊர்வலங்கள் வாண வேடிக்கைகளைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

கல்யாணங்களிலே மாப்பிள்ளைகள் திவ்யாலங்கார பூஷிதர்களாய்ப் பரதேசம் போகும் காட்சிதான் மிக இனிமையானது. பரதேசம் புறப்படும் மாப்பிள்ளை ஒருவரை யாரும் தடுத்து நிறுத்தாமற் போனால் அவருடைய கதி என்னவாகும் என்று நமது சித்திரக்காரர் கேட்கின்றார். அதை நினைத்தாலே பிரம்மசரியப் பிள்ளைகள் கதிகலங்கிப் போகிறார்கள்.

நாகரிகம் முற்றிப் போன இந்தக் காலத்திலும் கூடக் கல்யாணங்களில் நலங்கு நடத்தாமலிருப்பதில்லை. ஆனால் ஒரு வித்தியாசம் உண்டு. அந்நாளிலெல்லாம் மணப்பெண் மாப்பிள்ளையின் முன்னால் நாணிக் கோணி நின்று கொண்டு, பக்கத்திலிருப்பவர்கள் வெகுவாகத் தூண்டியதன் மேல்,

'நலங்கிட வாரும் ராஜா
நாணயமுள்ள துரையே'

என்று அழைப்பதும், மாப்பிள்ளை பெண்ணைப் பார்க்க வெட்கப்பட்டு வேறு பக்கம் திரும்பிக்கொண்டு, சீக்கிரம் எழுந்துவிட்டால் யாராவது பரிகாசம் செய்யப் போகிறார்களே என்று இடித்த புளியைப் போல் உட்கார்ந்திருப்பதும் வழக்கம். இந்த நாளிலோ நலங்குக்கு அழைக்க மணப்பெண் குறிப்பிட்ட காலத்தில் 'பங்கவலா'க வராவிட்டால், மாப்பிள்ளை மணப்பெண்ணைத் தேடிக் கொண்டு கிளம்பி விடுகிறார்.

வஸந்த காலத்தில் தான் கோவில்களில் கூட வஸந்தோற்சவங்களும், திருக்கல்யாண உற்சவங்களும் நடைபெறுகின்றன. நமக்கெல்லாம் சாதாரணமாக, வாழ்க்கையில் ஒருமுறைதான் கல்யாணம்; கோயில் தெய்வங்களுக்கோ வருஷா வருஷம் கல்யாணம்! ஐயைய! இத்தனை வயது ஆன பிறகு - இவ்வளவு பிள்ளைகள், பேரர்கள், கொள்ளுப் பேரர்கள், கோடி கோடி கோடானு கோடிப் பேரைப் பெற்றெடுத்த பிறகு - அந்த ஸ்வாமிக் கிழவருக்கும், அம்மன் கிழவிக்கும் மணையில் உட்காரவும், நலங்கு இடவும் வெட்கமாயில்லையே?

- ***'கல்கி களஞ்சியம்'*** **தொகுப்பிலிருந்து**
**(வானதி பதிப்பகம்)**

# "வணக்கம் தமிழகம்!"

ஒன்றுகூடி கோரஸ்பாடி, சன் டீ.வி. அழகுப் பிரபலம் ரேவதியை வரவேற்றனர் சென்னை கிண்டியிலுள்ள எஸ்.ஐ.எஸ்.ஐ. நீனாஸ் பாலிடெக்னிக் கேட்டரிங் மாணவர்கள்.

"எந்த வழியா சன் டீ.வி.க்குள்ள நுழைஞ்சீங்க?", "எந்த வி.ஐ.பி.யை பேட்டி எடுக்கும்போது கைகால் உதறல் எடுத்தது?", "நடுவுல கேள்வி தீர்ந்து போச்சுன்னா என்ன பண்ணுவீங்க?" என்று வந்த வேகத்தில் ரேவதியை நோக்கி சரமாரியாகக் கேள்விகள் விழுந்தன. "ஆஹா கேள்விக்கே கேள்வியா?" என்று ஜாலி மூடுக்கு தானும் இறங்கினார் ரேவதி.





# ஜ்ஜாவதி வழங்கிய ஐ.எஸ்.ஐ. முத்திரை!

அப்படியே அவரை தங்கள் 'பளிச்' மையல் கட்டுக்கு கூட்டிச் சென்ற ர். அங்கு கரும்பலகையில் அன்று ய்ய வேண்டிய உணவுகளின் யர்களும், அதன் அளவுகளும், னு ராணியின் சமையல் புத்தக ணியில் எழுதப்பட்டிருந்தன.

''என்னங்க இது, வீட்ல சமைக் போது இதுமாதிரி ஐம்பது கிராம், நூறு கிராம்னு அளவெல்லாம் வைச்சு போட முடியுமா?'' என்ற நக்கலுக்கு உடனே பதில் வந்தது. ''இப்போ நாலும் ரெண்டும் பெருக்கினா எட்டுன்னு சொல்வீங்க. ஆனா ஸ்கூல்ல வாய்ப்பாடு மூலமா தானே கத்துகிட்டீங்க. அது மாதிரிதான்.''

முதல் டிஷ்ஷாக ப்ரவுன் ப்ரெட். கனகாம்பர கலர் ஷார்ட் குடிதாரில் ரேவதி மட்டும் ஜொலிக்க, சுற்றி நின்ற அனைவரும் டெஸ்ட் மேட்ச் அம்பயர் போல், வொய்ட் அண்ட் வொய்ட்டில் உஜாலாவில் இருந்தார்கள். மைதாவைச் சலித்து, வெண்ணெய் சேர்த்து... பிரெட் தயாரிக்க ஆரம்பித்தார்கள். ''அடடா, மறந்துட்டோமே'' என்று ஸ்டார் ஓட்டல்

களின் ஷெஃப் பாணியில் ரேவதியின் 'தலை'மைச் செயலகத்திற்கும் வெள்ளைத் தொப்பி அணிவிக்க, ஏதோ தமக்கு உலக அழகி கிரீடத்தை தலையில் சூட்டிய சந்தோஷத்தில், இரு உள்ளங் கைகளாலும் வாயைப் பொத்தி பரவசமாகியதைப் பார்த்து, எதற்கும் அசராத நம் போட்டோகிராபரே ஆடிப் போய் 'நச்' க்ளிக்கைத் தொலைத்த கதையை யாரிடம் சொல்ல? "ம்ஹூம், இதை என் டி.வி.யில் பார்த்தாங்கன்னா பயங்கரமா ஓட்டு வாங்களே'' என்றபடி ஓரமாய் ஒரு சேரில் அமர்ந்து கொண்டார்.

"வீட்ல யாராவது மூட்அவுட் பண்ணினா தான், பழி வாங்க வசதியா நான் சமைப்பேன். உங்க வசதியெல்லாம் எப்படி?'' என்று இவர் அனுப்பிய விண்ணப்பத்துக்கு, மும்முரமாய் ஓவனில் ப்ரெட்டை பதப்படுத்தி சூடாக்க முயன்றவர்களிடமிருந்து எவ்வித பதிலும் கிடைக்கவில்லை. பாவம்!



சட்டென்று பழக்க தோஷத்தில் நிர்வாகி ஷம்ஷத்தைப் பேட்டி எடுக்க ஆரம்பித்தார்.

"பேக்கரி பயிற்சி இரண்டு மாதம். கேட்டரிங் பயிற்சி ஆறு மாதம். இரண்டையும் திருப்திகரமாக முடித்தபின் மாணவர்களுக்கு மத்திய அரசின் சான்றிதழ் வழங்குகிறோம். இதனால் முப்பது, நாற்பது வயதுடையவர்கள் கூட தயக்கமின்றித் தொழில் கற்றுக் கொண்டு, பிறகு அரசாங்கச் சான்றிதழின் உதவியோடு வங்கிகளில் சுலபமாகக் கடன் பெற்று, தனியாக பேக்கரி, ஓட்டல்கள் தொடங்கி விடுகின்றனர். சுவை, சுத்தம், சத்துணவு, பராமரிப்பு, நிர்வாகம் போன்ற பலவற்றுக்கும் முக்கியத்துவம் உள்ள சிலபஸ் என்பதால், கேட்டரிங் பயிற்சிக்கு நல்ல வரவேற்பு உள்ளது. எங்கள் மாணவர்களுக்கு உடனடியாக வேலை கிடைக்கிறது" என்றார் ஷம்ஷத் பெருமையாக.

ஒரு மணி நேர இடைவெளியில் ரேவதியின் செல்ல இடைஞ்சல்களையும் மீறி, ப்ரவுன் ப்ரெட், டேட்ஸ் கேக் இரண்டையும், தங்கள் கைப்பக்குவத்தில் செய்து முடித்திருந்ததை கரெக்டாக வாசம் பிடித்து ஸ்பாட்டில் ஆஜரானது 'வணக்கம் தமிழகம்'.

இரண்டையும் 'லபக்' செய்துவிட்டு "ஏய், கலக்குறீங்கப்பா, பேக்கரி டேஸ்ட்டைவிட சூப்பரா இருக்கில்லே!'' என்று எஸ்.ஐ. எஸ்.ஐ. சர்டிஃபிகேட் கொடுக்கும் முன்பே, தன் சார்பாக ஐ.எஸ்.ஐ. முத்திரை வழங்கி மாணவர்களைக் குளிர்வித்தார் ரேவதி.

இதன்பின், விதவிதமாய் ஒலிக்க ஆரம்பித்த செல்போனை காதுக்குக் கொண்டு போனவர், பரபரப்பானார். "என்னை பிக்-அப் பண்றதுக்காக மாமா பையன் வெளியே வெயிட் பண்றார். நான் கிளம்பறேன்!'' என்று அந்த எக்ஸ்பிரஸ் வேகத்திலும், ஒரு பாலிதீன் கவரில் ப்ரெட், கேக் என மொத்தமாக அள்ளிப் போட்டுக் கொண்டு ஓடிய லஜ்ஜாவதியின் சாமர்த்தியத்தை 'ஆ' என வேடிக்கை பார்த்தனர் மாணவர்கள்.

- ச.ந. கண்ணன்

படம் : ஷிவ்



உ

## ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ ஸமேத
## ஸ்ரீ ஸற்குணேச்வர ஸ்வாமி திருக்கோயில்
## ஸ்ரீ ஸற்குணேச்வரபுரம், கருவேலி - 609 501.

✆ : 04364 273900

**லட்சார்ச்சனை ஆவணி கடை ஞாயிறு மற்றும்
ருத்ராபிஷேகப் பெருவிழா 11.9.2004 - 12.09.2004
சனி, ஞாயிறு ஆகிய இரு தினங்கள்**

அன்புடையீர்,

நிகழும் தாரண வருஷம் ஆவணி மாதம் 26ஆம் தேதி (11.09.2004) சனிக்கிழமை பூச நட்சத்திரமும், துவாதசி திதியும் கூடிய நன்னாள் துவங்கி **ஸ்ரீ ஸற்குணேச்வரர் உடனுறை ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ அம்பிகைக்கு** லட்சார்ச்சனையும், மறுநாள் காலை கடை ஞாயிறு தீர்த்தப் பெருவிழாவும், மாலை ருத்ராபிஷேகத்துடன் கூடிய சிறப்புப் பிரதோஷ வழிபாடும் குருவருள், இறையருள் துணை கொண்டு நடைபெற இருக்கின்றன.

யமதீர்த்தமென்று வழங்கப்படும் திருக்குளத்தில் முறையாக ஸங்கல்பம் செய்து கொண்டு நீராடுவதும், முன்னோர்களையும் (பித்ருக்களையும்), தேவதைகளையும் குறித்து வழிபாடு செய்வதும் பெரும் பயனளிக்கும், தனி நபர் வாழ்விலும், குடும்பங்களிலும் உள்ள பல தோஷங்களை நீக்கும்.

**இரு தினங்களும் நடைபெறும் லட்சார்ச்சனையிலும், ஆவணி கடைஞாயிறு (12.09.2004) காலை தீர்த்தவாரியிலும், அன்று மாலை நடைபெறும் பிரதோஷ சிறப்பு வழிபாட்டிலும் இறையன்பர்கள் அனைவரும் வழக்கம் போல் ஆர்வத்துடன் பங்கு கொண்டு பேரருள் பெற வேண்டுகிறோம்.**

*என்றும் இறைபணியில்*

*Dr. V. கிருஷ்ணமூர்த்தி*
*பரம்பரை அறங்காவலர்*

**ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா (Regd).**
32/18, டபீர் புதுத்தெரு, கும்பகோணம் - 612 001.
போன்: 0435 / 2423297 மற்றும் **கிராமவாசிகள்**

"ஆவணி கடை ஞாயிறு தீர்த்தவாரிக்கு வரும் பக்தர்களின் வசதிக்காக கும்பகோணம், காசிராமன் தெரு, வேதவிநாயகர் கோயிலிலிருந்து வேன்கள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. ஞாயிறு (12.09.2004) விடியற்காலை மணி 4.30 - 5.00க்குள் புறப்படுகின்றன. ஒருவருக்குச் சென்று வர கட்டணம் ரூ. 30/- புனித நீராட விரும்புபவர்கள் கொடுக்கப்பட்டுள்ள முகவரிகளில் ஏதேனும் ஒன்றில் முன்னதாகவே பதிவு செய்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

| எண் | நிகழ்ச்சி | கட்டணம் | பெறப்படும் பயன் |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீ கணபதி ஹோமம் 11.9.2004 காலை 8.00 மணி முதல் 9.00 வரை | ரூ. 50/- | தடைகள் நீங்கும், எடுத்த காரியத்தில் வெற்றி. |
| 2. | லட்சார்ச்சனை 11.9.2004 முதல் கட்டம் ஆரம்பம் காலை 10.00 மணி, பூர்த்தி 12.30. அன்று பிற்பகல் 4.00 மணிக்கு இரண்டாம் கட்டம் ஆரம்பம். இரவு 8.00 மணிக்கு பூர்த்தி. 12.9.2004 காலை 8.30 மணிக்கு மூன்றாவது கட்டம் ஆரம்பம். பூர்த்தி பகல் 12.30 மணிக்கு | ரூ. 100/- | வாழ்வில் இடர் நீங்கி நலம் பெருக |
| 3. | ஸ்ரீ ருத்ரஜபம், அபிஷேகம் ஸங்கல்பம் 12.9.2004 அன்று 3மணிக்கு ஆரம்பம். மாலை 6 மணிக்கு பூர்த்தி. மாலை 6.30 மகா தீபாராதனை. | ரூ. 1000/- | இன்னல் நீங்க, செல்வம் பெருக |
| 4. | சிறப்பு அபிஷேகம் | ரூ. 50/- | சுபிட்சம், மங்கலம் பெருக |

குறிப்பு: மேலே கொடுக்கப்பட்டுள்ள நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ள விரும்பும் அன்பர்கள் அவற்றிற்கான தொகையை "ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா" என்ற பெயருக்கு மணியார்டர் மூலமோ அல்லது வரைவுக்காசோலை (D.D) மூலமோ கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரிகளில் ஏதேனும் ஒன்றிற்கு அனுப்பக் கோருகிறோம்.

**G. குஞ்சிதபாதம், FCA.,** G. நடேசன் & கோ. டபீர் மேலத்தெரு, கும்பகோணம்–612 001
போன்: 0435 2420047

**G. கண்ணன்,** D/127-A, ராஜமன்னார் சாலை, கே.கே.நகர், சென்னை –78. போன்: 044-24836495

**V.L. நாராயண சாஸ்திரிகள்,** 25/1 சுப்பாரெட்டித் தெரு, எஸ்.என்.ஆர். கன்ஸ்ட்ரக்ஷன்ஸ், மேற்கு மாம்பலம், சென்னை - 600 033. போன்: 044-24897125

**R. வைத்தியநாதன்,** மேலாளர், இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, பிளாட் நெ. 4, கதவு எண் 12, 29வது தெரு, தில்லை கங்கா நகர், நங்கநல்லூர், சென்னை - 600 061. போன்: 044 - 22333361

# ஹரம் திருப்பவர்கள்

முருகன் சார், தமது உடம்பை புலி மாதிரி ஒரு தடவை சிலிர்த்து விட்டுக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''கேட்கிற கேள்விக்கு என் கண்ணைப் பார்த்து பதில் சொல்லுங்க மனோ''

மனோ அவரது கண்களை உற்றுப் பார்த்தான்.

'நான் உன்னை ரட்சிக்கப் பிறந்தவன்' என்கிற மாதிரியான ஒட்டுதல் புன்னகை அது. ஆனாலும் முருகன் சாரை மனோ நன்கறிவான்.

கண்களின் ஆழத்திற்குள் இரை தேடும் மிருகத்தின் குரூர வெறியும், 'வசமா வந்து மாட்டிக்கிட்டியா' என்ற வக்கிர சந்தோஷமும் புதைந்திருந்ததை உணர்ந்தேயிருந்தான் அவன்.

'கடவுளே, இது என்ன புதுச் சிக்கலோ' என்று உள்ளூர ஓர் அவசரப் பிரார்த்தனை ஓடியது.

முருகன் சார் அவனது அவஸ்தையைக் கண்டு உள்ளுக்குள் ஆனந்தப் பட்டவாறே தொடர்ந்தார்.

"நான் விஷயத்தை சொன்னதும் பதற்றப்படவேணாம் மனோ. பொறுமையா எல்லாத்தையும் கேளுங்க. என்ன பண்ணலாம்றதைப் பத்தி அப்புறம் நிதானமாப் பேசி முடிவெடுப்போம். இது பொய்யாகத்தான் இருக்கும்னு நானும் நம்பறேன்... இருந்தாலும்..."

"ப்ளீஸ் சார்... விஷயத்துக்கு வர்றீங்களா...?"

"ஓ.கே. மனோ... மேட்டர் இதுதான். நீங்களும் சித்ராவும் லவ் பண்றீங்களாம். ஆபீஸ் அக்கௌண்ட்ஸ் டவுட்சை க்ளியர் பண்றேன் பேர்வழின்னு நெருங்கிப் பழகறதா ஒரு வதந்தி..."

மனோவுக்கு கோபம் தலைக்கேறியது. மிக சாமர்த்தியமாக அதைக் கட்டுப் படுத்திக் கொண்



டான்.

"மனோ... லே சம்திங்..."

முருகன் சார் இன்டினார்.

"என்ன சார் பேசச் சொல்றீங்க?" என்றான் அலுப்புடன்.

இரண்டு மூன்று நாட்களுக்கு முன்பே லஞ்ச் நேரத்தில் சரவணன் அது பற்றி சொன்னான். "முருகன் சாருக்கு உங்க இரண்டு பேர் மேலேயும் டவுட். என்கிட்ட விசாரிச்சாரு" என்று.

அவன் பதறிப் போய் சொல்ல, தான் ஏதோ நகைச்சுவைத் துணுக்கு கேட்ட மாதிரி சிரித்ததும் நினைவுக்கு வந்தது.

இப்போது பூனை வெளியில் வந்து விட்டது!

முருகன் சாரை வெறித்தான் அவன். முருகன் சாருக்கு இன்னும் திருமணமாக வில்லை. அவனை விடவும் ஆறேழு வயசு அதிகம். வீட்டிலே பார்த்துக் கொண்டேயிருக்கிறார்கள்.

அவருக்கு 'கன்னி ராசி'. ஆபீசில் ரொம்பப் பிரசித்தம் இது.

சித்ராவை இன்டர்வ்யூவில் தேர்ந் தெடுத்ததும் முருகன் சார் தான்.

மனோவை அழைத்து அவளை அறி முகம் செய்வித்து, "புதுசு. உங்க அசிஸ் டெண்ட்டா கொஞ்ச நாள் வெச்சிருங்க. அக்கௌண்ட்ஸ் சொல்லித் தாங்க" என்றார். 'சரி' என்று தலையாட்டி விட்டான் இவனும்.

சித்ராவின் அழகைப் பார்த்து அப் போதே ஓர் உறுத்தல் ஏற்பட்டது நிஜம். உறுத்தல் கூட இல்லை. பயம். ஆபீசில் இன்னும் இரண்டு பெண்கள் உண்டு. ஆனால் திருமணமானவர்கள்.

முருகன் சாருக்கு சித்ராவின் மேல் ஆர்வமும், ஈர்ப்பும் இருப்பதை மனோ உணர்ந்தேயிருந்தான். அவன் மேல் பரிதாபம் ஏற்பட் டது. எனினும் அதை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை.

மனோ இயல் பாகவே கொஞ்சம் கலகல டைப். ஆபீசில் சுற்றியிருக்கிற எல் லோரையும் இடை மறித்து கிண்டல் பண்ணிக் கொண்டு... அவன் ஒரு நாள் லீவு போட்டாலும் ஆபீசே ஏதோ சவ வீடு போல இருக்கும்.

"உங்களை வாங்க, போங்கன்னு கூப் பிடணுமா?" என்று எடுத்தவுடனே கேட்டதில் அவள் மிரண்டு போய், "உங்க இஷ்டம்" என்றாள் தணறலாக.

இரண்டு பேருக்கும் அருகருகேயான



சிகா

இருக்கை. நிறையப் பேசி, ஒன்றாகவே வேலை பார்க்க வேண்டிய கட்டாயம். சில விஷயங்கள் ஒன்றிப் போக, ஒட்டிக் கொண்டார்கள்.

ஆனாலும் கூட....

முருகன் சார் தமது அதிகாரத்தைப் பயன்படுத்தி, சித்ராவைக் கவர பல நேரங்களில் முயன்று பார்த்தார்.

அவன் அது பற்றிய எந்த உணர்வையும் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. உண்மையில் அது பற்றி அவன் யோசிக்காதவனாகவும் கூட இருந்தான்.

சித்ராவுக்கும், மனோவுக்கும் இடையிலே ஒரு புரிதல் இருந்தது. இவன் என்றால் அவளுக்கு நல்ல மரியாதையும், அவள் என்றால் இவனுக்கு அபிமானமும்.

அலுவலகம் தாண்டி இரண்டு மூன்று முறை வெளியில் காபி சாப்பிட்டதுண்டு. அவன் தன் வாழ்வின் சில சோக ரகசியங்களை இவனிடம் பகிர்ந்து கொண்டதுண்டு. இருவருக்கும் பொதுவான ஒருவரின் வீட்டு விசேஷத்துக்கும், இரண்டு பேரும் சேர்ந்து போனதுண்டு.

ஆனால்...

"மனோ... மனோ..."

சுய நினைவு வந்து விழித்தான்.

"என்னாச்சு மனோ?" என்றார் முருகன் சார். "பேசுங்க. சும்மா பதில்னு எதையாவது சொல்லுங்க போதும். நமக்குள்ளே தானே இது...?"

மனோ பெருமூச்சு விட்டான். நேரடியான பதில்கள் அவரை இப்போது திருப்தி செய்யாது என்றே பட்டது.

"சார், நீங்க சந்தேகப்படறது இரண்டு பேரையும்தானே? சம்பந்தப்பட்ட இரண்டு பேரையும் கூப்பிட்டு விசாரிக்காம, என்னை மட்டும் கேட்கறீங்களே...ஏன்?"

"அது வந்து... அவங்க லேடீஸ் மனோ."

"ஆம்பளைக்கும் மானம், மரியாதை, எல்லாம் உண்டு சார்."

முருகன் சார் எதுவோ வேகமாக சொல்ல வந்து, பின் நிறுத்தி சிந்தித்தார். 'சித்ராவை அழைத்து விசாரிக்கும் அளவு அவருக்கு துணிச்சல் கிடையாது என்று மனோவுக்குத் தோன்றியது. பின், அவரது இமேஜ் என்னாவது?

"சித்ராகிட்டே ஏதும் இதுபத்தி ஏற்கெனவே பேசியிருக்கீங்களா...?"

"இல்லே..."

"பேசுங்க. அவங்க என்ன பேசறாங்களோ, ஸாரி, பதில் சொல்றாங்களோ அதான் என்னோட பதிலும்" அவ்வளவு தான் என்பது போல் எழுந்தான்.

முருகன் சார் ஒரு நொடி திகைத்து, "மனோ, இது ப்ராப்பர் ஆன்ஸர் கிடையாது" என்றார் இலேசான கோபமுடன்.

"அப்போ அவங்களையும் கூப்பிடுங்க. கேட்போம்" புன்னகையுடன் அழுத்தமாகச் சொல்லிவிட்டு உட்கார்ந்தான்.

இவராவது, கூப்பிடுவதாவது.

முருகன் சார்



"டார்லிங்... நாம நேற்று பீச்சில் உட்கார்ந்திருந்ததை எங்க அப்பா பார்த்திட்டார் போலிருக்கு!"

"உன்னை ரொம்ப திட்டிட்டாரா திவ்யா?"

"ஊஹூம்... 'மறுபடி காதலனைப் பார்க்கப் போகும் போது நகைகளை வீட்டில் வச்சுட்டுப் போ'ன்னார்!"

- புளியரை கணேசன்

பேனாவை தமது நெற்றிப் பொட்டில் லொட் லொட் டென்று தட்டி (சிந்திக்கிறாராம்) பின் இன்டர்காமை எடுத்து, ''பிரகாஷ், சித்ராவை வரச் சொல்லு'' என்றார்.

மனோ அதிர்ந்தான். இப்படி ஒரு திருப்பம் அவன் எதிர் பாராதது. சித்ராவை அழைக்கவே மாட்டார் என்று நம்பி யிருந்தவன் நினைப்பில் மண். தேவையில்லாமல் அவளையும் இதில் இழுத்து விட்டோமே, என்று குற்ற உணர்வு தோன்றி யது. முருகன் சாரை விட, அவளுக்கு தன் முகத்தைப் பார்ப் பதில் தான் அதிக தர்மசங்கடம் இருக்கும் என்றே தோன்றியது. யார் முகத்தில் விழித்தோம் இன் றைக்கு... சே!



''ஒண்ணு, நட்ட நடு ரோட்டி லிருந்து உங்க தலைவர் சிலையை எடுங்க! அல்லது, அவரோட மீசை யையாவது எடுத்துட ஏற்பாடு செய்யுங்க! இந்தச் சிலையால அனாவசியமா டிராஃபிக் ஜாம் ஆகுது!''

- பாஸு

**"எ**க்ஸ்க்யூஸ் மீ சார்."

சித்ராவின் குரல் பின்புற மிருந்து கேட்டது.

மனோ கண்களை இறுக்க மாக மூடிக் கொண்டான்.

"உட்காருங்க சித்ரா. ப்ளீஸ்."

அமர்ந்தாள்.

"சித்ரா நேரடியா விஷயத்துக்கு வர் றேனே. ஆபீஸ்ல ஒரு வதந்தி, உங்க மேலே. ஸாரி உங்க ரெண்டு பேர் மேலேயும்."

"சார்... என்ன சார்...?"

"இருங்க சித்ரா, டென்ஷனாகாதீங்க. நான் அதை நம்பலை. ஆனாலும் என் காது வரை வந்ததை நான் எப்படி விசாரிக்காம விடறது?"

சித்ரா, மனோவைப் பார்த்தாள்.

"பேசுங்க சித்ரா. கிவ் மீ தி ஆன்ஸர்."

"சார், அது வந்து..."

மனோவின் காதுகள் விறைப்பாயின. என்ன சொல்லப் போகிறாள்...? சித்ரா மௌனமானாள்.

"ஒரு நிமிஷம் சார்... "குறுக்கிட்டான் மனோ. "சித்ரா வாங்க..." என்று எழுந் தான். "ஒரு பத்தே நிமிஷம். நாங்க எங் களுக்குள்ளே தெளிவாகிக்கறோம். அப்புறம் பதிலைச் சொல்றோம்" சித்ரா வைப் பார்த்தான்.

தலையாட்டினாள். தயக்கமாக முருகன் சாரைப் பார்த்தபடி எழுந்தாள்.

"பத்தே நிமிஷம்" என்று விலகினான் மனோ. அவளும். முருகன் சார் பதற்ற மாக சிகரெட் பற்ற வைத்துக் கொண் டார். மனோவைப் பணி மாற்றம் செய்து விடலாம். மதுரை, திருச்சி என்று தூர மாகத் தூக்கிப் போட்டு விடலாம். சித் ராவுக்கு ஒரு சின்ன வார்னிங் போதும். ப்ரமோஷன் தந்து பக்கத்திலேயே வைத் துக் கொள்ளலாம்.

ஒன்பதாவது நிமிஷ ஆரம்பத்தி லேயே போன் வந்தது.

"ஹலோ முருகன் ஹியர்..."

"சார்.... நான் மனோ..."

"ம்... சொல்லுங்க மனோ..."

"சார்.... வந்து... தேங்க்ஸ் சார்..."

"ம்...? என்ன...?"

''வந்து, ஆக்சுவலா ஒருத்தருக்குத் தெரியாம இன்னொருத்தர் லவ் பண்ணிட்டிருந்திருக்கோம். ஆனா தெளி வான வாய்ப்பும், சூழ்நிலையும் அமை யாம... இப்பத்தான்... உங்களை லைஃப்ல நிச்சயம் மறக்கவே மாட்டோம் சார்.... தேங்க்ஸ் சார்..."

ரிஸீவர் கீழே விழுந்தது. அதோடு முருகன் சாரும். ○

'ட்ரோமா கேர்' எனப்படும் விபத்துச் சிகிச்சைப் பிரிவில், மிகச் சிறப்பாகச் செயல்படும் அண்ணா நகர், கோயம்பேடு ஸ்ரீதேவி மருத்துவமனை டாக்டர் கே. செந்தில்நாதனிடம், தலைக்காயம் மற்றும் விஷ முறிவு சிகிச்சை பற்றி கேட்டபோது...

"சமீபத்தில் ஒரு தம்பதி எங்களுடைய மருத்துவமனைக்கு வந்தார்கள்.

"டாக்டர்... நாங்க பைக்லே போயிட்டிருந்தோம். குறுக்கே திடீர்னு ஒரு நாய் வரவும், நான் ஸடன் பிரேக் போட்டேன். வண்டி, தடுப்புச் சுவர் மேலே மோதி கீழே விழுந்துட்டோம். எனக்கு ஒண்ணுமில்லே. என் மனைவிக்குத்தான் கை, கால்லே சிராய்ச்சுடுச்சு. நான் இலேசா வாந்தி எடுத்தேன். அவ்வளவுதான். இவங்களை முதலில் பாருங்க" என்றார் கணவர் பதைப்புடன்.

"மிஸ்டர், அவசரமா கவனிக்க வேண்டியது உங்க மனைவியை அல்ல; உங்களைத்தான். உங்க தலையிலேயே உள் காயம் ஏற்பட்டிருக்க வாய்ப்பிருக்கு. உடனே உங்க தலையை ஸ்கேன் பண்ணணும்" என்றேன்.

"எனக்கு ஒண்ணுமில்லை ஸார். ஐயாம், ஆல் ரைட்" என்று மீண்டும் மீண்டும் சொன்னவர், இலேசாக மயக்கமடைய ஆரம்பித்தார். உடனடியாக தலையை ஸ்கேன் செய்து பார்த்ததில் மூளையில் இரத்தம் உறைந்திருப்பது தெரிய வந்தது. அவசரமாக அறுவை சிகிச்சை செய்ததால் உயிர் பிழைத்தார்" என்று ஆரம்பித்தார் டாக்டர் கே. செந்தில்நாதன்.

"மனிதனை கம்ப்யூட்டருடன் ஒப்பிட்டால், நம்முடைய உடலை ஹார்டுவேர் எனவும், மூளையை சாஃப்ட்வேர் எனவும் கொள்ளலாம். ஹார்டுவேர் எவ்வளவுதான் உறுதியாக இருந்தாலும், சாஃப்ட்வேரில் ஏதாவது கோளாறு என்றால், கம்ப்யூட்டர் இயங்காது. அது போல உடம்பு வாட்டசாட்டமாக ஆரோக்கியமாக இருந்து, மூளையில் பலமான அடி ஏற்பட்டுவிட்டால் ஆபத்துதான்!

மூளையின் எல்லாப் பகுதிகளுமே உயிர்ப்பகுதிகள்தான். அதிலும் சுவாசத்தை இயக்கும் பகுதி, இதயத்தை இயக்கும் பகுதி போன்றவை அதி முக்கியமானவை. அதே போல தலையின் பக்க வாட்டுப் பகுதிகளும் ரொம்ப சென்ஸிடிவ்!

# தலையைக்

தலையில் அடிபடுவதால் மூன்று விதமான காயங்கள் உண்டாகும்.

1) தலையில் அடிபட்டதால் உண்டாகும் பேரதிர்ச்சி (concussion)

2) தலைக்குள் உண்டாகும் அழுத்தம், ரத்தக் கசிவு (compression)

3) கபால முறிவு (skull fracture)

இந்த மூன்றுமே ஆபத்தானவை.

# காப்பாத்துங்க!



* டாக்டர் கே.செந்தில்நாதன்

எனவே அடிபட்டவரின் தலை, கழுத்து, முதுகெலும்பு ஒரே நேர்க்கோட்டில் இருக்கும்படி படுக்க வையுங்கள். காதுக்குக் கீழே, கைகளைக் கொடுத்து, தலையைத் தூக்க வேண்டும். மூளையில் ஏற்படும் ரத்தக் கசிவு, ரத்த உறைவு, வீக்கம் போன்றவை பல நாட்கள் கழித்துக் கூட பாதிப்பை ஏற்படுத்தும். தீராத தலைவலி, வாந்தி, தலைச் சுற்றல், உடல்நலக் குறைவு, வாதம், வலிப்பு போன்றவை இதற்கான அறிகுறிகள். கபால முறிவும் இதே போன்ற அறிகுறிகளைக் கொண்டதுதான். எனவே, தாமதிக்காமல் மருத்துவமனைக்குச் சென்று, தக்க சிகிச்சை மேற்கொள்வது உயிரைக் காக்கும்.

யாராவது விபத்தில் சிக்கினால், முதலில் தலையை ஆராய்ந்து, அடி பட்டிருக்கிறதா, ரத்தக் கசிவு உள்ளதா எனப் பார்க்க வேண்டும். கை, கால் எலும்பு முறிவுகளுக்கு தட்டையான பலகைகளை, ஆதாரமாகக் கொடுத்து,

ஆடாமல் அசைக்காமல் மருத்துவ மனைக்குக் கொண்டு செல்லவும். தலைக் காயம் உறுதி செய்யப்பட்டால், இன்னும் மின்னல் வேகத்தில் செயல்பட வேண்டும். அருகில் உள்ள அனைத்து வசதிகளும் கொண்ட மருத்துவமனைக்கு, தகவல் கொடுத்துவிட்டுச் சென்றால், நீங்கள் போய்ச் சேர்வதற்குள், மருத்துவக் குழுவும் தயார் நிலையில் இருப்பார்கள்.

தலையிலிருந்து ரத்தம் கொட்டினால், காயத்தின் மீது சுத்தமான துணி கொண்டு தளர்வான கட்டு போடவும், கழுத்தை அசைக்கக் கூடாது. ஒருவேளை கழுத்து முறிவு ஏற்பட்டிருந்தால், ஆபத்தில் முடியும்.

பாதிக்கப்பட்டவர், மருத்துவமனையை அடைந்ததும், ஆக்ஸிஜன் சிலிண்டரை இணைப்பது, விபத்துக்குள்ளானவரின் இருதயத் துடிப்பு, ரத்த அழுத்தத்தைக் கண்காணிப்பது, தலையை ஸ்கேன் செய்வது, ரத்தம் ஏற்றுவது என எல்லாமே ஒரே நேரத்தில் மிக வேகமாகச் செய்யப்படும்.

ஜி.சி.எஸ். (கிளாஸ்கோ கோமா ஸ்கேன்) அளவுகோலைப் பொறுத்து, அடிப்பட்ட மூளையின் தீவிரம் அபாயகரமானதா இல்லையா எனத் தீர்மானிக்கப்படும். அளவுகோல் 8க்கும் கீழே இருந்தால், மிக அபாயம் 9 - 12க்குள் என்றால், மிதமான காயம். 13- 15க்குள் என்றால் சாதாரண தலைக் காயம் என்று உறுதி செய்யப்படும்.

தலையில் அடிபட்டவருக்கு, மூளையில் அதிர்ச்சியோ, ரத்தக் கட்டியோ உருவாகி உள்ளதா எனக் கண்டறிவதும் மிக மிக முக்கியம். இப்படி உருவாகும் ரத்தக் கட்டிகள், ரத்த ஓட்டத்தை வெகுவாக பாதிக்கும் என்பதால், உடனடியாக அவை அகற்றப்பட வேண்டும்.

தலையின் உள்ளே இருக்கும் வீக்கமும் தீவிரமாகக் கண்காணிக்கப்பட வேண்டிய ஒன்று. அடிபட்டவுடன் உருவாகும் வீக்கம், மூன்று, நான்கு நாட்களுக்கு வீங்கிக் கொண்டே போகும். தீவிர சிகிச்சையினால், இந்த வீக்கம் குறைய ஆரம்பிக்கும். அப்படிக் குறையவில்லை என்றால், நோயாளி, மரணத்தின் பிடியில் இருப்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

'எண் ஜாண் உடம்புக்கு தலையே பிரதானம்'... எனவே, டூ வீலர் ஓட்டிகள் தரமான ஹெல்மெட்டுகளைப் பயன்படுத்துங்கள். மரத்திலிருந்தோ, உயரமான கட்டடங்களிலிருந்தோ கீழே விழ நேர்ந்தால், உடனே மருத்துவமனைக்கு விரையுங்கள்.

அவசர கால சிகிச்சைப் பிரிவில், விஷம் அருந்தியவர்களின் சேர்க்கையும் மிக அதிகமாக உள்ளது. காதல் தோல்வி, குடும்பச் சண்டை, கடன் தொல்லை என விஷம் சாப்பிட்டு, தற்கொலைக்கு முயல்பவர்களில், குழந்தைகள்கூட விதிவிலக்கல்ல.

* டாக்டரிடம் செல்லும்போது, பயன்படுத்தப்பட்ட விஷபாட்டில், ரசாயன சாம்பிள், விஷச்செடி போன்றவற்றை கையோடு எடுத்துச் செல்லவும்.

* விஷம் அருந்தியவர், வாந்தி எடுத்திருந்தால், வாந்தியின் சாம்பிளையும் கொண்டு சென்றால், உடனடியாக சிகிச்சை மேற்கொள்ள உதவியாக இருக்கும்.

**- மினி**



## யோக வாசிஷ்டம் - தமிழில் சிவராம கிருஷ்ண சர்மா

'மனித தேகமே அகங்காரம் வளர்க்கும் ஆதாரம் - ஆனால் தேகத்தின் உள்ளே ஆன்மாவைத் தேடலே ஞானம் - எனில் தேகத்தை ஆதரிப்பதா, புறக்கணிப்பதா?' - மனிதனாக அவதாரம் செய்த ஸ்ரீ ராமனின் கேள்வியிது. மனித சிந்தைக்கே சொந்தமான சந்தேகத்தின் தேகம் அழிந்து, ஞானம் பெற, வசிஷ்டர் செய்த உபதேசங்களின் விளக்கம். ஞானப் பாதைக்கு வழிகாட்டி.

**நர்மதா பதிப்பகம், 10, நானா தெரு, தி.நகர், சென்னை - 600 017. விலை ரூ.100.**

## மகாலி என்னும் மகாலிங்கம் - பஞ்சாட்சரம் செல்வராஜன்

"வந்ததை யார் தடுத்தார், இனி வருவதை யார் மறுப்பார்?" என்று வாழ்க்கையைச் சொல்லிப் போனான் கவி. லட்சியம், கொள்கை ஏதுமின்றி, அமைகிற வாழ்வைச் சுமப்பவர்தாம் நம்மில் பலர். இதையே அடித்தளமாக்கி, வாழ்கிற இடத்தையும் பாத்திரமாக்கி, யதார்த்த வாழ்வின் நிகழ்வுகளை அதன் போக்கிலேயே சொல்லும் சிறுகதைகளின் தொகுப்பு.

**அன்னை சாரதா பதிப்பகம், 5050, பொன்னி குடியிருப்பு, அண்ணா நகர் மேற்கு, சென்னை - 40. விலை ரூ.75**

## மருத்துவ அறிவியல் - ஜோ ஜாய்ஸ் திலகம்

வாயைத் தவிர நம் உடலின் உறுப்புகள் பேசத் தொடங்கிவிட்டால் எப்படி இருக்கும்? கற்பனைதான், ஆனாலும் நாம் அறிந்தும் அறியாமலும் மேற்கொள்ளும் பழக்க வழக்கங்களால், நம் உடல் எந்த அளவுக்கு பாதிக்கபடுகிறது என்பதையும், எப்படி நம்மைக் காத்துக் கொள்ள முடியும் என்பதையும் சற்று வேறுபட்ட முறையில் விளக்கும் மருத்துவ நூல்.

**திலகம் பதிப்பகம், 4, ஜே.டி. துரைராஜ் நகர், எம்.எம்.டி.ஏ. வாட்டர் டேங்க் ரோடு, அமைந்தகரை, சென்னை - 600 029. விலை ரூ.100**

## செந்தமிழ் வளர்த்த சிங்கப்பூர் அ.நா. மொய்தீன் - செ. திவான்

தமிழின் வரலாறு பல வெளிநாடுகளில் வெறும் மொழியின் வரலாறாக இல்லாமல், அந்நாட்டின் வரலாறாகவே வளர்ந்திருக்கிறது. கடாரம், ஸ்ரீ விஜயம் என்று முன்னர் தமிழர் கொடி பறந்து, தற்போது மலேஷியா, சிங்கப்பூர், ஜாவா என்று ஆகிவிட்ட தனி நாடுகளில் மீண்டும் தமிழ்க் கொடி பறக்கவிட்டு, அந்நாட்டின் வரலாற்றுடன் இணைந்து விட்டவரின், தமிழரை தலைநிமிரச் செய்யும் வரலாறு.

**சுஹைனா பதிப்பகம், 106 எஃப், 4ஏ, திருவனந்தபுரம் ரோடு, பாளையங்கோட்டை - 627 002. விலை ரூ.100**

**- விஷ்வக்**



# மகுட வைரம்

ஸ்ரீஜ் வக்கேஷனன்

## 5. வரகுணன் திட்டம்

**சோ**ழர்களின் தலைநகராக விளங்கியதும், பெண்ணாகடத்துப் போருக்குப் பின் பாண்டியர் வசமாகிவிட்டதுமான உறையூரின் கோட்டை மதில்கள் உயர்ந்து வெகுதூரம் வரை நீண்டு கிடந்தது. மேற்புறத்தில் சதா உலவிய வீரரும், ஆங்காங்கே அம்புகளையும், வேல்களையும் எறியும் மாடங்களும், ஆழமான அகழியும், அந்தக் கோட்டையை நெருங்குவதோ, கைப்பற்றுவதோ, அத்தனை எளிதல்ல என்பதை நிருபித்துக் கொண்டிருந்தன.

கோட்டையின் தென்புறத்து வாயிலை அடுத்து, உட்புறம் விரிந்து கிடந்தது ஒரு திடல். கதிரவன் மறையும் அந்த நேரத்தில் ஊதப்பட்ட கொம்புகளை அடுத்து, திடலெங்கும் நிரம்பிக் கிடந்த வீரர்கள் வியர்க்க விறுவிறுக்க பயிற்சிகளை முடித்து நின்றிருந்தனர். முகப்பில் நின்று வீரர்களை கவனித்துக் கொண்டு நின்றிருந்தவரின் உடலும் வியர்வையில் நனைந்து கிடந்தது. பார்வைக்கு மெல்லியதாகத் தெரிந்த அவரது தேகம், அவரது கரத்தில் பிடித்திருந்த ஈட்டியைவிட நேராக அத்தனை உறுதியுடன் நிமிர்ந்து நின்றிருந்தது. மார்பின் குறுக்கே ஓடிய முப்புரிநூல் அவர் அந்தணரென்பதைத் தெரிவித்தது.

மறுதினம் புரவியேற்றமும், போர்க் களிறுகளின் பயிற்சியும் இருக்குமென அறிவித்தவர், வீரர்களைக் கலைந்து செல்ல உத்தரவிட்டுத் திரும்பி, வீரன் ஒருவன் கொண்டு வந்து நிறுத்திய புரவியில் தாவியேறினார். வடக்கு வாயிற் கதவுகள் அவரைக் கண்டதும் திறந்தன. பழகிய பாதையில் நிதானமாக நடந்த புரவி, காவிரிக் கரையை அடைந்து நின்றது. புரவியை விட்டு இறங்கியவர் நீரிலிறங்கி, ஒருமுறை தலையை நீரில் முழுகி எழுந்து, தம் நீண்ட கரங்களை வீசிப்போட்டு, மறு கரையை நோக்கி நீந்தினார். மறுகரையை அடைந்தவர், காவிரியின் மணலை எடுத்து கரங்களிலும், உடலிலும் தேய்த்துக் கொண்டு மீண்டும் காவிரியில் பாய்ந்தார். கரையை நெருங்கி இடுப்பளவு நீரில் நின்று, சந்தியா கால ஜபத்தையும் முடித்துக் கரையேறினார். புரவி நெருங்கி வந்தது. பக்கவாட்டிலிருந்த துணியை எடுத்து தலையைத் துவட்டி உடலையும் துடைத்தவர், சட்டென்று நின்றார். அவர் செவிகள் எதையோ உற்றுக் கேட்டன. சட்டெனத் திரும்பியவரின் விழிகளில், விபரீத ஒளியொன்று பளிச்சிட்டது.

இருள் கவியத் தொடங்கிய அந்த முன்னிரவில், காவிரிக் கரையை அடுத்திருந்த மரக்கூட்டங்களிடையே திடீரென பந்தமொன்று எரிந்தது. கையில் பந்தத்தை ஏந்தியபடி புரவியிலமர்ந்து அவர் பார்வைக்கு நேரே வந்தான் ஒருவன். நெற்றியிலிருந்த தழும்பு, பந்தத்தின் ஒளியில் இன்னும் தெளிவாகத் தெரிந்தது. தொடர்ந்து மரங்களின் மறைவுகளிலிருந்து வாட்களை ஏந்திய பலர் அந்த மனிதரை நோக்கி முன்னேறினர்.

பளபளத்துத் தெரிந்த வாட்களையோ, தம்மைச் சூழ்ந்து கொள்ள முற்படுபவர்களையோ, அந்த மனிதர் சட்டை செய்ததாகத் தெரியவில்லை. புரவியிலிருந்தவனை உற்று நோக்கியவரின் குரல் வெகு நிதானத்துடன் ஒலித்தது. "ராகுலா, என் எச்சரிக்கையையும் மீறி, மீண்டும் தமிழ் மண்ணில் அடியெடுத்து வைத்திருக்கிறாய். உயிர்மீது ஆசையிருக்கும் பட்சத்தில் இப்படியே திரும்பிச் சென்றுவிடு. வீணாக இந்த வீரர்களை பலியாக்காதே. கூடியவரை விரைவில் நேரிடையான போரில் சந்திப்போம். சென்றுவிடு"



அவரை நெருங்கியும் சற்றே தயங்கிய வீரர்களை நோக்கி ராகுலன் இரைந்தான், ''ஏன் தயங்குகிறீர்கள்? அவரைக் கொன்று விடுங்கள்'' என்று.

அவன் வார்த்தைகள் முடியுமுன்பு அவர் நெருங்கிய வீரர்களிடையே பாய்ந்து விட்டிருந்தார். முதலில் நெருங்கிய இரு வீரர்களையும் அவரது கரங்கள் தாக்கிச் சுழற்றி இருவரையும் பக்கத்துக் கொருவராய் எறிந்தன. அந்த வீரர்களின் வாட்கள் இரண்டும் அவரது கரங்களுக்கு மாறி சுரசுரவெனச் சுழல ஆரம்பித்தன. ராஷ்டிரகூட வீரர்கள் அதுவரை வாழ்நாளில் கண்டறியாத அதீத

வேகத்தில் சுழன்ற அந்த வாட்கள், இரண்டொரு கணங்களிலேயே ராஷ்டிர கூடர்களை மண்ணில் சரிய வைத்துவிட, நிதானமாக அடி வைத்து முன்னேறிக் கொண்டிருந்தார் அவர். புரவியிலமர்ந்து பார்த்துக் கொண்டிருந்த ராகுலனின் முகத்தில் ஆத்திரம் பொங்கியது. பந்தத்தை இடது கரத்துக்கு மாற்றியவன், புரவியின் பக்கவாட்டில் தொங்கிய பெரும் ஈட்டி ஒன்றை எடுத்து, அந்த மனிதரை நோக்கி கன வேகத்தில் எறிந்தான். வாட்போரிலும், குறி தவறாது ஈட்டியெறிவதிலும் இணையற்றவனென்று ராஷ்டிரகூடத்தில் பெயரெடுத்திருந்த ராகுலனின் அந்த ஈட்டி அன்றும் குறி தவறாமல் பாயத்தான் செய்தது.

பிறப்பும் இறப்பும் எக்காலத்திலும் மனிதனின் கரங்களில் இருந்ததில்லை. ஆண்டவன் நிர்ணயித்திருக்கும் நேரம் வந்தாலொழிய, பிறப்பும், இறப்பும் நிகழ்வதுமில்லை. ராகுலனுக்கு அந்த உண்மை அந்த காவிரிக் கரையில், அன்று தெளிவாகவே புரிந்தது.

ராகுலனும், ராஷ்டிரகூட வீரரும், ஏன், அசுர வேகத்தில் வாட்களைச் சுழற்றிக் கொண்டிருந்த பாண்டியர் படைத்தலைவரும் கூட எதிர்பாராத நிகழ்ச்சியொன்று அடுத்து நிகழ்ந்தது.

ஈட்டியின் பாதையை மறித்து, பெரும் புரவியொன்று காற்று வேகத்தில் வந்தது. உயர்த்திய வாளுடன் புரவியிலமர்ந்து வந்த வாலிபன், அந்த ஈட்டியைப் பாதியில் மறித்து இரண்டாக வெட்டியெறிந்தான். அடுத்து அந்தப் புரவி அரை வட்ட மடித்து ராகுலனை நோக்கிப் பாய்ந்தது. ராகுலன் பிரமித்தான்.

வந்தவனது நெற்றியில் சோழ நாட்டவன் என்று எழுதி ஒட்டியிருந்தது. அவன் கரத்திலிருந்த வாளைக் கண்ட ராகுலனின் தலை சுழலத் தொடங்கியது.

"இந்த வாள்... இந்த சோழ நாட்டவன் கரத்தில்... எப்படி வந்திருக்கக் கூடும்?" அந்த வாள் அதற்கு மேல் ராகுலனைச் சிந்திக்க விடாமல், அவனை நெருங்கி தாக்கத் தொடங்கியது. ராகுலனது திகைப்பை அந்த வாளும், அதைத் தாங்கிய வாலிபனின் வாள்வீச்சும் அதிகரித்ததென்றால், அதை இன்னும் உயர்த்த, இன்னுமொரு புரவியும் அங்கே நுழைந்தது. அதில் அமர்ந்து வந்தவரைக் கண்டதும் ராகுலனின் முகம் பேயறைந்தது போலாயிற்று. சோழ நாடு முழுவதும் ராஷ்டிரகூட வீரர்கள் சல்லடை போட்டுச் சலித்துக் கொண்டிருக்கும் சோழர் படைத் தலைவர் விக்கிரமவரையர் அந்த நேரத்தில், அங்கு, அதுவும் தன் திட்டங்களில் முதலாவதாக, பாண்டியர் படைத்தலைவரைத் தீர்க்க யத்தனிக்கும் நேரத்தில் வரக்கூடுமென்று கனவிலும் நினைத்திராதவனுக்கு, அச்சம் பிடரியைப் பிடித்துத் தள்ளியது. இரு படைத்தலைவர்களும் ஒன்று சேர்வதும், போதாக்குறைக்கு புதிதாக வந்த வாலிபனின் அந்த வாளும், அதன் வீச்சும்... இனி தானும் தன் வீரர்களும் உயிர் பிழைத்துத் தப்பிப்பதே பெரும் காரியம், என்பது திட்ட வட்டமாகப் புரிந்தது அவனுக்கு.

தன் வீரர்களைப் பின்வாங்கித் தப்ப உத்தரவிட்டவன், அந்த வாலிபனை பலமாகத் தாக்கிவிட்டுப் புரவியைத் திருப்ப முயன்றான். அடுத்த கணம் ராகுலனின் வாள் அவன் கரத்திலிருந்து பிடுங்கியெறியப்பட்டு, காவிரியின் வெள்ளத்தை நோக்கிப் பறந்தது. புரவியின் முதுகில் தழைந்து அதை மரங்களினிடையே இருளில் பாயவிட்ட ராகுலன், தப்பியோடி மறைந்தான்.

பாண்டியரின் பழம்பெரும் தலைநகரான மதுரையம்பதியின் அரண்மனை உச்சியில் பறந்த மீன்கொடி, அந்த முன்னிரவில் வீசிய காற்றில் படபடத்துக் கொண்டிருந்தது. அரண்மனை வாயிலிலும் உட்புறத்திலும் கூடியிருந்த வீரர்களுக்



கும், பிரதானிகளுக்கும், உப தலைவர்களுக்கும் படபடப்பு கொடியைவிட சற்று அதிகமாகவே இருந்தது. அதிலும் மதுரையின் கோட்டைத் தலைவனும், புரவிப் படைத் தலைவனுமான சொக்கத் தேவனின் இறுக்கிப் பிடித்த முஷ்டியும், தட்தட்டென்று எடுத்து வைத்த காலடியும், அவன் கொதிப்பு உச்சத்திலிருப்பதைப் புலப்படுத்தின.

அரை நாழிகை நேரத்தில் மன்னனின் வருகை அறிவிக்கப்பட்டது.

பல்லவ நந்திவர்மனை வெற்றி கொண்டதால், ஐடில பராந்தகனான நெடுஞ்சடையன் என்று மெய்கீர்த்திகள் எழுதப்பட்டவனும், குரு சரிதை கொண்டாடிய பரம வைணவன் என்பதால் சீவரன் என்ற விருதுப் பெயரும், வரகுண மகாராஜன் என்று போற்றப்பட்டவனுமான பாண்டிய வரகுணன், சபையில் பிரவேசித்தான். அப்போதே உறங்கச் சென்ற மன்னன் உடனே வந்திருக்கிறான் என்பதை, சாதாரண நூலாடையும், சற்றே கலைந்த குழல்களும் தெரிவித்தாலும், மன்னனின் சித்தம் முழு விழிப்பிலிருப்பதை தீர்க்கமான விழிகள் புலப்படுத்தின.

மன்னன் இருக்கையில் அமரும் வரையில் கவலை தோய்ந்த முகத்துடன் நின்றிருந்த பேரமைச்சர். ''மன்னவா, தங்களை இந்த நேரத்தில் எழுப்பியதற்கு மன்னிக்க வேண்டும். வந்திருக்கும் செய்திகள் அத்தகையவை'' என்றார். தொடர்ந்து,

''மன்னவா, கொற்கையிலிருந்து இன்று முன்னிரவில் வந்து சேர்ந்த முத்துக்களும் முழுவதுமாக வரவில்லை. வழக்கமான காவலுடன், எங்கும் நிற்காமல்தான் வந்திருக்கின்றன. முத்திரைகளுக்கும் சேதமேதும் இல்லை. ஆனால் முத்திரை ஓலையில் குறிப்பிட்டிருப்பதில் பாதியளவே இருக்கின்றன. எப்படி மாயமாகின்றன என்பதும் புரியவில்லை. இது இரண்டாவது முறை மன்னா.'' அமைச்சரின் குரலில் குழப்பம் பலமாக ஒலித்தது.

மன்னனின் முகத்தில் முறுவல் நெளிந்தது. அவன் விழிகள் அமைச்சரின் அருகில் சொக்கத் தேவன் அமைதியின்றித் தவிப்புடன் நிற்பதைக் கவனித்தன.

''சொக்கத் தேவா, நீயும் ஏதோ கூற விரும்புவதாகத் தெரிகிறது'' என்றான் மன்னன்.

''ஆம் பிரபு, பொன்னமராவதியிலிருந்தும், கோட்டாற்றுக் கரையிலிருந்தும் செய்திகள் வந்திருக்கின்றன'' என்றான் படபடப்புடன்.

''என்ன செய்திகள்?''

''நம் வீரர்களுக்காக சேமித்த நெற்கிடங்குகள் தீக்கிரையாக்கப்பட்டிருக்கின்றன. கோட்டாற்றுக் கரை ஆயுத சாலை தாக்கப்பட்டிருக்கிறது. தாக்கியவர் யாரென்பதும் அடையாளம் புலப்படவில்லை.''

''மன்னவா'' - அமைச்சரின் குரல் மீண்டும் ஒலித்தது.

''சொல்லுங்கள் அமைச்சரே''

''உறையூரில் நம் படைத்தலைவரும் இருதினங்களுக்கு முன் தாக்கப்பட்டிருக்கிறார். ஆனால் செய்தியைத் தாமதமாகவே அனுப்பிருக்கிறார். ஓலை கொண்டு வந்த வீரனும் விவரம் கூற மறுக்கிறான். காரணம் புரியவில்லை.''

''ஓலை கொண்டு வந்த வீரனை அழைத்து வாருங்கள்'' என்ற மன்னன் முகத்தில் சிந்தனை தெரிந்தது.

சற்றுக் கழித்து உள்ளே நுழைந்து வணங்கிய வீரன் ''மன்னவா, இந்த ஓலையை அவையில் கொடுக்கும்படியும், தங்களிடமும் இளவரசியாரிடமும் தனித்து விபரங்களைக் கூறும்படியும் படைத்தலைவர் உத்தரவு'' என்றபடி, ஓலையொன்றை எடுத்து பேரமைச்சரிடம் நீட்டினான்.

பேரமைச்சரிடமிருந்து ஓலையைப் பெற்று, பிரித்து, இரண்டு கணங்களே அதன்மீது விழிகளை ஓட்டிய மன்னன், ''வீரனே, பொதுவாக என்ன நடந்ததென்பதை அவையில் கூறலாம்'' என்றான் உத்தரவிடும் தொனியில்.

சற்றே தயங்கிய வீரன். ''மன்னவா, நம் படைத்தலைவர் மாலையில் பயிற்சிகளை



முடித்து, வழக்கமான காவிரித்துறைக்குச் சென்று, நீராடித் திரும்பும்போது ராஷ்டிர கூடர் இருபதின்மரால் சூழ்ந்து தாக்கப்பட்டார். நம் பழைய எதிரி ராகுலன் தலைமையில் அவர்கள் வந்திருப்பதாகத் தெரிகிறது'' என்றான்.

வீரன், ராகுலன் பெயரை உச்சரித்ததுமே, அவையில் பலவித ஆவேச ஒலிகள் எழுந்தன. ''ஆகா, ராகுலனா... மறுபடியுமா?... ஓகோ... இப்போதே புறப்படலாம்... உறையூர் வீரர்கள் விட்டார்களா?'' படைப்பிரிவுகளின் ஆவேசக் குரல்கள் பலவிதமாக ஒலிக்க, சொக்கத் தேவனின் வாள் உறையிலிருந்து பாதிக்குமேல் வெளி வந்திருந்தது.

மன்னனின் கரம் உயர்ந்து அனைவரையும் தேக்கியது. கூர்விழிகள் அவையை ஒருமுறை அளந்தன. அந்த வீரனை ஒருமுறை உற்று நோக்கியவன், ''வீரனே, நீ உள்ளே சென்று இளவரசியாரைக் கண்டு, விபரங்களைக் கூறிவிட்டு அங்கேயே இரு. நான் பிறகு வருகிறேன்'' என்றான்.

வீரன் உள்ளே சென்றதும் அவையை நோக்கியவன், ''அமைச்சரே, உப தலைவர்களே, நடந்திருப்பவை அனைத்தும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. எவரிடமும் இது பற்றிப் பேசவேண்டாம். அமைச்சரே, நான் கூறும் வரை, காணாமற்போன முத்துகளைப் பற்றி எந்த விசாரணையும் வேண்டாம். சொக்கத் தேவா, நம் படைத்தலைவருக்கு ஓலை யனுப்பி, பயிற்சி முடித்த வீரர்களை உடனே அனுப்பி வைக்கச் சொல். எல்லாக் கோட்டைத் தலைவர்களுக்கும் எச்சரிக்கை ஓலை அனுப்பி விடு. அன்னியர் எவர் இருந்தாலும் தீர விசாரிக்கச் சொல்'' என்றான்.

மன்னன் முகத்தில் விரிந்த சிந்தனையும், நிதானமாக வெளிவந்த திடமான உத்தரவுகளும், நடந்திருக்கும் புதிர்களுக்கு அவன் விடை கண்டு விட்டானென்பதையும், அதைத் தீர்க்க பலமான திட்டம் வகுத்து விட்டானென்பதையும் புலப்படுத்தின.

அவையை முடித்து அரண்மனைக்குள் திரும்பிய மன்னன் அந்தப்புர வாயிலை அடைந்ததும் சற்று நிதானித்தான்.

உறையூரிலிருந்து வந்த வீரன், இளவரசியிடம் நடந்தவற்றை விவரித்துக் கொண்டிருந்தான். இடையே வீரன் உச்சரித்த பெயர்களைக் கேட்ட மன்னன் முகத்தில் பெரும் வியப்பு பரவியது. தொடர்ந்து அவன் முகத்தில் கனவுச் சாயை மெல்லப் படர்ந்து முழுவதுமாக ஆக்கிரமித்தது.

(தொடரும்)



## புதுசு கண்ணா புதுசு!

சென்னை நகரில் பல இடங்களில் நஞ்சில்லாத காய்கறிகளும் உணவுப் பொருள்களும் விற்பனை செய்யப்படுகின்றன. இவை பூச்சி மருந்து தெளிக்காமல், செயற்கை உரங்களைப் போடாமல் இயற்கை விவசாயம் மூலம் உற்பத்தி செய்யப்பட்டவை என்பதால் விலையும் கொஞ்சம் கூடுதல்!

- மு. சுந்தரம்




✉ 'தராசு' அளித்துள்ள பதில், அவ்வளவு பொருத்தமாகப் படவில்லை; தேச நலனுக்காக நடைப்பயணம் மேற்கொண்டவர்கள் அன்றும் இருந்தார்கள்; இன்றும் இருக்கிறார்கள். உதாரணம் : ம.தி.மு.க. தலைவர் வைகோ, 5.8.2004ல் நெல்லையிலிருந்து, 1300 தொண்டர்களுடன் துவக்கிய நடைப் பயணம், சாதி, மத மோதல்களை அகற்றுதல், மத நல்லிணக்கம், நதி நீர்களை இணைத்தல், என பல பொது நல நோக்கங்கள் கொண்டது.

நெல்லை, இ.க.சி.

✉ 'மனிதன் காலில் பட்ட பூமி மட்டும் (தான்) பிரிந்து கிடக்குது' என்று கவிஞர் பாடினார். இன்று தண்ணீருக்குமல்லவா அது பொருந்தி விட்டது?

ஆதமங்கலம்புதூர், கே. சண்முகம்

✉ 'தண்ணீர் யாருக்குச் சொந்தம்?' கட்டுரை ஆழமாகச் சிந்திக்கத் தூண்டியது. இந்திய அரசியல் சட்ட விதிகள், நம் நதி(விதி)களோடு விளையாடுவதை எப்படித் தீர்த்து வைக்கப் போகிறதோ?

கும்பகோணம், சாமிநாதமூர்த்தி

✉ இயற்கைக்கு எதிராக ஊதாரித்தனமாக நிலத்தடி நீரை எடுத்துச் செலவு செய்தால் பூமி வெடித்துச் சிதறாமல் என்ன செய்யும்!

மேல்பட்டி, . எல்.மாறன்

✉ செய்திகள் பா.ம.க.வை கோபப்படுத்தினால், வழக்குத் தொடரட்டும்! அலுவலகத்தை அடித்து நொறுக்கிய ஆள், குண்டர் சட்டத்தில் இப்போது உள்ளே. மொத்தத்தில் பா.ம.க. தான் திருந்த வேண்டும்.

மதுரை, இரா. கல்யாணசுந்தரம்

✉ போக்குவரத்துத் துறை பற்றிய 'பகீர்' விவரங்களைப் படித்ததும் என் இதயம் ஒரு கணம் அப்படியே பிரேக் டவுன் ஆகிவிட்டதுங்க!

வேலூர், வே.த. கதிர்வேல்

✉ பரிதாபத்துக்குரிய தொழிலாளர்களுக்காக பரிந்து எழுதப்பட்ட தலையங்கத்தில் மனித நேயம் மிகுந்திருந்தது.

மதுரை, என். பாலகிருஷ்ணன்

# பகீர் பிரேக்டவுன்!

✉ பத்மஸ்ரீ சுதா ரகுநாதன், பல பிரபலங்களைப் பற்றிச் சொன்னதைவிட "என் பிரபலம் கணவர் ரகுதான்" என்றது, மிகமிக அருமை.

சென்னை, அய்யாறு வாசுதேவன்

✉ ஆசிரியர் எழுதும் ஒரேயொரு பக்கக் கட்டுரை, ஓர் ஒப்பற்ற விஷயத்தை வெகு அழகாக விளக்குகிறது.

வடலூர், வெ. லட்சுமிநாராயணன்

✉ சுந்தலான கமர்ஷியல் படங்களுக்கு மத்தியில், கண்ணியமான படமாக வெளிவந்துள்ள 'அழகிய தீயே'வுக்கு உங்கள் விமர்சனம் மேலும் உற்சாகத்தைத் தந்திருக்கும்!

பொன்மலை, ஆர். பிரகாஷ்

✉ 'அழகிய தீயே', 'அழகி', 'பெல்ஹாம் அழகுப் பெண்' என அழகைச் சுற்றியே வந்ததே கல்கி. சென்ற வாரம் அழகுச் சிறப்பிதழா?

சென்னை, மயிலை கோபி

# உரிமை, கடமை,

அ.தி.மு.க. ஆட்சி கலைக்கப்படுமா? ஆட்சி மாற்றம் வருமா என்று ஆலாய்ப் பறக்கிற ஆசாமிகளுக்கு ஒரு ரகசியம்! ஆட்சியும், காட்சியும் மாறுகிறதோ இல்லையோ, உண்மையான மக்களாட்சி தழைத்தோங்கும் வகையில் 'உந்துனர் அறக்கட்டளை' (The Catalyst Trust) காதும் காதும் வைத்த மாதிரி தமிழகம் முழுவதும் 'மக்கள் மையங்களை' அமைத்துக் கொண்டிருக்கிறது.

இந்த மக்கள் மையங்களின் பணி என்ன? அவற்றின் பின்னணியில் யார் யார் இருக்கிறார்கள்? அவை எப்படி இயங்கப் போகின்றன? உந்துனர் அறக் கட்டளையின் அறங்காவலர்களில் ஒருவரும், முன்னாள் தமிழக தலைமைச் செயலாளருமான அ.கி.வெங்கடசுப்ரமணியன் ஐ.ஏ.எஸ். விளக்கினார்:





**இப்போது நடந்து கொண்டிருப்பது மக்களாட்சிதானே, பிறகேன் இந்த மக்கள் மையங்கள்?**

இன்று நமது ஜனநாயக அமைப்பு, எம்.எல்.ஏக்கள், எம்.பிக்கள் போன்ற மக்கள் பிரதிநிதிகளின் ஆட்சியாகவே இருக்கிறது. மக்கள் ஆட்சியில் பங்கேற்றல் என்பது மிகக் குறைவு. இதே நிலை தொடர்ந்தால், வெறும் பார்வையாளர்களாக மட்டும் மக்கள் இருக்க வேண்டிய நிலை ஏற்பட்டு விடும். இந்த நிலையை மாற்றிட குடிமக்களை முதலில் தயார்ப்படுத்தி, அவர்களுடைய சிந்தனை, செயல் அனைத்தையும் ஆட்சி அமைப்பை நோக்கித் திரும்ப வேண்டும். இதனைச் செய்வதற்குத்தான் மக்கள் மையங்கள். இந்த மையங்கள் குடிமைப் பண்பு (அனைத்து வகைகளிலும் நல்ல குடிமகனாக இருத்தல்) மிக்க குடிமக்களை உருவாக்கும். வோட்டுப் போட்டு விட்டு தூங்கிப் போய்விடும் மக்களைத் தட்டி எழுப்பும். 'குடி உயர்ந்தால் கோல் உயரும்' என்பது நம் எதிர்பார்ப்பு.

**நமது குடிமக்கள் தங்கள் குடிமைப் பண்புகளை உணரவில்லை என்கிறீர்களா?**

யாரும் உணர்த்தவும் இல்லை. குடிமைப் பண்பு என்பது பொது நன்மைக்காகச் செயல்படும் ஆர்வமும், அதே சமயம் மற்றவர்களின் உணர்வுகள், தேவைகள், மனப்போக்கு இவற்றை மதிக்கும் தன்மையும் இணைந்தது. பல பொதுப் பிரச்னைகள், அனைத்துத் தரப்பு மக்களையும் ஜாதி, மத கட்சி வேறுபாடின்றி பாதிக்கின்றன. விழிப்புணர்வும், தட்டிக் கேட்கும் துணிவும் இருந்தால்தானே, பொதுப் பிரச்னைகளை மக்கள் அணுகுவார்கள்? உரிமைகளை உணர்வதால் பிறக்கும் விழிப்புணர்வுக்கு வழி செய்வது; அவ்வாறு விழிப்புணர்வு கொண்டோர் இணைந்து செயல்பட வகை செய்வது.... இவையே எங்கள் நோக்கம்.

**மக்கள் மையங்கள் அரசியல்வாதி**

• அ.கி.வெங்கடசுப்ரமணியன்



**களுக்கு எதிரான அமைப்புகளா?**

நிச்சயமாக இல்லை. அரசியல்வாதிகள், அதிகாரிகளின் ஒத்துழைப்போடு, அவர்களை மேலும் பயன்படுத்திக் கொள்ளும் நெட்ஒர்க் மையங்களாகவே அவை

# குடிமை!

இயங்கும். இங்கே தலைவர், செயலாளர் பதவிகளுக்கு வேலையில்லை. மன்றமோ, சங்கமோ இல்லை. மக்கள் மையம் என்பது கூட்டுச் செயல்பாடு. பண்புள்ள மக்களாக தங்களை உருவாக்கிக் கொள்ள காலமும், இடமும் தேவை. ஜாதி, மத, கட்சி, தொழில் அடிப்படையில் மக்கள் சந்திக்க இடமிருக்கிறது. ஆனால் குடிமக்கள் என்ற அடிப்படையில் மக்கள் ஒருவரையொருவர் சந்திக்க இடமில்லை. எனவே தான் மக்கள் சந்திக்கும் இடமாக மக்கள் மையங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

**இதுவரை எத்தனை மையங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன?**

உந்துனர் அறக்கட்டளை, ஃபோர்டு பவுண்டேஷன் நிதி உதவியுடன் எழுபத்தைந்து மையங்களை ஏற்கெனவே தொடங்கி விட்டோம். அடுத்த ஆண்டு, மேலும் எழுபத்தைந்து மையங்கள் பிற மாவட்டங்களில் தொடங்கப்படும். ஓய்வு பெற்ற அரசு அலுவலர்கள், உயர் அதிகாரிகளுக்கான அமைப்புகள், ஊராட்சிகள், இதர தன்னார்வ அமைப்புகள் என்று, ஒவ்வொரு ஊரிலும் தனித் தனியே செயல்பட்டு வரும் அமைப்புகள், மக்கள் மையத்தில் ஒரே நெட் ஒர்க்காக இணைந்தும் பணியாற்றலாம். அதனால் தான் 'மக்கள் செயல் இணையமாக'வும் மக்கள் மையங்களைக் கட்டி எழுப்புகிறோம்.

அடிப்படை ஜனநாயகக் கடமை, ஆட்சி முறை எப்படி நடக்கிறது, தங்கள் உரிமைகள் என்ன, குடி மக்கள் என்ற முறையில் தெரிந்து கொள்ளக் கூடிய விவரங்கள், என்னென்ன என்று அத்தனை தகவல்களும் திரட்டப்பட்டு, மக்கள் மையத்தில் இருக்கும். முதலில் மக்கள் மையம் ஒரு தகவல் மையமாக பணியைத் தொடங்கும். அடுத்து 'உரையாடல் மையமாகும்'. மக்கள், தங்கள் கருத்துகளையும், சந்தேகங்களையும் கலந்து பேச வேண்டும். அடுத்த கட்டமாக விவரம் தெரிந்த துறை நிபுணர்களையும், பழுத்த அனுபவத்தோடு ஓய்வு பெற்ற உயர் அதிகாரிகள், அலுவலர்கள் போன்றோரையும் அழைத்து, 'உரையாற்றும் மையமாக'வும் செயல்படும்.

அடுத்தகட்டமாக தமது பகுதிகளில் நடைபெறும் அரசுப் பணியின் குறைபாடுகள், முறைகேடுகள், சுற்றுச் சூழல், மாசுபடுதல் போன்றவற்றைக் கண்டறிந்து சம்பந்தப்பட்ட அலுவலர்களுக்குச் சுட்டிக்காட்டும் கண்காணிப்பு மையங்களாக உயரும். இறுதி இலட்சியம், இளைஞர் சக்தி, மகளிர் சக்தி, உள்ளிட்ட மக்கள் சக்தியை ஒருங்கிணைத்து, அவரவர் பகுதியின், சமூக, பொருளாதார நிலைகளை மேம்படுத்துவதுதான். இதற்கான செயல்திட்டத்தை உந்துனர் அறக்கட்டளை வடிவமைத்துத் தந்துள்ளது. உந்துனர் அறக்கட்டளை, ஓரிரு ஆண்டுகளுக்குத்தான் இந்த மையங்களுக்கு நிதி உதவி செய்து கண்காணிக்கும். அதன் பிறகு அவை தாமே செயல்படும் என்று எதிர்பார்க்கிறோம்.

- **ஜெயந்தன்**

படம்: **டி.ஜி. சண்முகம்**

சிறைக்குள் சிறுத்தை-4

## கண்ணாடிக் கல்வெட்டுகள் 12

ஊமைத்துரைக்கு
இன்னும் சில தினங்களில்
மரண தண்டனை என்று தீர்ப்பானது!

ஊமைத்துரை முகத்தில்
ஒட்டியிருந்த தசைகள்
பாறாங்கல்லாய் இறுகியது!

''புலிகுத்தியானே
என் ஆவியையாவது
மருது சகோதரரிடம் சேர்ப்பாயா?''

ஊமைத்துரை விரக்தியாய்
உச்சரித்தான்!

''பொறுங்கள் துரையே
இன்னும் கொஞ்சம் பொறுங்கள்.
நீங்கள் தப்புவது என்னுடைய
தலைமேல் ஆணை'' என்றான்
புலிகுத்தியான்.

அந்த நாள் வந்தது!
மறுநாள் பூக்களை,
மறுநாள் விடியலை
ஊமைத்துரை பார்க்க முடியாது!

பொழுது புலர்ந்தால்
சூரிய உதயத்தின் முன்னால்
தூக்கில் உடல் ஊசலாடும்!

புலிகுத்தியானால் இனி
என்ன செய்ய முடியும்?
பகல் முழுதும்
ஊமைத்துரை எண்ணினான்.

தாய்மண்ணைத் தவிக்கவிட்டு
வீணே போகப் போகிறது உயிர்.
ஊமைத்துரையின்
கண்களும் இதயமும் கலங்கின!

அன்று மாலையும்
புலிக்குத்தியான் தன் சகாக்களோடு
நால்வராய் எண்ணப்பட்டு
சிறையிலிருந்து வெளிவந்தான்!

இருட்டு மெல்ல மெல்ல
இறங்கிக் கொண்டிருந்தது
பூமியின் படிகளில்...

அமைதி!
மௌனம்!
மறுநாள் வைகறைப் பொழுதில்
ஒருவரின் உயிர்
மறையப் போகிற தென்று
பாளையங்கோட்டைச் சிறையே
இயங்காமல் இருந்தது!

விடியலின் கதிர்கள் மண்ணை
விரல்களால் தொட்டுவிட்டு
கால்பதிக்கக் காத்திருந்தக் காலம்!

பறவைகளின் சிறகு முறிப்பு
மொட்டுகளின் தாழ்திறப்பு!
விடிந்தும் விடியாத வானத்தின்
கருஞ்சாயல் வெளுப்பு!

தூக்கு மரமும்
தூக்குக் கயிறும்.
அருகே ஊமைத்துரை

வெள்ளைச் சிப்பாய்கள்
ஜெனரல் மார்ஸ் கட்டளைக்காகக்
காத்திருந்தனர்!
மார்ஸ் தலையசைத்தான்!
ஒரு படிவம் வாசிக்கப்பட்டது!

"பெயர் ஊமைத்துரை
வயது முப்பத்தெட்டு
செய்த குற்றம் வெள்ளையர் அரசை
எதிர்த்து பல முறை
கலகமும் கொலைகளும்
செய்தது!
அதற்காக 1801 பிப்ரவரி 2ம் தேதி
மரண தண்டனை நிறைவேறுகிறது."

பா. விஜய்

ஒரு சில நிமிடங்களில்
மிகுந்த வலித்துடிப்புடன்
ஆழ்ந்த சிரமச் சத்தத்துடன்
உயிர் பறந்தது!

உயிர் துவண்டு உடல்
நீண்ட நேரம் கயிற்றில் தொங்கி
இறக்கப்பட்டது!

ஒரு வெள்ளைச் சிப்பாய் கத்தினான்
"ஜெனரல் அவர்களே
ஜெனரல் அவர்களே

இது ஊமைத்துரை அல்ல
ஊமைத்துரை அல்ல!
நம் சிறைக்கு விறகு வெட்டவரும்
புலிக்குத்தியான்"

அதே நேரம்
முந்தையநாள் மாலை
புலிக்குத்தியான் திட்டமிட்டபடி
நால்வரோடு ஒருவராய் - கலந்து
சிறையிலிருந்து வெளியேறிய
ஊமைத்துரை...

குதிரைகள் பறக்க
விடியவிடிய பயணித்து
சிவகங்கைச் சீமையை சமீபித்திருந்தான்.

'இந்நேரம் புலிக்குத்தியான்
தன்னிடம் சொன்னபடி
சிறையிலிருந்து தப்பியிருப்பான்' என்ற
திடமான நம்பிக்கையுடன்
ஊருக்குள் நுழைந்தான் ஊமைத்துரை!

தமிழனின் வரலாறு
பல இடங்களில் வீழக் காரணம்
தமிழன் செய்த துரோகங்கள்!

தமிழனின் சரித்திரம்
பல இடங்களில் நிமிரக் காரணம்
தமிழன் செய்த தியாகங்கள்!
புலிக்குத்தியான் ஒரு
புரட்சித் தியாகி...

(அடுத்து வேறு ஒரு ஊரில் சந்திப்போம்)

# ஆதரவற்றோருக்கு ஒரு ஆலயம்







''ஏதோ வாழ்ந்தோம் என்பதை விட எப்படி வாழ்ந்தோம் என்பதுதான் முக்கியம்'' என்றனர் நமது ஆன்றோர். ''நமது ஆயுட் காலத்தில் மற்றவர்களுக்கு நம்மால் முடிந்த உதவிகளை செய்து ஆத்ம திருப்தி அடைவதில் கிடைக்கும் இன்பமே முழுமையான இன்பம்'' என்றார் காப்மேயர். இந்த வார்த்தைகளுக்கு செயல் வடிவம் கொடுத்திருக்கிறது கோவையிலுள்ள தி யுனைடெட் ஊனமுற்றோர் பள்ளி. கோவையிலிருந்து சத்தியமங்கலம் செல்லும் சாலையில் சர்க்கார்சாமக்குளம் பஞ்சாயத்து யூனியனுக்கு உட்பட்ட குரும்பபாளையம் என்ற சிறு கிராமத்தில், கடந்த 11 வருடங்களாக சொந்த இடத்தில் இயங்கி வரும் இந்த பள்ளி, ஆதரவற்றோருக்கு ஆலயமாகவும், நிழல்தரும் ஆலமரமாகவும், ஊனமுற்றவர்களுக்கு ஓர் உன்னத பள்ளியாகவும் திகழ்கிறது. நிம்மதி தரும் ஆலயமாகத் திகழும் இந்த பள்ளிக்கு சென்று பார்வையிடும்போது ஊனமுற்ற அனாதைக் குழந்தைகள் எந்த விதத்தில் ஊக்குவிக்கப்படுகிறார்கள் என்பது கண்கூடாகத் தெரியும். உடலில் ஊனம் இருந்தாலும் மனம் தளராமல் இந்த மாணவர்கள் தன்னம்பிக்கையுடன் செய்யும் பல அரிய செயல்களைக் கண்டால் நமது மனதில் ஏற்படும் மகிழ்ச்சியே தனி.





கோவை, காந்திபுரத்திலிருந்து 15 கிலோமீட்டர் தூரத்தில் அமைந்திருந்தாலும்கூட, பொது மக்கள் பலர் தங்களது பிறந்தநாள், திருமண நாள், மூதாதையர்களின் நினைவுநாள் ஆகிய நாட்களில், இந்த பள்ளிக்குச்சென்று ஒரு நாள் உணவு வழங்கி கொண்டாடி மகிழ்கின்றனர்.

இயன்றதை செய்வோம்! இல்லாதவர்களுக்கு!!

கை, கால் ஊனமுற்ற 110 அனாதை மாணவ, மாணவிகள் இந்த பள்ளியின் விடுதியில் தங்கி கல்வி பயில்கின்றனர். உணவு, உடை, தங்குமிடம், மருத்துவ வசதி 'தொழிற்கல்வி ஆகியவை முற்றிலும் இலவசமாக வழங்கப்படுகின்றதை நேரில் பார்வையிடலாம். ஒன்று முதல் எட்டாம் வகுப்பு வரை படிக்கும் மாணவ மாணவிகளுக்கு சத்தான உணவு வழங்கப்பட்டு பல நல்ல பழக்க வழக்கங்களும் போதிக்கப்படுகின்றது. குஜராத் மாநிலத்தில் பூகம்பத்தில் பாதிக்கப்பட்டு, பெற்றோர்களையும், கால்களையும் இழந்த மாணவர்கள் முதல் மன வளர்ச்சி குன்றியவர்கள் வரை பயிலும் இந்தப் பள்ளியினைப் பாராட்டி மத்திய, மாநில அமைச்சர்கள் முதல் பற்பல தலைவர்கள் மனநிறைவு தெரிவித்ததுடன், மாநிலத்திலேயே சிறந்த பள்ளியாக தேர்வு செய்யப்பட்டு இராஜ சர் அண்ணாமலை நினைவு விருதும் வழங்கப்பட்டுள்ளது.



''ஊனமுற்றோர்களுக்கு செய்யும் தொண்டு இறைவனுக்கு செய்யும் தொண்டாகும். ஏழையின் சிரிப்பில் இறைவனை காண்போம்'' என்பார்கள் பெரியவர்கள். அதற்கு இணையாக பல்வேறு சுகங்களுக்காக ஏங்கித் தவிக்கும் இக்குழந்தைகள் மகிழ்ச்சி பெற, நம்முடைய பங்கும் இருக்கும் என்றால் அதைக் காட்டிலும் வேறு மகிழ்ச்சி இருக்கமுடியுமா? நாம் எல்லோரும் இந்த குழந்தைகளுக்கு பாசத்தோடு நேசக்கரம் நீட்டலாமே. வருடத்தில் ஒரு முறை வசந்தமாக வருகின்றது தீபாவளி திருநாள். இந்தத் திருநாளை நாம் அனைவரும் புத்தாடை உடுத்தி, பட்டாசு கொளுத்தி, இனிப்பு பண்டங்கள் உண்டு ஒருவருக்கொருவர் மகிழ்ச்சியினை பகிர்ந்து கொண்டாடுவோம். அதே வேளையில் இவைகளுக்கெல்லாம் கொடுத்து வைக்காத, இறைவன் குழந்தைகளாக கருதப்படும், கால் இருந்தும் நடக்க முடியாத, வாயிருந்தும் பேச இயலாத, கண்ணிருந்தும் காண முடியாத, மன நலம் குன்றிய, பெற்றோரை இழந்த, இந்த நூற்றுக்கும் மேற்பட்ட குழந்தைகளும் தீபாவளி திருநாளை கொண்டாடி, மனம் மகிழ நம்மால் இயன்ற உதவிகளை செய்யலாமே. பிறருக்கு செய்யும் உதவிதானே நமக்கு பெரு மகிழ்ச்சி!

இந்தப் பள்ளியில் பயிலும் பிஞ்சு உள்ளங்கள், இவர்களுக்கு உதவும் நல்லவர்களுக்கு காலையிலும், மாலையிலும் கூட்டுப்பிரார்த்தனை செய்கின்றனர். இதில் கலந்து கொள்ளும் பலரின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் கசிகின்றது.

**அன்பில் ஓர் ஆழ்கடலாகவும், அரவணைக்கும் பாங்கில் ஓர் அன்னையாகவும் திகழும் இப்பள்ளியினை பார்வையிட்டு செல்லும்போது மனதில் மிகப்பெரிய அமைதி ஏற்படுகிறது.**


**The United Physically Handicapped School**

(an Institution for orphaned disabled children)

96, Sathy Main Road, Kurumbapalayam,
Coimbatore-641 107. Tamil Nadu. INDIA
Phone : 91-0422-2667578, 2667636.
www.unitedhandicapped.org

* Donations are Tax exempt




''ஊனமுற்றோர்களுக்கு செய்யும் தொண்டு! இறைவனுக்கு செய்யும் தொண்டு!!''

நீங்கள் கேட்டவை - தராசு

# மாறன் தபால்தலை



• நியூவிலும் நியூ!

● ஆர்.கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்

**? முரசொலி மாறனுக்குத் தபால் தலை வெளியிடுவது அதிகார துஷ்பிரயோகம் என்கிறார்களே சிலர்...?**

! தபால்தலை வெளியிடப்படுவதற்குச் சில வழிமுறைகள் உண்டு. மாறன் விஷயத்தில் அவை நிச்சயம் எளிதாகக் கடைப்பிடிக்கப்பட்டிருக்கும் என்று நம்பலாம். ஆனால், தபால் தலை வெளியிடப்பட்ட முறையில் குறை உண்டு. அந்த நிகழ்ச்சி, பொது நிகழ்ச்சியாக அன்றி, குடும்ப நிகழ்ச்சியாகவும், கூட்டணி கட்சி நிகழ்ச்சியாகவும் தோற்றம் அளித்தது.

● எஸ்.ஆர்.ஸ்வாமி, திருநெல்வேலி

**? மணிப்பூரிலிருந்து ராணுவத்தை வாபஸ் பெறுவது ஆபத்துதானே...?**

! அதைவிடப் பெரிய ஆபத்து ராணுவம் அங்கே நீடிப்பது. இன்னும் பெரிய ஆபத்து, அரசியல் ரீதியான அணுகுமுறை இன்றி, ராணுவத்தைக் கொண்டு சமாளிக்கலாம் என்று மத்திய அரசு எண்ணுவது. பயங்கரவாதிகளை எதிர்க்கப் போய், ராணுவத்தின் அத்துமீறலால் மக்களைப் பகைத்துக் கொள்வதில் என்ன பயன்?

● ஆர். லோகநாதன், இலால்குடி

**? சுதந்திரம் பெற்று ஐம்பது வருடங்களுக்கு மேலாகியும் வறுமையை ஒழிக்க முடியாமல் போனதற்கு என்ன காரணம்...?**

! அறியாமையை ஒழிப்பதே முழு முதற்கடமை என்பதை உணராத, உணர்ந்தும் செயல்படாத, தலைவர்களின் அணுகுமுறைதான் காரணம்.

● ஆர். ராமசுப்ரமணியன், வடவள்ளி ❐

**? மெகா சீரியல்களில் எபிசோட் டைரக்டர், கிரியேடிவ் டைரக்டர், கிரியேடிவ் ஹெட் என்று பல வித அவதாரங்கள் எடுக்கிறார்களே... அவர்களுடைய பணிகள் தான் என்ன?**

! முறையே :

1. அழுகைக்கான கால வரம்பை நிர்ணயிப்பது;

2. கண்ணீருக்கான கற்பனைக் காரணங்களை உருவாக்குவது;

3. சமச்சீராகக் கண்ணீரைப் பிரித்து, அனைத்து எபிசோட்களிலும் இடம் பெறச் செய்வது.

● கே.வி. ராமன், புதுடெல்லி - 1

**? சாதுக்களால்தான் நல்லாட்சி தர முடியும் என்று மத்தியப் பிரதேச மாநில முதல்வர் உமாபாரதி கூறியுள்ளது பற்றி...?**

! ஷ்... ம.பி. விவகாரத்தை இங்கே பேசாதீங்க... அப்புறம் ரஜினி அரசியலுக்கு வருவாரா? விஜய்காந்த் அரசியலுக்கு வருவாரா? என்ற சர்ச்சை போறாதுன்னு, அந்த சாமியார் வருவாரா? இந்த மடாதிபதி வருவாரா... என்று விவகாரம் ஆரம்பமாகிவிடும்!

● வீ. உதயக்குமாரன், வீரன் வயல்

**? ஜெயலட்சுமி காவல்துறையையே கதிகலங்க வைத்தது பற்றி...?**



• காவி தத்துவம்!



• கதி என்ன?



! காவல்துறையைத் தம் வசம் வைத்துள்ள அமைச்சர் கதிகலங்கக் காணோமே!

● மகா, திருப்பூர் - 3 ★

? செய்த குற்றத்துக்குத் தண்டனையை ஏற்றுக் கொள்ளாமல், சட்டத்துக்குப் புறம்பாக, 'குடும்பத்தோடு தற்கொலை செய்து கொள்வோம்' என தனஞ்சய் சாட்டர்ஜியின் குடும்பத்தார் பூச்சாண்டி காட்டலாமா..?

! அவ்வாறு செயல்படுவதைத் தடுக்கவும், மீறி செயல்பட்டால்

# வெளியீடு அதிகார துஷ்பிரயோகமா?

தண்டிக்கவும் சட்டத்திலேயே இடமிருக்கிறது. ஒரே குறை என்னவென்றால், சட்டமும் நீதியும் நமது நாட்டில் ஆமை வேகத்தில் செயல்படுவது தான்.

● தெ.ச. சேகர், மோரகனியனூர்

? வாழ்க்கை வெறுத்துவிட்டது. ஏதாவது வெளிநாட்டுக்கு ஓடிவிடலாம் என்று தோன்றுகிறது. நீங்கள் சிபாரிசு செய்யும் நாடு எது...?

! வெளிநாட்டுக்கு வேலை தேடிப் போன பலரது சோகக் கதைகளைப் பார்க்க, பாரதமே சொர்க்க பூமி! உங்களுக்குள்ளேயே இருக்கும் நம்பிக்கை தேசத்தில் குடியேறுங்கள்.

● அ. சுஹைறல் ரஹ்மான், திருச்சி

• குடும்ப நிகழ்ச்சி!



• விடுதலை விபரீதம்

? 'வக்கீல்கள் மீது நடவடிக்கை எடுக்கும் சட்டத் திருத்தம் வாபஸ் இல்லை என்று சுபாஷன் ரெட்டி திட்டவட்டமாக அறிவித்துள்ளாரே...?

! ஏற்கெனவே இருட்டறையாகக் கிடக்கிறது சட்டம். விளக்கேற்ற வேண்டிய வக்கீல்களின் வாதம், பிடிவாதம், எதிர்வாதம் என்று தீவிரவாதமாகி, மொத்தமாகக் கொளுத்திவிடும் போலிருக்கிறதே!

● நகை தி. மகராசன், சின்னமனூர்

? "பங்கு புரோக்கர்களுக்கு மத்திய

★ ரூ.100 பரிசு பெறுபவர் :
ஆர். ராமசுப்ரமணியன்,
ராஜம்மாள் இல்லம்,
20, VNR நகர் முதல் தெரு,
வடவள்ளி அஞ்சல்,
கோவை - 641 041.

★ ரூ.50 பரிசு பெறுபவர்
மகா, ஜீவா காலனி,
காந்தி நகர் அஞ்சல்,
திருப்பூர் - 3



★ அதிரடி அமைச்சர்!

நிதியமைச்சர் 6,300 கோடி ரூபாய் சலுகை அளிக்கும்போது, தொழிலாளர்களுக்கு 12 சதவிகித இ.பி.எப். வட்டி தந்தால், ஏற்படக்கூடிய 900 கோடி ரூபாய் சுமையை அரசு தாங்கக் கூடாதா...?'' என்று கம்யூனிஸ்டுகள் வாதிடுகிறார்களே...?

! மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் இந்த வாதம் நியாயமாகத் தோன்றும். ஆனால், இரண்டுக்கும் இடையே மலைக்கும் மடுவுக்குமான வித்தியாசம் உண்டு. பொருளாதாரம் அறிந்தவர்களுக்கு இது புரியும். அரசியல் கண்ணோட்டம், நாட்டின் பொருளாதாரத்துக்குப் பின்னடைவை ஏற்படுத்தக் கூடாது.

● ஏ.ஜி. முகம்மது தௌபீக், மேலப்பாளையம்

? ரயில்வே தலைமையகத்தில் அதிரடி சோதனை நடத்தி; தாமதமாக வந்தவர்களை வீட்டுக்கு அனுப்பி வைத்தாராமே லாலு பிரசாத் யாதவ்?

! இத்தகைய செய்திகள் படிக்க சுவாரஸ்யம். ஆனால், தடாலடி, அதிரடி நடவடிக்கைகள் மட்டுமே நல்ல நிர்வாகத்துக்கும், லாபகரமான செயல்பாடுக்கும் வழி வகுக்காது. சீரிய சிந்தனை, திட்டமிடல், திறமை இணைந்தால்தான் அது சாத்தியம்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை - 1

? 'பொடா' கைதுக்குக் காரணமான திருமங்கலம் பேச்சை, துண்டுப் பிரசுரமாக வீதி வீதியாகக் கொடுப்பேன்' என்று வைகோ சொல்கிறாரே...?

! ஐயகோ! ஐயகோ! இது விடுதலையின் விபரீதம்; பொடா வாபஸ் தரும் தைரியம். பேச்சு காற்றோடு போகும். எழுத்து சாட்சியமாகும்!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? டி.வி.ஆர், ஷெனாய், குல்திப் நய்யார், ஷோபா டே, அருண் ஷோரி, சின்னக்குத்தூசி போன்றோர் கூலிக்கு மாரடிக்கவே எழுதுகின்றனர் என (தினமலர் வாரமலர் 8.8.04) அந்துமணி சொல்வது சரியா...?

! அட! அந்துமணி கூலி பெறாமலே எழுதுகிறாரா என்ன...!

● உமா பாலமுரளி, சென்னை - 92

? கர்னாடக இசையில் ஈடுபாடும் தேர்ச்சியும் பெற்றுள்ள இளைஞர்கள் வாய்ப்புக் கிடைத்துப் பிரகாசிப்பதாகத் தெரியவில்லையே...?

! உழைப்புடன் திறமையும் உள்ளவர்கள், இத்துறையில் நியாயமான அங்கீகாரம் பெற்று வளர முடிகிறது. ஸ்பான்ஸர்ஷிப் இருப்பதால் வாய்ப்புகளும் கிடைக்கின்றன; இசை ரசிகர்கள் தேர்ந்த ரசனையுடையவர்களாக இருப்பதால், தரமற்றவை நிராகரிப்புக்குள்ளாகின்றன. அயல்நாடுகளில் கிடைக்கிற வரவேற்பு, பொருளாதார ரீதியிலும் உதவுகிறது.

● த. குமரேசன், நெல்லை

? நியூ படம் போல் நல்ல படங்கள் எடுக்கும் எனது முயற்சி தொடரும் என்கிறாரே எஸ்.ஜே. சூர்யா...?

! முயற்சியின் தொடர்ச்சியாக அவர் எடுத்த பாடல் காட்சியை சென்ஸார் போர்ட் அனுமதிக்காததால், கோபித்துக்கொண்டு உறுப்பினர்களை மிரட்டி, செல்ஃபோனை அவர்கள்மீது வீசியதாக இப்போது போலீஸில் புகார் இருக்கிறது. இது நியூவிலும் நியூ!

# 'க்ளிக்' பண்ணு! வக்கீல் ஆகு!

சட்டத்தில் ஏதும் சந்தேகம் இருக்கா? ஏதாவது ஒரு பிரிவு சட்டத்தைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொள்ள வேண்டுமா? உங்கள் ஏரியாவில் உங்களுக்கேற்ற லாயரை தேடிக் கண்டுபிடிக்க வேண்டுமா? போன் மூலம் லீகல் - அட்வைஸ் பெற வேண்டுமா? சட்ட விஷயங்களை, நுணுக்கங்களைப் பற்றி 'சாட்' செய்ய வேண்டுமா? இது போல் பல கேள்விக்குறிகளை ஆச்சரியக்குறியாக்கும் சட்டத்தளம் helplinelaw.com இந்தியாவில் 46 நகரங்களிலும், மேலும் 30 நாடுகளிலும் இவர்களின் நேரடி சேவையைப் பெறலாமாம்.

*(ஏனுங்க... உங்க வலைத்தளத்தை படிச்சா வக்கில் பட்டம் தருவீங்களா?)*

எந்தவொரு வெப்தளமும் கலர்ஃபுல்லாக களை கட்டக் காரணம் Flash என்னும் Software தான். Flash கற்றுக் கொள்ள animation-ல் அரிச்சுவடி முதல் ஆழங்கள் வரை அழகாகத் தெரிந்து கொள்ள, வண்மையாக பாடம் சொல்லித் தருகிறது, cartoon-smart.com. Flash-ல் கார்ட்டூன்கள் வரைவது எப்படி என்பது பற்றி, நூறு நிமிடங்களுக்கு விளக்கப் பாடம் இருக்கு வாய்ஸோட!

*(இது 'படம்' காட்டுற சைட் இல்ல! 'பாடம்' காட்டற சைட்!)*





நெல்சன் மண்டேலா தமது என்பத்தி ஆறு வயதிலும் ஓய்வெடுத்துக் கொள்ளாமல், எய்ட்ஸ் பற்றி விழிப்புணர்வு ஏற்படுத்தும் பணியில் மும்முரமாக இறங்கியுள்ளார். 'எய்ட்சை ஒழிக்கும் வரை ஓய்வில்லை' என்று களத்தில் இறங்கியுள்ள மண்டேலா, படிப்பறிவில்லா மக்களைச் சந்தித்து campaign-களை நடத்தி வருகிறார் என்கிறது allafrica.com

## ஜாலி எஸ்.எம்.எஸ்.

நீ 100% அறிவாளி, நீ 100% அழகு, நீ 100% மென்மை, நீ 100% உழைப்பாளி - இதையெல்லாம் நம்பினால் 100% முட்டாள்!

- ப்ரௌஸர்

வலைப்பூ

**கா**லையில் - வொர்க் ஷாப்பில் ஸ்கூட்டரை நிறுத்தும் போதே மனம் தவியாய்த் தவித்தது. மருகிப் போய்தான் நின்றான் செல்வம்.

மெக்கானிக் விடாப்பிடியாய் சொன்னான்,

"சார், இந்த வண்டிக்கு இது நல்ல விலைதான். பேசாம தட்டி விட்டுருங்க. யோசனை பண்ணாதீங்க. இது என்ன சார் பெரிய வண்டி? இதைவிட நல்ல வண்டி, இதை விடக் குறைஞ்ச விலைக்கு வாங்கித் தர்றேன். இந்தாங்க பணத்தைப் பிடிங்க."

கையில் பணத்தை வைத்து அழுத்தினான்.

அந்த அழுத்தம் மட்டுமல்ல, சூழ்நிலையின் அழுத்தமும் இம்சிக்க, பணப் பையைப் பெற்றுக் கொண்டவன் மீண்டும் ஒருமுறை ஸ்கூட்டரைப் பார்த்தான். முகத்தில் தயக்கம் மின்னலாய் வெட்டியது.



''என்னங்க சார்?'' மெக்கானிக் நைச்சியமாய்க் கேட்டான்.

"வந்து..."

"சொல்லுங்க சார்!"

''முன்னால உள்ள நேம் பிளேட் வேணும். அதுல எம் பையன் பேர் எழுதி வச்சிருக்கேன்..'' கேட்ட செல் வத்தின் முகத்தில் சிறிதாய் அசட்டுத் தெறிப்பு.

யாத மன நிலை. இரண்டு நாட்களாக அவன் முகத்தில் தெரிந்த வாட்டத்தைக் கண்டு, வாசுகிதான் கேட்டாள்.

''என்னங்க, ரெண்டு நாளா ஒரு மாதிரியாவே இருக்கீங்க. ஏதாவது ப்ராப்ளமா?''

இதற்காகவே காத்திருந்தவன் போல் கொட்டினான்.

''ஆமா வாசுகி, நெல் லோடு இறக்கி

# கூரைக்கு மேலொரு வானம்...!



"இதோ... கழட்டித் தர்றேன் சார்!'' சொன்ன மெக்கானிக், விரைந்து நேம் பிளேட் டைக் கழற்றி எடுத் தான்.

"பையன் பேரு பிரபு வா சார்...? ரொம்ப நல்ல பேரு சார்..''

சொன்னபடியே நீட்டி னான். வாங்கிய செல்வத்திடம் சிறிதாய் ஒரு நடுக்கம். விறுவிறு வென்று நடந்தான்.

**வி**யாபாரத்தில் சறுக்கல், பண முடை.

என்ன செய்வதென்று தெரி

சிவபாரதி

பத்து நாள் ஆச்சு. இன்னமும் பணம் கட்ட முடியலை. இன்னக்கி நெல் பேட்டை முதலாளி வழியில பார்த்து ரொம்பவும் திட்டிட்டார். பணத்த வச்சுட்டு மறுவேலையைப் பாருன்னு நிக்கறார். சட்டையப் பிடிச்சு இழுக்காத குறைதான்...''

பேசியவன் கைகளைப் பிசைந்தான்.

"இதுக்கு ஏங்க கவலைப்படுறீங்க? ஒரு ரெண்டு நாள் தவணை கேட்க வேண்டியதுதானே!'' சாதாரணமாகச் சொன்னாள் வாசுகி.

''ஏற்கெனவே ரெண்டு வாட்டி தவணை கேட்டுட்டேன். சொன்னபடி நடந்துக்க முடியலை. நாளைக்கு காலையிலே முழுப் பணமும் வேணுங்கறார். நமக்கு வர வேண்டிய வசூல் பணமும் வரலை. இப்ப என்ன பண்றதுன்னே தெரியலை...'' என்றபடி வாசுகியின் முகத்தைப் பார்த்தான்.

**ம**று நாள்.

''நான் கும்பகோணம் போய் என் தம்பியப் பார்த்து வர்றேன். நாளைக்கு வந்திடுறேன்...''

கேட்டவன் அவள் முகத்தையே பார்த்தான்.

"என்ன வாசுகி திடீர்னு?" புரியாமல் கேட்டான்.

''அவனோட கஷ்டத்துக்கு எத்தனையோ தடவை நாம உதவியிருக்கோமே! இப்ப அவன் நல்லாத்தான இருக்கான். அவசரத்துக்கு உதவத்தானே அண்ணன், தம்பியெல்லாம்...''

அதன் பிறகு அவன் ஒன்றும் பேசவில்லை.

வாசுகியை கும்பகோணத்திற்கு பஸ் ஏற்றிவிட்டு வரும் வழியில் - மெக்கானிக் ஷாப் கண்ணில் பட்டது. எதற்கும் சொல்லி வைப்போம் என்று மெக்கானிக்கிடம் பேசினான்.

அவனோ இரண்டு மணி நேரத்திற்குள் வண்டியைப் பேசி முடித்து, பணத்தையும் வாங்கிக் கொடுத்து விட்டான். நேராக நெல் பேட்டைக்குச் சென்று, கணக்குப் பார்த்து முழுப் பணத்தையும் கொடுத்து விட்டான் செல்வம்.

அப்போதைக்கு ஒரு பிரச்னையில் இருந்து தப்பிவிட்டோம் என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டாலும், இனி வாசுகியிடமும், பிரபுவிடமும் எப்படிச்சொல்லி சமாளிக்கப் போகிறோம்? என்ற கவலை அரித்துக் கொண்டேயிருந்தது.



**தொ**லை பேசி கிணுகிணுத்தது.

''யாராக இருக்கும்?... ஒரு வேளை வாசுகியாக இருக்குமோ?''

"ஹலோ..."

"ஆங்... நான்தான்... வாசுகி பேசுறேன்."

எதிர் முனையில் வாசுகிதான். ஒரு கணம் என்ன பேசுவதென்று யோசித்தான்.

"என்னங்க, பேச்சையே காணோம்?"

"வாசுகி, நான்தான். தம்பி என்ன செய்யறான்..." கேட்கும் போதே குரலில் பிசிறல்.

"என்னங்க ஒரு மாதிரியா பேசுறீங்க?"

"அது... ஒண்ணுமில்ல வாசுகி..."

அவள் ஒரு கணம் மௌனம் சாதித்தாள். யோசிக்கிறாள்.

''வாசுகி, நான் நம்ம ஸ்கூட்டரை வித்துட்டேன்...'' சொன்னான்.

'டொக்'. மறுமுனையில் ரிஸீவரை அறைந்து வைக்கும் சப்தம்.

அவன் மனதிற்குள் சிறு ஆறுதல். சொல்லியாகிவிட்டது. படுக்கையில் விழுந்தான்.

**கா**லை -

அரிசி மார்க்கெட் செல்வதற்காக கிளம்பினான். ஸ்கூட்டர் இல்லாததால் நடந்துதான் செல்ல வேண்டியதிருந்தது. 'விரைவில் ஒரு சைக்கிள் வாங்க வேண்டும்' என்று நினைத்தபடியே நடந்தான்.

"ஒரு டீ சாப்பிட்டு விட்டுச் செல்லலாம்..."

அவன் கால்கள் நாயர் கடை இருக்கும் திசையில் நடை போட்டன. குரங்குத் தோப்பு ரோடு. வெறிச் சோடிப்

''உங்க ஆபீஸ் கிளார்க் மாணிக் கத்தோட அப்பா நான்னு சொன்னதும் உங்க மானேஜர் அலறி ஓடறாரே, ஏன்?''

''நீங்க இறந்துட்டதா சொல்லி போன வாரம்தான் மாணிக்கம் ரெண்டு நாள் லீவு போட்டிருந்தான்!''

- மாமணி

போய் கிடந்தது. வீதியெல்லாம் வெறுமை. நடைபாதைக் கடைகள் எல்லாம் காலி செய்யப்பட்டிருந்தன. நாயர் கடையும் காணாமல் போயிருந்தது. ஆனால் கடை இருந்த இடத்தில், நாயர் மட்டும் நின்று கொண்டிருந்தான். அருகில் சென்றான் செல்வம்.

"என்ன நாயரே? கடையக் காணோம். என்ன ஆச்சு?"

தோழமையுடன் கேட்டான்.

''வாங்க சார், நேத்து ஹைவேஸ்ல இருந்து வந்தாங்க. ரோட்டோரத்து ஆக்ர மிப்ப எல்லாம் காலி பண்ணிட்டாங்க. நம்ம கடையையும் சேர்த்துதான்.''

சொன்னவன் விகல்பமின்றிச் சிரித் தான்.

இழப்பு... எவ்வளவு பெரிய இழப்பு?

ஆனால் நாயர் சாதாரணமாக சிரிக்கிறான்.

"என்ன நாயரே? டீக்கடைதான் உன் னோட பொழைப்பு... அந்த பொழைப்பே போச்சு. ஆனா நீ கள்ளமில்லாம சிரிக்குற...?"

வியப்புடன் கேட்டான் செல்வம்.

"என்ன சார் பெரிய பொழைப்பு. இந்தக் கூரைதான் உலகம்னு இருபது வருஷமா இருந்துட்டேன். இப்ப அந்தக் கூரையும் இல்லைன்னு போச்சு. அதனால என்ன சார்? கூரைக்கு மேல அண்ணாந்து பார்த்தா, வானம்னு ஒண்ணு இருக்கே. அதுவே இந்த உல கத்துக்கு பரந்து விரிஞ்ச ஒரு கூரை தானே! அந்தக் கூரைக்கு கீழ, நமக்கு ஒரு இடம் இல்லாமலா போகும்..."

சொன்னவன் மீண்டும் சிரித்தான்.

அவனையே பார்த்தபடி நின்றான் செல்வம். அவனைப் பார்க்க அதிசய மாகவும் இருந்தது.

"எவ்வளவு பெரிய இழப்பை... இவ் வளவு சாதாரணமாக எடுத்துக் கொண் டானே! எப்படி இவனால் முடிகிறது? நம்மால் முடியவில்லையே!

இந்தக் கூரை போனால் என்ன? வானமே ஒரு கூரைதானே!

சாதாரண மனிதனிடம் இருந்து வெளிப்படும் அசாதாரணமான வார்த் தைகள். உண்மை. உலகியல் தத்துவம்...

பிரமிப்புடன் அப்படியே நின்றான் செல்வம்.

''அப்ப நான் வர்றேன் சார்...'' விடைபெற்றுக் கிளம்பிச் சென்றான் நாயர். செல்வத்தின் மனதிற்குள் நம்பிக்கை வெளிச்சம் ஒன்று கண் சிமிட்டியது.

**ம**தியச் சாப்பாட்டிற்கு வீட்டிற்குச் செல்ல - வாசுகி வந்திருந்தாள். குறுகுறுப் புடன் அவளைப் பார்த்தான்.

"எப்ப வந்த வாசுகி?" கேட்டான்.

"இப்பத்தான்..." அவள் குரலில் இறுக் கம்.

''தம்பி எங்க...'' அவன் கேட்கும் போதே ஓர் அழகிய சிறு நாய்க்குட்டி யுடன் உள்ளே வந்தான் பிரபு.

"அப்பா... இந்த ஜிம்மியப் பாருங்க. மாமா வீட்டுல இருந்து கொண்டுட்டு வந்தேன். நல்லாயிருக்கா...?" ஆர்வமுடன் கேட்டான்.

"ம்... சூப்பரா இருக்குது..." சொன்ன படியே நாயைக் கையில் வாங்கிக் கொண்டான் செல்வம். ''ஹைய்யா... ஹைய்யா..." குதித்தான் பிரபு.

அந்த நாய்க்குட்டியோ அவனைப் பார்த்து தாவியது.

வாசுகியோ எதுவும் பேசாமல் விருட்டென்று அந்த இடத்தை விட்டுச் சென்றாள்.

**ஒ**ரு வார காலம் ஓடிவிட்டது.

வாசுகியும் இயல்பு நிலைக்கு வந்து விட்டாள். தம்பியிடம் எதிர்பார்த்த உதவி கிடைக்கவில்லை. இந்த நேரத்தில் ஸ்கூட்டர் பணம் ஆபத்திற்கு உதவியது என்றதால், கோபத்தை விட்டொழித்து விட்டாள்.

ஆனால் பிரபுவைப் பார்க்கும் போது தான் ஆச்சர்யமாக இருந்தது. சதா நேரமும் நாய்க்குட்டியுடன் விளையாடிக் கொண்டிருந்தான். நாய்க் குட்டியும் நன்கு புசுபுசுவென்றிருந்தது. இத்தனை நாளில் ஒரு முறை கூட 'நம்ம ஸ்கூட்டர் எங்கப்

பான்'னு அவன் கேட்கவில்லை.

மனதிற்கு நிம்மதியாக இருந்தது.

''பிஞ்சுமனம். இழப்பின் கனம் மனத்தில் பதிந்து விட்டால் அவ்வளவு தான்! பிறகு அவனை சரிக்கட்டுவதற்கு படாதபாடு பட வேண்டியது இருக்கும்.' இப்படித்தான் எண்ணினான் செல்வம். 'அவன் கேட்டால் என்ன பதில் சொல்வது' என்று திணறித்தான் போனான்.

'ஆனால் அவ்வளவு பெரிய இழப்பை ஒரு சிறு நாய்க்குட்டி தீர்த்து வைத்து விட்டதே!'

நினைத்தவன் பிரபுவைப் பார்த்தான். நிம்மதிப் பெருமூச்சு விட்டான்.

''ஹேய் ஜிம்மி... ஜிம்மி...!'' ஓடும் நாய்க்குட்டியைத் துரத்தியபடி அவனும் ஓடிக் கொண்டிருந்தான்.



## 'கல்யாணச் சாப்பாடு!'

ஒரு சமயம் கலைவாணர் வீட்டில் நிகழ்ந்த திருமண விழாவின் போது ஏராளமானோர் விருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். அப்போது என்.எஸ்.கே. 'நறுக்'கென உணவுடன் கல்லைக் கடித்து விட்டார்! உடனே அவர் சமையல் மாஸ்டரை அருகில் அழைத்துக் கல்லைக் காண்பித்து, ''ஏம்பா... உன் முதலாளியை மட்டும் தனியாக் கவனிச்சு மற்றவங்களை அலட்சியப்படுத்திட்டியே... இது நல்லா இருக்கா? ஒரு விருந்துன்னா எல்லாரையும் ஒண்ணு போல உபசரிக்கணுங்கிறது தெரியாதா? சாப்பிடுறவங்களுக்கெல்லாம் தலா ஒரு கல்லைப் போடு!'' என்று அவருடைய தவற்றைச் சுட்டிக்காட்டவும் அனைவரும் 'கொல்'லென்று சிரித்தனர்.

- ச.ஆ. கேசவன்

மறுநாள்-

குரங்குத் தோப்பு முக்கு ரோடு வழியாக வரும் போது, அங்கே நாயர் நின்று கொண்டிருப்பது தெரிந்தது. சைக்கிளை நிறுத்தினான் செல்வம்.

''என் நாயரே, இங்க நின்னுக்கிட்டு இருக்கீங்க?'' கேட்டவன் அப்போதுதான் கவனித்தான். நாயரின் கண்கள் பனித்திருந்தன. பதறிப் போனான் செல்வம்.

''நாயரே! ஏன் கலங்குறீங்க?'' ஆறுதலாய்க் கேட்டான். அவசரமாகக் கண்களைத் துடைத்துக் கொண்ட நாயர்,

''சார்... உலகம் வேணும்னா பெரிசா இருக்கலாம். அந்த உலகத்துக்கே வானம் கூரையா இருக்கலாம். ஆனா எனக்கு இப்ப அதெல்லாம் பெரிசா தெரியலை சார். எனக்கு என்னோட கூரைதான் பெரிசு. அந்தக் கூரைய இழந்துட்டேனே சார். அத நெனச்சா துக்கத்த அடக்க முடியல சார்...'' சொன்னவன் அப்படியே நடக்க ஆரம்பித்தான்.

விக்கித்துப் போய் நின்றான் செல்வம்.

அன்று அவன் பேசிய பேச்சுக்கும், இன்று பேசும் பேச்சுக்கும் எவ்வளவு வித்தியாசம்?

இன்று அவன் பேசுவதும் உண்மை என்றுதான் பட்டது. ஆனால், மனித மனத்திற்கு மாற்று உண்டா என்ன?

நாயர் பற்றிய நினைவுகளுடன் வீட்டிற்குச் செல்ல - வாசலில் பிரபு நின்று கொண்டிருந்தான்.

''என்ன பிரபு இங்கே நிக்குற?'' கேட்டுக் கொண்டே அவன் அருகில் சென்றான் செல்வம்.

''அப்பா, மெர்வின் அப்பா புதுசா ஸ்கூட்டர் வாங்கியிருக்கார்...'' சொன்னவன், ஊன்றி அப்பாவைப் பார்த்தான்.

செல்வத்தின் மனதிற்குள் தடுமாற்றம். நெஞ்சுக்குள் பதைப்பு. இடியோசைக்கு முன்னால் மின்னல் ஒன்று வெட்டிச் செல்லுமே, அப்படியிருந்தது பிரபுவின் பார்வை.

''ஏன்ப்பா, நம்ம ஸ்கூட்டர் எங்கப்பா?''

கேட்டபோது அந்த முகத்தில் தெரிந்த ஏக்கம். நெஞ்சில் இடி இறங்கியது போல் இருந்தது. என்ன பதில் சொல்வது? நிலை தடுமாறிப் போய் நின்றான் செல்வம். தொண்டைக்குள் வலி பிறந்தது.

# நடக்கும்!

**- அக்னிசர்மா பக்கம் -**

ஆகஸ்ட் 25 முதல் 31 வரை




* ரம்யா

**மேஷம் :** சுதந்திரதின அணிவகுப்பு மாதிரி கிரக சஞ்சாரம் ரொம்ப சீராக இருக்கறதால, உங்க நம்பிக்கை, துணிவு எல்லாம் கூடி, எடுத்த காரியங்கள்ல எல்லாம் வெற்றியே கிடைக்கும். கொடுக்கல் வாங்கல்ல கொஞ்சம் கவனமா இருங்க. உத்தியோகத்தில் கூடுதல் பொறுப்பும் அதிக வேலையும் ஏற்க வேண்டி வரும். இடமாற்றம் கிடைக்கும். புது முயற்சிகள் இப்ப வேண்டாம். இண்டஸ்ட்ரீஸ், கமிஷன், யந்திரம், மருத்துவம் துறைகள் லாபம் தரும். பெண்களுக்கு ஆடை ஆபரணச் சேர்க்கையால் மகிழ்ச்சி கூடும்.

**ரிஷபம் :** உங்க ராசிக்கான கிரகங்கள் அதிர்ஷ்ட தேவதையை உங்க பக்கம் கொண்டு வந்து நிறுத்தியிருக்கு, பக்கத்தில பாருங்க. புதிய அறிமுகம், தாராள பணவசதின்னு உற்சாகமான வாரம். உத்தியோகத்தில் நிம்மதியான சூழ்நிலை நிலவும். புது முயற்சியேதும் இருந்தா ஆரம்பிங்க, வெற்றிதான். ஓட்டல், லாட்ஜ், வாகனம், ஜவுளி, கலைத் துறை, டிராவல்ஸ் துறைகள் மேன்மை பெறும். குடும்பத்தில நெருக்கடி தீர்ந்து சுபிட்சம் ஏற்படும். பெண்கள் நினைச்சதை சாதிப்பாங்க. மாணவர்களுக்கு வெற்றி கிட்டும்.

**மிதுனம் :** கல்வி, விஞ்ஞானம், ஆராய்ச்சின்னு இருக்கிற இந்த ராசிக்காரர்களுக்கு வெற்றி தேடி வந்து கிட்டேயிருக்கு. எதிர்ப்புகளெல்லாம் மாயமா மறைந்துபோகும். உத்தியோகத்தில அனுகூலமான திருப்பம்

     

ஏற்படும். கலைத்துறை, எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர், பத்திரிகை துறைகள்ல இருக்கறவங்க ஆதாயம் அடைவாங்க. குடும்பத்தில சுபச் செலவுகள் கூடும். பெண்களுக்கு எண்ணம் போல எல்லாம் நடக்கும்.

**கடகம் :** கொஞ்சம் குழப்பமான நேரந்தாங்க உங்களுக்கு, அதுவும் மத்தவங்களாலதான். மற்றபடி தெய்வீக ஈடுபாடும், தெய்வ பலமும் உங்களுக்குக் கை கொடுக்கும். உத்தியோகத்தில அமைதியான சூழ்நிலை நிலவும். புதிய முயற்சிகளைக் கொஞ்சம் தள்ளிப் போடுங்க. காண்ட்ராக்ட்ஸ், கமிஷன், எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர் தொழில்கள்ல இருக்கிறவங்களுக்கு அனுகூலமான நேரம். குடும்பத்தில எதிர்பாராத திருப்பங்களும், செலவும் ஏற்படக் காத்திருக்கு. பெண்களுக்கும் மாணவர்களுக்கும் அனுகூலமான வாரம்.

**சிம்மம் :** உங்க யோகமான நேரம் கூடிக்கிட்டே வர வாரம் இது. சகல காரியங்களிலும் நீங்க ஒரு அடி எடுத்து வெச்சா, வெற்றி நாலடி எடுத்து உங்க கிட்ட வரும். எதிர்கட்சியே இல்லாத நம்ம சட்டசபை போல, உங்க ராஜாங்கம் நடக்கும். உத்தியோகத்தில எல்லாம் உங்களுக்கு அட்ஜெஸ்ட் பண்ணிப் போற நிலைமைதான். வெளியூர்ப் பயணம் ஒண்ணு காத்திருக்கு. ஓட்டல், லாட்ஜ், டிராவல்ஸ், ரெடிமேடு துணி வகைகள், தொழில்கள்ல லாபம் அடிச்சி நொறுக்கும். ஏற்றுமதி இறக்குமதி தொழில் அனுகூலம் தரும். குடும்பத்தில நெருக்கடி விலகி நிம்மதி கிடைக்கும். பெண்களுக்கு சாதகமான திருப்பங்கள் ஏற்படும்.

**கன்னி :** உங்க ராசிக்கான கிரகங்கள் வி.ஐ.பி.க்களோட பார்வையை உங்க பக்கமா திருப்பி, உங்களுக்கு அனுகூலமா நடக்கச் சொல்றதால, சரளமான பண வசதியும், அனுகூலங்களும் ஏற்படும். உத்தியோகத்தில டென்ஷனாகாம நிதானமா நடந்து, பிரச்னைகள் வராமப் பார்த்துக்கோங்க. புதிய முயற்சிகளைக் கொஞ்சம் தள்ளிப் போட்டு, மறுபடி யோசிங்க. இண்டஸ்ட்ரீஸ், கமிஷன், எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர், ஆபரணத் தொழில், கெமிகல் துறைகளில் லாபம் கூடும். குடும்பத்தில கருத்து வேறுபாடுகள் மறைந்து, சுபகாரியங்கள் கூடி வரும். பெண்கள் உற்சாகத்தில் மிதக்கிற வாரம்.

**துலாம் :** உங்க துணிவும் தன்னம்பிக்கையும், பெட்ரோல் டீஸல் விலை மாதிரி ஏறிக்கிட்டே போறதால, தெளிவான சிந்தனை, பெண்களால் அனுகூலம், புது அறிமுகம்னு சுவாரஸ்யமான நேரம் இது. உத்தியோகத்தில் அதிர்ஷ்டம் காத்துக்கிட்டிருக்கு. புது முயற்சிகள் அனுகூலம் தரும். ஓட்டல், ஜவுளி, ஃபர்னிச்சர், உலோக வகை, எலக்ட்ரானிக்ஸ் தொழில்கள் மேன்மை பெறும். குடும்பத்தில் ஒற்றுமை கூடும். பெண்களுக்கு புதிய பொருள் சேர்க்கை மகிழ்ச்சி தரும்.

**விருச்சிகம் :** 'ஒளிமயமான எதிர்காலம்'னு ஒரு பழைய பாட்டு கேட்டிருப்பீங்க. அதை சத்தம்போட்டு உற்சாகமா பாடுங்க. இதுவரை இருந்த குழப்பம், தயக்கம் எல்லாம் முடிவுக்கு வந்து, தெளிவான வழி கிடைச்சிடும். உத்தியோகத்திலயும் உற்சாகமான சூழ்நிலை ஏற்படும். புதிய முயற்சிகள் ஏதுமிருந்தா ஆரம்பிங்க. யந்திரம், இண்டஸ்ட்ரீஸ், காண்ட்ராக்ட்ஸ், கமிஷன் தொழில்கள் அதிக லாபம் பெறும். சட்டம், ராணுவம், காவல் துறையினர் முன்னணிக்கு வருவாங்க. குடும்பத்தில இதுவரை இருந்த பண நெருக்கடி மறையும். பெண்களுக்கு யோகம் கூடி வரும்.

**தனுசு :** அனுகூலமான நேரம்தான். இருந்தாலும் பொருளாதார நிலைதான் கொஞ்சம் சங்கடப்படுத்தும். புதியவர் அறிமுகம், எதிர்பாராத சந்திப்புன்னு சுவாரஸ்யமான வாரம். உத்தியோகத்தில் அமைதியான சூழ்நிலை நிலவும். பதவி உயர்வும், இடமாற்றமும் ஏற்படலாம். கலைத்துறை, ஆபரணத் தொழில், சட்டம், ராணுவம், காவல் துறையினருக்கு மேன்மை கிட்டும். குடும்பத்தில் சுப காரிய முயற்சிகள் ஈடேறும். பெண்கள் மகிழ்ச்சியாக இருப்பார்கள்.

| இது நல்ல வாரம் | | | | |
|---|---|---|---|---|
| கிழமை | தேதி | நட்சத்திரம் | திதி | மற்றவை |
| புதன் | ஆகஸ்ட் 25 (ஆவணி - 9) | மூலம் | தசமி | திருவையாறு தெப்போத்ஸவம் |
| வியாழன் | ஆகஸ்ட் 26 (ஆவணி-10) | பூராடம் | ஏகாதசி | |
| வெள்ளி | ஆகஸ்ட் 27 (ஆவணி-11) | உத்திராடம் | துவாதசி | வரலக்ஷ்மி விரதம் |
| சனி | ஆகஸ்ட் 28 (ஆவணி-12) | திருவோணம் | திரயோதசி | ஓணம் பண்டிகை |
| ஞாயிறு | ஆகஸ்ட் 29 (ஆவணி-13) | அவிட்டம் | சதுர்த்தசி | ஆவணி அவிட்டம் |
| திங்கள் | ஆகஸ்ட் 30 (ஆவணி-14) | சதயம் | பௌர்ணமி | காயத்ரி ஜபம் |
| செவ்வாய் | ஆகஸ்ட் 31 (ஆவணி-15) | பூரட்டாதி | பிரதமை | |

**மகரம் :** ஒரு எதிர்பாராத அனுகூலமான திருப்பம் உங்களுக்காகக் காத்திருக்கு. தெய்வ பலம், தெய்வீக ஈடுபாடு, தாராளமான பண நடமாட்டம் ஏற்படும். பயணங்கள் அனுகூலம் தரும். உத்தியோகத்தில் சிறு பிரச்னைகள் இருந்தாலும் உடனுக்குடன் தீர்ந்து போகும். யந்திரம், ஃபர்னிச்சர், சினிமா, நாடகம், ஆபரணத் தொழில், முன்னேற்றம் பெறும். குடும்பத்தில் குதூகலம் நிரம்பி இருக்கும். பெண்கள் சாதகமான சூழ்நிலை, ஆரோக்கிய மேன்மை, பெறுவார்கள். பிரிந்தவர் சேர்வதும் மகிழ்ச்சி தரும்.

**கும்பம் :** தெய்வபலம், தெய்வீக ஈடுபாடு காரணமாக உங்க துணிவும், தன்னம்பிக்கையும் கூடும். எதிர்பாராத சந்திப்பு, முக்கியஸ்தர்கள் ஆதரவு, தேவைக்கேற்ற பண வசதின்னு உற்சாகமான நேரம். உத்தியோகத்தில் குழப்பங்கள் தீர்ந்து, அனுகூலமான திருப்பம் ஏற்படும். உங்கள் கோரிக்கைகள் நிறைவேறும். மருத்துவம், கெமிக்கல்ஸ், எண்ணெய் வகை, ஜவுளி, பத்திரிகை, தொழில்கள் முன்னேற்றமும், லாபமும் அடையும். குடும்பத்தில் எதிர்பாராத செலவுகள் ஏற்படும். உஷாராக இருக்க வேண்டும். வீண் வாக்குவாதங்களைத் தவிர்ப்பது நல்லது. பெண்களுக்கு உறவினர் வருகை, சுபகாரியங்களால் மகிழ்ச்சி ஏற்படும்.

**மீனம் :** தெளிவான மனநிலையும், தெய்வீக ஈடுபாடும், எடுத்த காரியங்களில் வெற்றி தேடித்தரும். புதியவர் அறிமுகம், தாராள பணநடமாட்டம், உற்சாகம் ஏற்படுத்தும். உத்தியோகத்தில் சஞ்சலங்களும், சங்கடங்களும் விலகி, அதிர்ஷ்டமான திருப்பம் ஏற்படும். ரியல் எஸ்டேட், எலக்ட்ரிகல்ஸ், கெமிக்கல்ஸ், உலோக வகை தொழில்கள் சிறப்புப் பெறும். குடும்பத்தில் அமைதியான சூழ்நிலை நிலவும். சுப மங்கள காரியங்கள் நிறைவேறும். பெண்களுக்கு உறவினர் வருகை, விருந்து என உற்சாகமான வாரம்.








# சைக்கிள் கேப்புல

பொங்கி வழிந்தது ஈரோடு, கொங்கு கலையரங்கம். கொங்கு மண்டலத்தின் மங்கையர் திலகங்கள், தத்தமது மனசு நிறைந்த மணவாளர்களுடன் குடும்பத்து உறுப்பினர்கள் அத்தனை பேரையும் ஒட்டு மொத்தமாய் விழாவுக்கு அழைத்து வந்திருந்தனர். விழிகளுக்கும் செவிகளுக்கும் உரிய உயரிய உணவு ஒன்றினை, கல்யாண விருந்தாக கல்கியும், கல்யாண மாலையும் இணைந்து படையலிட்டது.

தன் இனிய குரலால் உலகத் தமிழ்க் குடும்பங்கள் பலவற்றுக்கும் நற்தகவல்கள் நல்கி வரும் கல்யாண மாலை மோகன், விழா அறிமுக உரை ஆற்றினார். "இந்த வாரம் கல்யாண மாலையின் வெற்றிகரமான இருநூறாவது வாரம். எங்களின் வழிகாட்டுதலில் நிறைவு பெற்ற திருமணங்கள், ஆயிரத்து ஐந்நூற்று இருபது. அதில் மறுவாழ்வுத் திருமணங்கள் ஐம்பத்திரண்டு. இதனைப் பெரியார் பிறந்த மண்ணில் அறிவிப்பதில் உள்ளபடியே கல்யாண மாலை பெருமை கொள்கிறது!" எனக் குறிப்பிட்டார்.



• மணிமேகலை இளங்கோவன்

ஜான்சன்ஸ் இந்தியா நிறுவன சேர்மன் டி.எஸ். நடராஜன், பத்மாவதி நடராஜன், சக்தி மசாலா உரிமையாளர் பி.சி.துரைசாமி, சாந்தி துரைசாமி உள்ளிட்ட பிரமுகர்கள் மேடையில் குத்து விளக்கு ஏற்றி வைக்க, நிகழ்ச்சி மங்களகரமாய்த் துவங்கியது.

சூப்பர் ஜோடி நிகழ்ச்சியில் கலகலப்பாகப் பேசி, கருத்துகளைப் பரிமாறிக் கொள்வதற்காக நான்கு ஜோடிகள் தேர்வு செய்யப்பட்டிருந்தனர். ஒவ்வொரு ஜோடியும் எதிர்த்தரப்பிலிருந்து வாதங்களை சூடாகவும் சுவையாகவும் எடுத்து வைக்க, இது ஒன்று போதாதா? ''இன்றைய வாழ்வின் பரபரப்புக்குக் காரணம், வீட்டுச் சூழலா? வெளிச் சூழலா?'' என்கிற பட்டிமன்றம் களை கட்டத் துவங்கியது.

• இளங்கோவன்





• எம்.ஜி. சந்திரசேகரன்



• புவனேஸ்வரி சந்திரசேகரன்

# ராக்கெட் விட்டா...?

## கல்கி-கல்யாண மாலை நிகழ்ச்சியில் கலகலப்பு

### வீட்டுச் சூழலே!

- வழக்கறிஞர் எம்.ஜி.சந்திரசேகரன்

இன்றைய வாழ்விலே வீட்டுச் சூழல்லதான் டென்ஷன் அதிகமாயிடுது. ஒரு கேஸ்ல ஜெயிச்சுட்டு ஜாலி மூடுல வீட்டுக்கு வந்தா, வாசல்ல நின்னுகிட்டு "புள்ளைக்கு 108 டிகிரி ஜுரம். டாக்டர்கிட்ட காண்பிச்சுட்டு வாங்க"ன்னு சொல்றாங்க. அதை அவுங்களே அழைச்சுட்டுப் போயிட்டு வந்திடக் கூடாதா? வீட்ல உள்ளே நுழையும் போதே டென்ஷனைக் கூட்டி விடறாங்க. கல்யாணம் ஆகிறப்ப எல்லாரும் ராணி மாதிரிதான் இருக்காங்க. அதுக்கப்புறம் எல்லாரும் ஏனுங்க பிராணி மாதிரி ஆயிடுறாங்க?

• பாண்டியராஜன்





• கு. ஞானசம்பந்தன்

### வெளிச் சூழலே!

- புவனேஸ்வரி சந்திரசேகரன்

என்னோட வீட்டுக்காரர், குற்றவியல் பிரிவுல வக்கிலா இருக்கறதால, அவருக்கு எதைப் பார்த்தாலும் குத்தமாத்தாங்க தெரியுது. இப்பல்லாம் உடம்புக்கு முடியலைன்னு புள்ளைங்களைக் கூட்டிட்டுப் போனா, உடனே வீட்டுக்கு வந்துட முடியுதுங்களா? அங்கனப் போனா, முழ நீளத்துக்கு டாக்டர் சீட்டு எழுதித் தர்றாரு. பிளட் டெஸ்ட் எடுத்துட்டு வா, ஈசிஜி டெஸ்ட் எடுக்கணும். புள்ளையைப் படுக்க வை. ஸ்கேன் எடுத்துட்டு வா அப்படின்னு சங்கிலி கோத்த மாதிரி கட்டளை போடறாங்க. இதுக்கெல்லாம் பொம்பளைங்க ஒத்தை ஆளாப் போயி என்னங்க செய்ய முடியும்? நீங்களே சொல்லுங்க. இந்த மாதிரி வெளிச் சூழல்ல, டென்ஷன் வராம வேறென்ன வருங்க?

• பூர்ணம் விசுவநாதன்



• அபிராமி விசுவநாதன்



• விஜயலட்சுமி சின்ராஜ்



• சின்ராஜ்

### வீட்டுச் சூழலே!

- மணிமேகலை இளங்கோவன்

நெறைய ஆம்பளைங்க தினசரி காலையில வாக்கிங் போயிட்டு ஏன் லேட்டா வர்றாங்க தெரியுமா? வீட்டுல இருந்தா அத்தனை டென்ஷன். அதுதான் ஜாலியா வாக்

போய்ட்டு வர்றாங்க.

வீட்டுல உக்காந்து டீ.விலே கிரிக்கெட் மேட்ச் பார்க்கும்போது ஒரே டென்ஷனாத்தான் இருப்பாரு. ஹால்ல அப்ப நான் டீ.விக்கு குறுக்கே போயிட்டு வந்தாப் போதும். 'நீ குறுக்கே போனே. அதான் கங்குலி அவுட்டு'னு காச்மூச்னு கத்துவாரு. இதுபோல வீட்டுச் சூழல் தாங்க டென்ஷனைக் கூட்டிகிட்டே போகுது.

### வெளிச் சூழலே!

**- இளங்கோவன்**

என்னோட வீட்டுக்காரம்மா, என்னையக் கடவுள் பாதி; மிருகம் பாதின்னு சொன்னாங்க. ஒரு பேச்சுக்கு அப்படியே வெச்சுக்குங்க. நான் ஒரு அர்த்தநாரீஸ்வரர் மாதிரிங்க. என்னில் ஒரு பாதியை நான் என்னோட மனைவிக்கு தந்திட்டேனுங்க. எப்பவுமே கடவுள் பாதியில நான் இருக்கேன். மீதிப் பாதியில அவுங்க இருக்காங்க. அவுங்க என்னவா இருக்காங்கன்னு இப்ப புரிஞ்சுக்கங்க.

இன்றைய அவசர உலகத்துல வெளிச் சூழல்லதான் டென்ஷன் அதிகமா இருக்குது. அதுவும் கொஞ்சம் அசந்தா, ஈரோட்டுல சைக்கிள் கேப்புல ராக்கெட்டை விட்ருவாங்க. நாமதாங்க உஷாரா பார்த்துப் போகவேணும். இப்ப எந்த பஸ்சுல ஏறினாலும் காது செவிடாப் போற மாதிரி, டீ.வி. பொட்டியில சினிமா அத்தினி சவுண்டா ஓடிகிட்டே இருக்குங்க. பேருந்துப் பயணம் எல்லாம் பெரும் டென்ஷனா ஆயிடுது.

### வீட்டுச் சூழலே!

**- அபிராமி விசுவநாதன்**

வெளிச் சூழல்ல படுற டென்ஷன், தலையில இருக்கற சிக்கு மாதிரி. சாமர்த்தியமா ஒரு சீப்பு கொண்டு சீவி சரி பண்ணிடலாம். ஆனா வீட்டுச் சூழல்ல படுற டென்ஷன், இதயத்துல விழுற ஓட்டை மாதிரி. அதைச் சரி பண்றது ரொம்பவும் சிரமம்.

### வெளிச் சூழலே!

**- பூர்ணம் விசுவநாதன்**

நான் ஒரு விவசாயி. இதுல என்ன டென்ஷன்னு கேப்பீங்க. மூணு வருஷத்துக்கு முன்னாடி ஈரோட்டிலேருந்து தண்ணீர் சென்னைக்குப் போயிட்டு இருந்தது. இப்ப ஈரோட்டுல இருக்கறவங்க, குடிக்கிற தண்ணிக்கு குடங்களை எடுத்துட்டு அலைஞ்சுட்டு இருக்காங்க. போதாக் குறைக்கு, சாயக் கழிவு நீரை வயல்ல இறக்கி விடறாங்க. இப்ப வயல்ல எறங்கி வேலை செய்ய, கூலி ஆளுங்கக் கூட வர மாட்டேங்கறாங்க.

### வீட்டுச் சூழலே:

**- சின்ராஜ்**

எல்லாருமே பெண்களைத்தாங்க கல்யாணம் செஞ்சுக்குவாங்க. நான் என்னமோ டென்ஷனைத்தான் கட்டிகிட்ட மாதிரி இருக்கேன்.



• பொங்கி வழிந்தது...

### வெளிச் சூழலே!

**- விஜயலட்சுமி சின்ராஜ்**

ஜாதிச் சண்டை எங்கே உருவாகுது? வீட்டுக்குள்ளேயா? வெளில தானே! மதக் கலவரம் எங்கன வெடிக்குது? வெளிச் சூழல்லதானே அதெல்லாம் வருது?

தலைமை வகித்துப் பேசினார் பேராசிரியை சுந்தரவல்லி. "சமூகத்தில் வன்முறை அதிகமாக எங்கே இருக்கிறது? வெளிச் சூழலில்தான் ஆழமாக வேரூன்றியுள்ளது. ஓர் இளைஞன் கவிதை எழுதுகிறான்; ''எங்கள் ஊருக்குப் பேருந்து வர வேண்டும். அதனை நாங்கள் எரித்துப் பார்க்க வேண்டும்!'' என்று. குடும்பச் சூழ்நிலையில் பல இளம் பெண்கள், சித்தாள் வேலைக்காக பேருந்துகளில் ஏறிப் பயணம் செய்து வருகிறார்கள். ஆனால் அந்தப் பேருந்தின் உள்ளே, "சின்ன வீடா வரட்டுமா? பெரிய வீடா வரட்டுமா?'' போன்ற பாடல்களை அதிக இரைச்சலுடன் ஒலிபரப்பி, அந்த பெண்களை கொச்சைப்படுத்தி வருகிறார்களே, இதெல்லாம் வெளிச் சூழலில்தான் தினசரி அரங்கேறி வருகிறது!'' என முத்தாய்ப்பாய் தன் அணி வாதங்களுக்கு வலு சேர்த்தார் பேராசிரியை சுந்தரவல்லி.



...கொங்கு கலையரங்கம்

"வீட்டுச் சூழல்ல நிம்மதி இல்லே. எப்ப பார்த்தாலும் டென்ஷன். டென்ஷன். இத்தனை பேரும் கொங்கு கலையரங்கிலே மகிழ்ச்சியா கூடி இருக்காங்க. அப்ப வீட்டுச் சூழல்ல டென்ஷன் ஆகிறதால எல்லோரும் இங்கே வந்துட்டாங்க. இதுவே எங்களோட அணிக்குப் பெரிய வெற்றி!'' என்று பேசியவர், வீட்டுச் சூழலே என்கிற அணிக்குத் தலைமை வகித்த திரைப்பட நடிகர் பாண்டியராஜன்.

"புது மணப்பெண் முதன் முதலாக வீட்டுக்குள்ளே நுழையும்போது 'வலது காலை எடுத்து வைத்து வா... வலது காலை எடுத்து வைத்து வா...' என்று எல்லோரும் ஒன்று சேர்ந்து கோரஸாகச் சத்தம் போடுவார்கள். அந்த டென்ஷனில் வலது கால் எது என்றே மறந்து போயிருக்கும் அந்தப் பெண்ணுக்கு. வாழ்வின் முதல் டென்ஷன் அப்போதிருந்தே ஆரம்பித்து விடுகிறது. வெளிச் சூழல், பரபரப்புல, அந்த டென்ஷன்ல முகமே தெரியாத மனுஷாளுங்களாலக் கூட நமக்குக் காயங்கள் பட்டு விடும். வீட்டுச் சூழல்ல டென்ஷன்லேயும் அப்பப்ப காயங்கள் படும். ஆனா பெரும்பாலும் அது சின்னச் சின்னக் காயங்களாத்தான் இருக்கும். வெளிச் சூழல்ல கேப்புல ராக்கெட் வுட்டுப் படுற காயங்கள், ரொம்பவும் மோசமான நிலையில இருக்கும். இதுக்கெல்லாம் மருந்து இருக்கான்னு ஒரு கேள்வி வருது. எல்லாத்துக்கும் மருந்து இருக்குது. அன்பு நிறைந்த மனைவி, அழகான குழந்தைகள் உள்ளடக்கிய குடும்பச் சூழலே, வாழ்வில் நமது எல்லாவிதமான காயங்களுக்கும் மருந்தாக மாறி விடுகிறது. அதனால் இன்றைய வாழ்வின் பரபரப்புக்கு, டென்ஷனுக்குக் காரணம், வெளிச் சூழலே எனத் தீர்ப்பளிக்கிறேன்!'' என்று பாதுகாப்பான தீர்ப்பளித்து, நிறைவு செய்தார் பட்டிமன்ற நடுவராகப் பொறுப்பேற்றிருந்த முனைவர் கு. ஞானசம்பந்தன்.

இந்நிகழ்ச்சிக்கு வந்தவர்களுள் இருபத்தைந்து அதிர்ஷ்டசாலிகள் ஜான்ஸன்ஸ் வழங்கிய அன்புப் பரிசைப் பெற்றனர்.

கட்டுரை, படங்கள்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# வாசமல்லி

ஏற்கெனவே கேரள மாநில அரசாங்க விருது, ஏசியா நெட் விருது இரண்டும் கிடைத்து விட்டன. இப்போது தேசிய விருது. சந்தோஷமாய் இருக்கிறார் மீரா ஜாஸ்மின். 'பாடம் ஒண்ணு ஒரு விலாபம்' என்ற படத்தில் முஸ்லிம் பெண் கதாபாத்திரத்தில் அற்புதமாக நடித்ததற்காக விருது கிடைத்திருக்கிறது.

***''விருது வாங்கிக் கொடுத்த கேரக்டரைப் பற்றி?''***

'ஷாகின் பத்தாம் வகுப்பு படிக்கிற முஸ்லிம் பெண். படிப்பில் சுட்டி. அவளது பெற்றோர், ஒரு மரம் வெட்டும் தொழிலாளிக்கு, இரண்டாம் தாரமாக ஷாகினை வலுக்கட்டாயமாகத் திருமணம் செய்து கொடுக்கிறார்கள். ஒரே மாதத்தில் ஷாகினை அவளது கணவன் விவாகரத்து செய்து விடுகிறான். எதற்காக விவாகரத்து என்பது கூட ஷாகினுக்கு சொல்லப்படவில்லை.

ஆஹா! இனிமேல் நாம் ஸ்கூலுக்குப் போய் படிப்பைத் தொடரலாம் என சந்தோஷமாய்த் திரும்பி வரும் ஷாகின், வீட்டிலும், பள்ளியிலும் சந்திக்கிற பிரச்னைகள்தான் கதை. உணர்ச்சி பூர்வமான நடிப்பைக் காட்ட ஏராளமான வாய்ப்புகள் படத்தில் கிடைத்தது என் அதிர்ஷ்டம்தான்!''

***"விருதுப் பணத்தை என்ன செய்யப் போகிறீர்கள்?''***

"பாலக்காட்டில் 'ஸ்நேகம்' என்கிற அனாதைகள் இல்லத்துக்கு கொடுக்க முடிவு செய்திருக்கிறேன்.''

பேரைப் போலவே மனசும் வாசமானதுதான்!

- மானஸா

# பாலா தந்த பரிசு!

**வி**ருதுச் செய்தி வெளியாகி ஒரு மணி நேரம் கூட இருக்காது. 'அந்நியன்' படப்பிடிப்பில் இருந்த விக்ரமை மீடியாக்காரர்கள் சூழ்ந்து கொள்ள, "தவறான தகவலாக இருக்கப் போகிறது?" என முதலில் நம்ப மறுத்தார். தகவலை உறுதி செய்து கொண்ட பிறகுதான் பேச ஆரம்பித்தார். மகிழ்ச்சியும் படபடப்பும் சேர்ந்து கொண்டதில் விக்ரமின் பிரம்மாண்ட உடல் மெல்ல நடுங்கியது.

"இது பாலா தந்த பரிசு! 'சேது'வுக்கு தேசிய விருது கிடைக்கும் என்று பாலா எதிர்பார்த்தார். ஆனால் கிடைக்கவில்லை. எப்படியாது விக்ரமுக்கு தேசிய விருது வாங்கிக் கொடுத்து விட வேண்டும் என்று பாலா மனதுக்குள்ளேயே திட்டம் போட்டிருக்க வேண்டும். விருதைத் திட்டமிட்டு வாங்க முடியாது என்றாலும், வெட்டியானாக இந்திய சினிமாவுக்கு புதிய கதாபாத்திரத்தைத் தந்து, அதில் நடிக்க எனக்கு வாய்ப்புக் கொடுத்ததால் இந்த வரம் சாத்தியமாகி இருக்கிறது."

"நான் இதுவரை நடித்த படங்களில் மிகவும் கஷ்டப்பட்டு நடித்த படம் 'பிதாமகன்'. இப்போது 'அந்நியன்' படத்தில் ஒவ்வொரு காட்சியுமே கஷ்டமாக இருக்கிறது. பிதாமகனைப் போலவே, அந்நியனும் எனது சினிமா வாழ்க்கையில் முக்கியமான படமாக இருக்கும்" என்று முடித்துக் கொண்டார்.

ஹிருத்திக் ரோஷன் நடித்த 'கோயி மில்கயா', கமலின் 'விருமாண்டி' உட்பட சிறந்த தேசிய நடிகருக்கான விருது பரிசீலனை கடுமையாக இருந்தபோதும், விக்ரம் தனித்துவ நடிப்பால் சாதித்து விட்டார்.

- ஜெ.

# கம்பனில்






'கம்பன் விழா மேடைகள் ரொம்பவே கெட்டுப் போய்விட்டன.' பேச்சாளர் இலங்கை ஜெயராஜ் தற்குறிப்பேற்றத் துடன் இப்படிச் சொன்னபோது, அரங்கமே அதிர்ந்தது. காரணம், நவீன வாழ்க்கையோடு தொடர்புடைய தலைப்புகளில் அற்புதமான ஆய்வுரைகள் வழங்கி, சென்னை அன்பர்களைச் சிலிர்க்க வைத்தனர் பல்துறை அறிஞர்கள். கம்பனில் அறிவியல் கூறுகளைப் பற்றி, தொடக்கத்திலேயே அசத்தத் தொடங்கினர் டாக்டர் சுதா சேஷையன்.

''இராவணப் படைகளோடு நடந்த யுத்தத்தில் இலக்குவன் மூர்ச்சையாகிறான். எண்ணற்றோர் இறந்து போகிறார்கள். அவர்களை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டும் என்றால், மேருமலைக்கு வடக்காகத் தேடிச் சென்று, மூலிகைகள் நிறைந்த சஞ்சீவி மலையை இரவோடு இரவாகக் கொண்டு வந்தாக வேண்டும். அனுமன் விரைகிறான். அப்போது உத்திர குருநாட்டைத் தாண்டி மேரு மலையை நெருங்கும்போது, அங்கே சூரியக் கதிர்களைப் பார்த்து அதிர்ந்து போகிறான். அய்யோ! பொழுது விடிவதற்குள் காப்பாற்ற வேண்டும் என்ற நிலையில், சூரியன் வந்துவிட்டதா என்ற பதற்றம். பிறகுதான் தெரிகிறது இது உதிக்கும் சூரியன் அல்ல என்பது. மேரு மலையில் சூரியன் எப்போதும் ஊன்றி இருப்பான் என்பதை நினைவுக்குக் கொண்டு வந்து சமாதானம் அடைகிறான். வட துருவத்துக்கு அருகில் உள்ள நாடுகளில் சூரியன் ஆறு மாத காலம், இரவும் பகலும் ஊன்றித்தான் இருப்பான். இதை Land of midnight Sun என்று பிள்ளைகளுக்கு இன்று சொல்லிக் கொடுக்கிறோம். கம்பன் தனது அறிவியல் கண்களில் அன்றே பார்த்து சொல்லியிருக்கிறார்.

தசரதன் இறந்ததும், அதை ''தையற் கடலில் இருந்து தைலக் கடலில் இட்டான்'' என்ற வரிகளில் சொல்கிறார். எகிப்தில் இறந்த உடலைப் பதப்படுத்த மம்மிஃபிகேஷன் என்றால், நமது தட்பவெப்பத்துக்கு ஏற்றது, நடைமுறையில் இருந்தது எம்பாமிங்முறை என்பதை, எத்தனை அருமையாகச் சொல்கிறார். இரணியன் வதைப் படலத்தில் தூணிலிருந்து நரசிம்மம் வெளிப்படுவதை சொல்லும்போது, ''கிழிந்தது- ககன முட்டை'' என்கிறார். இந்த உலகம் உருண்டை என்பதில், பதினேழாம் நூற்றாண்டுவரை மேற்கத்திய உலகுக்குச் சந்தேகம் இருந்தது. ஆனால் மிகச் சாதாரணமாக ''ககன முட்டை கிழிந்தது. மேலும் கீழும்''

என்று சொல்லும்போது, expanding universe என்ற ஹாம்பிளின் பிரபஞ்ச விரிவாக்கக் கொள்கையை போகிற போக்கில் சொல்லிவிட்டுப் போகிறான்" என்றவர் "அணுவைப் பிளத்தல், வினை, எதிர்வினை, இயற்பியல், ரசாயனவியல் என கம்பனின் இராம காதையில்.

## எம்.பி.ஏ

அறிவியல் கூறுகள் ஆயிரமாயிரம் அமிழ்ந்து கிடக்கின்றன" என்றார்.

கம்பர் காட்டும் மேலாண்மையியல் கூறுகளை பிட்டுப் பிட்டு வைத்த இறையன்பு ஐ.ஏ.எஸின் பேச்சு, இராம காதையைப் படித்தால், எம்.பி.ஏ படிக்க வேண்டியதில்லை என்ற அளவுக்கு இருந்தது. "ஒரு நாடு எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு வன்மையும், வறுமையும் இல்லாத கோசல நாட்டைச் சிறந்த மேலாண்மை மிக்க நாடாக கம்பர் காட்டுகிறார். மேலாண்மை என்பது, ஏழு முக்கியக் கூறுகளைக் கொண்டது. நேர மேலாண்மை. அதிகாரப் பகிர்வு, முடிவெடுத்தல், தகவல் பரிமாற்றம், உறுதியான செயல்பாடு, மன அழுத்தத்தைக் கட்டுப்படுத்துதல், பேச்சு வார்த்தைத் திறன்.

வாலி இறந்த பிறகு நான்கு மாத காலம் அரசாள சுக்ரீவனுக்கு அனுமதி கொடுத்துவிட்டு, இராமனிடம் செல்கிறான் இலக்குவன். நான்கு மாதம் முடிந்ததும், செயலில் இறங்காமல் இருக்கும் சுக்ரீவன் மீது கோபம் வருகிறது. இந்த இடத்தில் நேரத்தின் அருமை இலக்குவனுக்குப் புரிகிறது.

முடிவெடுப்பதில் இராமன் திடமாக இருந்தவன். பரதன் எவ்வளவு சொல்லியும், அதை மறுபரிசீலனை செய்யாதவன். அதேபோல பரதன் நன்கு நாடாளத் தெரிந்தவன் என்பதால், அவனுக்கு அறிவுரை கூறாமல் சுக்ரீவனுக்கு எப்படி நாடாள வேண்டும் என்று இராமன் சொல்கிறான். காரணம் வாலியின் ஆட்சி அழிந்து சிதைந்த ஆட்சி" என்று எல்லா மேலாண்மைக் கூறுகளுக்கும் காட்சிகளையும், சாட்சிகளையும் இறையன்பு அடுக்கி முடிக்க, விறுவிறுப்பான ஆய்வுப் புத்தகம் படித்த உணர்வு. இறுதியாக கம்பனில் உளவியல் கூறுகள் பற்றி, இலங்கை ஜெயராமன் பேசியபோது நல்ல கவுன்சிலிங் கிடைத்த மாதிரி இருந்தது. நீதியியல் கூறுகளை தமது நீதித்துறை அனுபவத்தோடு தொடக்கத்திலேயே பகிர்ந்து கொண்டார் நீதிபதி தமிழ்வாணன்.

சென்னை கம்பன் கழகத்தின் முப்பதாம் ஆண்டு விழாவாக, ஏவி.எம். ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் மூன்று நாள் களை கட்டிய விழாவில், மூத்த தமிழறிஞர்கள் பலருக்கும் கம்பன் விருது உள்ளிட்ட பல்வேறு நினைவுப் பரிசுகள் வழங்கப்பட்டன. முத்தாய்ப்பாக, குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் தலைமையில் நடைபெற்ற முற்ற ஆய்வில்தான், இந்த நவீன தலைப்புக்களில் ஆய்வு மழை.


• அடிகளார்


• ஜெயராஜ்


• தமிழ்வாணன்


• இறையன்பு


• சுதா சேஷையன்

- ஜெய்

படங்கள்: மனோகர்

'கோர்ட் பெஞ்சில் உட்கார்ந்திருந்தபோது கவனித்தேன். அரவிந்த பாபுவின் கண்கள் கண்ணாடிக் கண்கள் போல் அசைவற்றிருந்தன. அவை இமைக்கவில்லை. அவற்றில் சலனம் சிறிது கூட இல்லை. எங்கோ படித்திருக்கிறேன், உள்ளத்தின் சஞ்சலத் தன்மை முற்றிலும் கட்டுப்படுத்தப்பட்டால், கண்கள் இந்த மாதிரி ஆகுமென்று... சீசன் அவரிடம் சென்று மெதுவாகக் கேட்டான் : 'சாதனை செஞ்சதிலே உங்களுக்கு என்ன கிடைச்சது?' அவர் சிரித்தவாறு சொன்னார் : 'நான் தேடியது கிடைச்சது.' நாங்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு உட்கார்ந்தோம். அவர் கூறிய உள்ளுலகத்தின் விசித்திரக் கதையை எங்களால் அதிகம் புரிந்துகொள்ள முடியவில்லைதான். ஆனால் அந்த அதிசய மனிதரின் வாழ்க்கையில் ஒரு முற்றிலும் புதிய அத்தியாயம் தொடங்கிவிட்டது என்பதை மட்டும் நாங்கள் உறுதியாக அறிந்து கொண்டோம். அவர் செய்யத் தொடங்கிய தாந்திரீக சாதனைகளைப் பற்றியும் சிறிது கேட்டோம். அவர், ஒரு மாமனிதர் சூக்கும சரீரத்தில் தம்மிடம் வந்து அவற்றைக் கற்றுத் தருவதாகச் சொன்னார். 'இந்த வழக்கின் முடிவு என்னவாகும்' என்று கேட்டோம். 'நான் விடுதலை பெறுவேன்' என்று அவர் சொன்னார்.

(நூல் : 'நாடு கடத்தப்பட்டவனின் தன் வரலாறு'; ஆசிரியர் : உபேந்திரநாத் பந்த்யோபாத்தியாய்; வங்க மூலத்திலிருந்து தமிழாக்கம் : கல்கத்தா சு. கிருஷ்ணமூர்த்தி.)

# அன்னை வந்தார்!



• அரவிந்தர் ஆசிரமத்தின் பழைய தோற்றம்

புதுச்சேரியின் பழைய வரலாறு பற்றி ஆய்வு மேற்கொண்ட பிரெஞ்சுப் பேராசிரியர் ஜோனியோ டியூபிரிவில், தற்போதைய அரவிந்த ஆசிரமம் அமைந்துள்ள இடம் பற்றி ஓர் உண்மையை வெளிப்படுத்தினார். ஆசிரமம் அமைந்துள்ள அந்த இடம் சாதாரணமான இடம் அல்ல. புதுச்சேரியே சாதாரணமான ஊர் அல்லவே! 'வேதபுரி' என்று வழங்கப்பட்ட பிரதேசம் அல்லவா அது! புதுச்சேரி பழங்காலத்தில் வேதக் கல்விக்கு ஒரு மையமாக விளங்கிய திருத்தலம். பற்பல ஆதாரங்களையும், குறிப்புகளையும் கொண்டு அந்தக் கால வேதக் கல்லூரியின் பிரதான கட்டடம் இப்போது அரவிந்த ஆசிரமம் அமைந்துள்ள அதே இடத்தில் தான் இருந்தது என்பதை, ஜோனியோ டியூபிரிவில் கண்டுபிடித்துச் சொன்னார். ஆன்மிக அன்பர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

சந்திரநாகூரில் ஸ்ரீ அரவிந்தரின் அடியவராய் மாறியிருந்தவரும் அரவிந்தர் புதுச்சேரிக்கு வருவதற்கு ஏற்பாடு செய்தவருமான மோதிலால் ராய், அரவிந்தருக்கு அடிக்கடி கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்தார். சரணாகதி தத்துவம் குறித்த அவரது பல சந்தேகங்களுக்கு, அரவிந்தர் தம் பதில் கடிதங்களில் விளக்கமளித்தார். அரவிந்தர் எழுதிய கடிதங்கள் எல்லாம் ஆன்மிகப் பொக்கிஷங்களே. பழங்கால ரிஷிகள் சீடர்களுக்கு எப்படியெல்லாம் விளக்கங்கள் தந்து, அவர்களின் அறிவுச் சுடரைத் தூண்டினார்கள் என்றறிய இப்போது மார்க்கமில்லை. ஆனால் மகரிஷி ஸ்ரீஅரவிந்தர் எழுத்து மூலமாகத் தந்த விளக்கங்கள்




## திருப்பூர் கிருஷ்ணன்

இன்றும் படிக்கக் கிட்டுகின்றன. ஞானத் தேடலுடன் வாழ்வை இறையருளுக்காக அர்ப்பணிக்கும் ஆன்மிக மாணவனுக்கு, அவை சுடர்விளக்காக வெளிச்சம் காட்டு கின்றன.

ராய்க்கு எழுதிய சில கடிதங்களில் ஸ்ரீ அரவிந்தர், தம்மை மறந்து 'காளி' என்று கையெழுத்திட்டிருக்கிறார். அவர் எத் தகைய மனநிலையில் இருந்தார் என்பதை அந்தக் கையெழுத்து புலப்படுத்துகிறது. (ராமகிருஷ்ண பரமஹம்ஸர் ஸித்தி அடைந்தபோது 'அம்மா காளி! நீ எங்கே போய்விட்டாய்?' என்றல்லவா சாரதா தேவி கதறுகிறார்!) சிறையில் கிடைத்த நேரடிக் கிருஷ்ண தரிசனத்திற்குப் பின் அரவிந்தர் கொஞ்ச காலம் தீவிர சக்தி உபாசகராக இருந்ததை உணர முடிகிறது. அதனால் தான் சக்திதாசரான பாரதி யுடன் இயல்பாக அவர் மனம் பொருந்தி, நட்புக் கொள்ள முடிந்தது போலும். (அனுமனின் அக உணர்வுகளை மனத்தில் வரவழைத்துக் கொண்டு, சில காலம் சாதனையில் ஈடுபட்டார் ராமகிருஷ்ண பரமஹம்ஸர். அக்காலத்தில் அவர் எவ்விதமெல்லாம் இயங்கினார் என்பதை, சாரதானந்தர் எழுதிய 'குருதேவரின் வாழ்க்கை வரலாறு' சொல்கிறது. குதித்துக் குதித்தே நடந்தார் குருதேவர். பழங்களை யும் கிழங்குகளையும் தவிர வேறெதையும் அவரால் உண்ண இயலவில்லை. நாளின் பெரும் பகுதியை மரக் கிளைகளிலேயே கழித்தார். அந்த மனநிலையின் உச்சகட்ட வெளிப்பாடு உடலளவிலும் தோன்றிய தாம். ஆஞ்சநேய பாவனையை மேற் கொண்டிருந்த காலத்தில், குருதேவரின் முதுகுத் தண்டின் கீழ்ப் பகுதி, ஓர் அங்குலத்திற்கும் மேலாக அப்போது வளர்ந்திருந்ததாம். மகான்களின் பக்தி நெறி அத்தனை தீவிரத் தன்மை கொண் டது. அதனால் தானே அவர்கள் மகான் கள் என அழைக்கப்படுகிறார்கள்!)

**தொ**டக்கத்தில் அரவிந்த ஆசிர மத்தில் பொருளாதார நெருக்கடி இருக்கத் தான் செய்தது. அரவிந்தர் நீதிமன்றத்தில் தமக்காக வாதாடிய சித்தரஞ்சன் தாசின் 'ஸாகஸ் சங்கீத்' என்ற வங்காளக் கவிதை நூலை, ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். அதற்காக அந்தக் காலத்தில் மிகப் பெரிய தொகை எனக் கருதப்பட்ட ஆயிரம் ரூபாயை அனுப்பினார் தாஸ். வழக்கறி ஞர்களுக்குக் குற்றம் சாட்டப்பட்டவர்கள் ஊதியம் கொடுப்பது தான் வழக்கம். ஆனால் இங்கே வழக்கறிஞர், தாம் யாருக் காக வாதாடினாரோ அவருக்குப் பணம் அனுப்பினார்!

மோதிலால் ராய் வங்கத்திலிருந்த சில தேசபக்தர்களிடமிருந்து பணம் பெற்று அவ்வப்போது அனுப்பிக் கொண்டிருந் தார். அரவிந்தர் பணத் தொல்லையில்லா மல் தமது யோக சாதனையைத் தொடர வேண்டும் என்று அவரால் ஈர்க்கப்பட்ட அன்பர்கள் கருதினார்கள். அப்படிப் பட்ட அரவிந்த ஈடுபாடு கொண்ட செல்வந்தர்களில் ஒருவர், சந்திரநாகூரைச் சேர்ந்த துர்காதாஸ் சேத். அவரும் பணம் அனுப்புவதுண்டு.

(விவேகானந்தர் வாழ்விலும் கூடக் கடும் பொருளாதாரப் பிரச்னையை அவர் சந்தித்ததுண்டு. பரமஹம்ஸர் ஸித்தி அடைந்த பிறகு ஸ்ரீராமகிருஷ்ண சங்கம் அமைத்து வாழ்ந்தபோது, ஆசிரமத்துத் துறவிகள் இருவர் ஒரு சேர வெளியே செல்ல இயலாத சூழல் இருந்தது. மிகக் குறைவான ஆடையணிந்து ஆசிரமத்தின் உள்ளே வாழ்ந்து வந்தார்கள் அவர்கள். வெளியே செல்ல வேண்டுமானால், ஒரே காவி வேட்டியும், ஒரு மேலங்கியும் தான்

## அருள்வாக்கு

**உ**ணர்ச்சி வேகங்களின் பிரவாஹம் வியாதியாகப் பிடித்துக் கொண்டிருக்கிற போது கல்விதான் அதற்கு மருந்து. மூளை வளர்ச்சி மட்டுமின்றி முழு மநுஷ்ய வளர்ச் சிக்கான கல்வியாக அது இருக்க வேண்டும்.

மருந்து சாப்பிடும்போது பத்தியம் வைக் காமலிருக்க மாட்டார்கள். மருந்தைவிடக் கூடப் பத்தியமே வியாதி தீர்ப்பதில் அதிக உபகாரம் செய்வதும் உண்டு.

அப்படி, 'வித்யை' என்கிற கல்வி மருந் தோடு சேரும் பத்தியமாக 'விநயம்' என்ற கட்டுப்பாடு, எளிமையை ஆன்றோர் வைத் திருக்கிறார்கள். வித்யையும் விநயமும் யுவப் பிராயத்தினருக்கு இரண்டு கண்கள் மாதிரி.

இப்போது விநயத்தில் அடங்கி, தாழ்ந்து இருந்தால் பிற்பாடு உச்ச நிலைக்கு உய ரலாம். கால்தூசியை உதாரணம் காட்டு வார்கள். அது நம்முடைய காலுக்கு அடியில்



பொடியுண்டாக எழும்புகிறது. ஆனால் சட்டென்று காற்றிலே அந்த பொடி உயர்ந்து நம் தலைக்கு மேல் போய்விடுகிறதல்லவா? அப்படி, கல்வி கற்கும் நாளில் அடி நிலையில் அடங்கியிருந்தால் பிற்பாடு வாழ்க்கைக்குப் பொறுப்பெடுத்துக் கொள்ளும் நாளில் உயர்ந்த ஸ்தானம் பெறலாம். இந்த உண்மை நம்முடைய மஹத்தான நாகரிகத்துக்கும் கலாசாரத்துக்கும் வாரிஸாக உள்ள யுவர்களின் உள்ளத்தில் பதிய வேண்டும். பகவான் அதற்கு க்ருபை பண்ண வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

அவ்வளவு பேருக்குமாக உண்டு. அதைத் துவைத்து, மாற்றி மாற்றி யார் வெளியே செல்கிறாரோ அவர் அணிய வேண்டிய நிலை. அந்த நிலை மாறி, மெல்ல மெல்லப் பொருளாதார ஆதரவு ஏற்படக் கொஞ்ச காலம் ஆயிற்று.

இந்தக் காலகட்டத்தில் தான் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த அந்த மகத்தான ஆன்மிக நிகழ்ச்சி, புதுச்சேரியில் நடந்தது. 1914 மார்ச் 29ம் நாள், இந்திய ஆன்மிக சரித்தத்தில் முக்கியமான ஒரு பொன்னாள். அன்று தான் மிர்ரா என்ற பெயருடைய மீராம்பிகை என்ற ஸ்ரீ அன்னை, பாரீசிலிருந்து தம் கணவர் பால் ரிச்சர்டுடன் புதுச்சேரிக்கு வந்தார். மலர்களையே மொழியாக்கி, இறைச் சக்தியுடன் உரையாடிய அன்னை என்ற தூய மலர், அன்று புதுச்சேரியில் அருள் பொங்கும் தன் தாமரைப் பாதங்களைப் பதித்தது. புதுச்சேரி மண் தன் பாக்கியத்தை எண்ணி ஒருமுறை சிலிர்த்து அடங்கியது.

ஸ்ரீ அரவிந்தரை அன்று மாலை மூன்றரை மணிக்குச் சந்தித்தார் அன்னை. அந்த நேரம் அசுர சக்திகளை வீழ்த்துவதற்காக, தேவ சக்திகள் ஒன்று திரண்ட புனித நேரம். அந்த நேரத்தில் உலகெங்கும் நல்லுணர்வுகள் ஆனந்தம் கொண்டு நர்த்தனம் செய்தன. தீய உணர்வுகள் நடுநடுங்கி அஞ்சிப் பதுங்கின. தோன்றாத் துணையாக மனத்தில் தோன்றி, இதுவரை தமது ஆன்மிக சாதனையில் வழிகாட்டிய வரும், தாம் கடவுள் கிருஷ்ணராக தம் உள்ளுணர்வால் ஏற்கெனவே உணர்ந்தவரும் ஸ்ரீ அரவிந்தரே என்பதை, முதல் பார்வையிலேயே அன்னை புரிந்து கொண்டார். மிர்ராவின் கனவில் அடிக்கடிக் காட்சியாகக் கிடைத்த இரண்டு முக்கோணங்களுக்கு இடையேயான தாமரை மலர்க் குறியீட்டுக்கு, பால் ரிச்சர்ட் ஏற்கெனவே ஸ்ரீ அரவிந்தரிடம் விளக்கம் கேட்டு அறிந்தாரே! அந்த விளக்கத்தால் கவரப்பட்டுத்தான் அன்னை ஸ்ரீ அரவிந்தரைச் சந்திக்க வந்தார். பின்னர் 1920ம் ஆண்டு, அன்னை மறுபடி புதுச்சேரிக்கு வந்து நிரந்தரமாக அரவிந்த ஆசிரமத்துடன் தம்மை இணைத்துக் கொண்டு விட்டார்.

அதிமன சக்தியைக் கீழ் இறக்கி, மனிதனை அவனது கீழான உணர்வு, நிலைகளிலிருந்து மேலுயர்த்தும் பணியை யோக சாதனை மூலம் நிகழ்த்த வேண்டி, இரு ஆன்மிக சக்திகள் ஒன்றாக உழைக்கத் தொடங்கின. அயராத பல்லாண்டுக் கால உழைப்பு அது. அந்த யோகத்தால் மனித குலம் அடைந்த நற்பயன் வார்த்தைகளால் விவரிக்க இயலாதது. 'வானகம் இங்கு தென்பட வேண்டும்!' என்ற மகாகவியின் வாக்கியமே அரவிந்த தத்துவங்களின் மொத்த சாரம். விண்ணை மண்ணுக்குக் கொண்டு வரும் மாபெரும் ஆன்மிக முயற்சியில், அன்னையும் ஸ்ரீ அரவிந்தரும் ஈடுபட்டு தியானம் செய்யலானார்கள். யோக சாதனைகள் நாளுக்கு நாள் வளரலாயின.

ஸ்ரீ அரவிந்தரின் பிறந்த தினமான ஆகஸ்ட் 15ம் நாள் 1914ம் ஆண்டு... இதுவரை காணாத விந்தையாக, முற்றிலும் வித்தியாசமான ஒரு காகித மலர் அன்று மலர்ந்தது. அது நாம் சாதாரணமாகக் காகித மலர் என வழங்கும் மணமில்லாத போகன்வில்லா அல்ல, உண்மையான காகித மலர். அது காகித மலரேயானாலும் அதன் நறுமணமோ உலகை மயக்கியது. அந்த மலர்...

(அமுதம் பெருகும்)

# கமல்ஹாசனும் காளமேகப் புலவரும்!

இரட்டை அர்த்த வசனங்களையும், சினிமாப் பாடல்களையும் நியாயப்படுத்த, திரையுலகம் எடுத்துக் கொள்ளும் சிரமங்களைப் பார்த்துப் பரிதாபம்தான் ஏற்படுகிறது. அந்த அபத்த முயற்சிகளின் வரிசையில் கடைசியாய்ச் சேர்ந்திருப்பது கமல்ஹாஸன் உதிர்த்துள்ள முத்து. தமிழ் இலக்கிய உலகமும், தமிழ் சினிமா உலகமும் இணைந்து சாதிக்கவில்லையே என்ற ஏக்கத்துடன் ஆரம்பித்தவர், அத்தோடு நிறுத்திக் கொண்டிருக்கலாம். "இரட்டை அர்த்தப் பாடல்களும், வசனங்களும் சமூகத்தை மாற்றிவிடும் என்பது அக்ரஹாரத்தனமான பேச்சு; காளமேகப் புலவர் பாடாததையா சினிமாப் பாடல்கள் சொல்கின்றன...?'' என்று ஒரு கேள்வியை எழுப்பியிருக்கிறார். (இந்தியா டுடே 25.8.04).

சிலேடையில் வல்லவரான காளமேகப் புலவர், பெண்களைக் கொச்சைப்படுத்த சிலேடையை ஒரு யுக்தியாகப் பயன்படுத்தவில்லை. சமத்காரமான ஒப்பீடுகளைச் செய்து, அழகான பாடல்களைப் பாடினார்.

ஆனால், ஆபாசத்தை லட்சக் கணக்கானோருக்கு ஒளி-ஒலி வடிவில் தர வேண்டும் என்று, ஏதோ நேர்த்திக் கடன் போல் திரையுலகம் இன்று செயல்பட்டுக் கொண்டிருக்கிறது! இது சகிக்க முடியாத அவலம்.

சினிமா என்பது ஊடகங்களுள் பிரும்மாஸ்திரம். அப்படிப்பட்ட ஓர் ஊடகம், பாலுணர்வைத் தூண்டும் கொச்சையான பாடல்களையும், காட்சிகளையும் மீண்டும் மீண்டும் வழங்கும்போது, அதைத் தொடர்ந்து பார்க்கிற ஒரு சமுதாயத்தின் மெல்லுணர்வுகள் தேய்ந்து, மறைந்து போகின்றன. வக்கிரமும், அதனோடு இணையும் பாலியல் வன்முறையும், அந்தச் சமுதாயத்தின் மனத்தில் வளர்கின்றன. இது மனவியல் ரீதியாக நிரூபணமான உண்மை.

இந்தக் 'கைங்கர்யத்தை' இன்று தொலைக்காட்சிகளும், சினிமாவும் (பத்திரிகைகளும்தான்) தொடர்ந்து செய்து வருகின்றன. எப்போதேனும் ஒருமுறை திரையரங்கில் இத்தகைய காட்சிகளைச் சில நிமிடங்களுக்குப் பார்த்தது போய், இன்று வீட்டுக்குள்ளேயே தொலைக்காட்சியில், இத்தகைய காட்சிகளைத் தொடர்ந்து பார்க்கிற சூழலும் ஏற்பட்டிருக்கிறது.

கமல்ஹாசன் தமது கட்டுரையில் குறிப்பிட்டிருப்பது போல், பெப்ஸி-கோக் குடித்து உடம்பைக் கெடுத்துக் கொள்வதும், இத்தகைய காட்சிகளால் உள்ளமும் உணர்வும் சீர்குலைந்து போவதும் எவ்வாறு ஒன்றாக முடியும்!

இந்த விதண்டாவாதத்தில் கமல் அக்ரஹாரத்தை வம்புக்கிழுக்கவும் முயன்றிருக்கிறார். அவர் குறிப்பிடும் 'அக்ரஹாரம்' என்ற குறியீட்டுக்குள் அடங்காத இதர மக்கள், சமூகத்தின் சீர்கேடு குறித்துக் கவலை இல்லாதவர்களா?

சினிமாவை டெட்டாலில் அலசித் தர வேண்டும் என்று யாரும் கேட்கவில்லை. பெண்மையைக் கொச்சைப்படுத்தி, பாலுணர்வை வியாபாரமாக்குவதுதான் கடுமையான ஆட்சேபணைக்குரியது; கண்டனத்துக்குரியது. தமிழகத்தில் இன்று அதிர்ச்சி அலைகளை எழுப்பி வரும் ஜெயலட்சுமி விவகாரம் போன்றவற்றுக்கு அது வித்திடவல்லது.

கல்கி வழங்கும்

# சென்னை ஸ்கேன்

கல்கி துளையில் ஒரு மின்னல்!

[சென்னை வாசகர்களுக்கு மட்டும்]











# ஸ்வீட் 16!

"இசையைத் தவிர வேறென்ன பிடிக்கும்?"

"ம்... பாட்டு கேட்பேன், கீ போர்டு வாசிப்பேன்!"

சில வருடங்களுக்கு முன்பு பாலசந்தரின் 'கையளவு மனசு' சீரியலில் கீதாவின் கடைக்குட்டியாக, கொள்ளை கொள்ளும் அழகில், ஸ்வீட்டாக பாடி நடித்து ரஜினி, கமல் வரிசையில் கே.பி.யின் மோதிரக் கையால் ஆசீர்வதிக்கப்பட்ட தீபிகாதான் இந்தப் பெண். (என்ன ஆச்சர்யம் தாங்கலையா?)

இன்றும் இவர் நினைவில் இசையைத் தவிர வேறெதுவும் கிடையாது என்பதற்கு சாட்சியே மேலே அவரளித்த பதில்.

வாழை மரமும் பெண்களும் வளர்வதே தெரியாது என்பது போல அன்று, அனைவரையும் தன் வசப்படுத்திய பாலமனம் மாறா குழந்தைத்தனத்திலிருந்து வெகு சீக்கிரம் விடுபட்டு, இன்று 'கண்ணாடிப் பூக்கள்', 'உள்ளம் கொள்ளுதே' படங்களில் ஹீரோயின்களுக்குப் பாடிக் கொண்டிருக்கிறார் தீபிகா.

ஹரிணி, மகாநதி ஷோபனா மற்றும் புராணமான பாடகிகளால் தாக்குப் பிடிக்க முடியாத சுதா ரகுநாதனின் கர்நாடக சங்கீதப் பயிற்சியை, ஒன்பது வயது முதல் இன்று வரை அவரின் ஒரே சிஷ்யை என்கிற அந்தஸ்தோடு பயின்று வருகிறார். தன் ஸ்வீட் 16 குரலின் வழியே பாப் மற்றும் பக்திப் பாடல்கள், லைட் மியூசிக், கச்சேரிகள், நடிப்பு, மாடலிங், டப்பிங் என அனைத்திலும் ஈடுபடுவதோடு, லண்டன் டிரினிட்டி கல்லூரியில் பியானோ, கீ போர்டு முறையாகப் பயின்று, தனியே இசைக் கோர்ப்புகளும் செய்து வருகிறார்.

"கர்நாடக சங்கீதம் மூலமாக நல்ல தமிழ்ப் பாடல்கள் பாடி பாமரர்களுக்கும் இசையைக் கொண்டு சேர்ப்பது" என அடுத்த தலைமுறைக்கு முன்னுதாரணமாகத் திகழவிருக்கும் தீபிகா இது போன்ற வித்தியாசமான கனவுகளை தம்முள் விதைத்திருக்கிறார்.

இதுவரையிலான சாதனைப் பட்டியல்களே நம் புருவங்களை வில்லாய் வளைத்தாலும், கையளவு மனதிலுள்ள கடலளவு ஆசைகளும், அதற்கான இவரது ஓயாத மெனக்கெடுதல்களையும் பார்க்கும் பொழுது, ஏ.ஆர். ரஹ்மானுக்குப் பிறகு உலகின் அத்தனை மூலை முடுக்குகளுக்கும் சென்று சாதிக்கப் போகும் தமிழர், தீபிகாவாகத் தானிருப்பார். பரிபூரண வாழ்த்துகள் பெண்ணே!

✍ ச.ந. கண்ணன்



பொலிட் பீரோ

## ரூட்டு... புது ரூட்டு

இதுவரை ஜார்ஜ் புஷ் - பின்லேடன் ரேஞ்சுக்கு 'நட்பா' இருந்த டாக்டர் இராமதாசும், திருமாவளவனும், சென்னையில் நடைபெற்ற விழா வொன்றில் திடீரெனக் கைகுலுக்கி விட்டனர். இதனைச் சற்றும் எதிர்பார்க்காத தி.மு.க தரப்பு, பா.ம.கவின் இந்த புது ரூட்டை உன்னிப் பாகக் கவனிக்கத் துவங்கியுள்ளது. "சேலம் மாநாட்டுக்குப் பிறகு ஓர் அதிரடி முடிவெடுத்து, அதன்படி கூட்டணிக் கட்சிகளுக்கு அதிர்ச்சி வைத்தியம் கொடுத்து, செக் வைக்க உள்ளதாக" உடன் பிறப்பு ஒருவர் கிசுகிசுக்கிறார்.

(என்னமோ நடக்குது- மர்மமா இருக்குது!)





பெரும்பாலான திமுக உறுப்பினர்கள் மாநாட்டுக்குச் சென்ற நேரத்தில் மாநகராட்சிக் கூட்டத்தை நடத்த முடிவெடுத்தது, மற்றும் பெண் கவுன்சிலர் ஒருவர் கடத்தப்பட்டது மற்றும் 'கலபமான' விவகாரம் ஆகியன குறித்து மன்றத்தில் பெரும் புகைச்சல் இருக்கிறதாம். ஆளும் கட்சியும் தன் பங்குக்கு பல்வேறு issue-க்களைக் கைவசம் வைத்துள்ளதாம்.

(ஆஹா! கிளம்பிட்டாங்க! கிளம்பிட்டாங்கய்யா!)

முராரி

## ஸ்மைல் ப்ளீஸ் வெட்டுக்கிளி!



வெட்டுக்கிளி, மண்புழு, வௌவால், புறா போன்ற பூச்சி மற்றும் பட்சி இனங்களிடம் உங்களுக்கு ஈடுபாடு உண்டா? அவற்றோடு நெருங்கிப் பழகுபவரா நீங்கள்? மேகத்தைக் கலைத்துப் போட்டு வானம் விளையாடும் விளையாட்டையும், வர்ணங்கள் மற்றும் அந்தி நேரத்தையும் ரசிப்பதில் உங்களுக்கு ஆர்வமா? இயற்கையின் ஒவ்வொரு ஆச்சரியமான அசைவுகளையும் காமிராவில் பதிவு செய்து விடத் துடிப்பவரா நீங்கள்? அப்படியானால் பெலிகன் நேச்சர் ஃபோட்டோ க்ளப் உங்களைக் கட்டாயம் கவரும்.

இயற்கையை துடிப்புடன் ரசித்து, படம்பிடிக்கும் ஆர்வம் கொண்ட சிறு குழு சேர்ந்து அமைத்த ஓர் இயக்கம்தான் அவ்வை சண்முகம் சாலையில் அமைந்துள்ள பெலிகன் நேச்சர் ஃபோட்டோ க்ளப். இதிலுள்ள உறுப்பினர்கள் குறிப்பிட்ட தினத்தில் ஒன்று கூடி, தாங்கள் எடுத்த படங்களைப் பற்றி விவாதித்து சிறந்த புகைப்படத்திற்கான விருதுகளையும் வழங்கி உற்சாகப்படுத்துகிறார்கள்.

கண்களைக் கவரும் கண்காட்சியும் இங்கு உண்டு. வித்தியாசமான கோணங்களில் எடுக்கப்பட்ட பல புகைப்படங்கள் இதில் இடம் பெற்றுள்ளன. வார்த்தைகளை விட வலிமை வாய்ந்தவை புகைப்படங்கள் என்பது, எந்தளவு உண்மை என்பதை இங்கே வந்து தெரிந்து கொள்ளலாம்.

+ கங்கா





யூத் கடல்

# உருப்படியான பசங்க!

லீவு நாள்னா இளசுங்க கூட்டத்தை எங்க பார்க்கலாம்? ஸ்பென்சர், பீச், தியேட்டர், காபி ஷாப், டிஸ்கோதே... ஆனா 'சஹானா குரூப்' வித்தியாசமானவங்க! அவங்க ஆகஸ்ட் - 15 ஞாயிற்றுக்கிழமை அன்று இருந்த இடம் வில்லிவாக்கத்திலுள்ள ஒரு குழந்தைகள் ஆசிரமம்! தங்களின் முதல் மெல்லிசைக் கச்சேரியை பிரமாதமா அரங்கேற்றினாங்க! எல்லாரும் D.G.வைஷ்ணவா ஸ்டூடண்ட்ஸ்.

"நாங்க எல்லோரும் நிறைய இண்டர் காலேஜ் மீட்ஸ் போவோம். ஸ்டேஜ் ஷோ நிறையப் பண்ணுவோம். எங்க திறமையை வைச்சு ஏதாவது உருப்படியா பண்ணணும்னு தோணிச்சு! அதான் இந்த முயற்சி" என்கிறார் டீமின் கேப்டன் ஜெய்சன்.

"ஓமகாசீயா..." உயிர் உருக 'உயிரின் உயிரே' பாடிய ஸ்வப்னா (கேரளாவாம்! ஆனா தமிழ் அவ்வளவு சுத்தம்!) "குழந்தைத் தொழிலாளர்களே இருக்கக் கூடாது. அதுக்கு சட்டத்தைக் கடுமையாகக் கொண்டு வரணும்" என படபடத்தார்.

"எங்க ஜெனரேஷன்ல ஆதரவற்ற குழந்தைகளே இருக்க மாட்டாங்க! அதுக்கு நான்கூட ஒரு குழந்தையைத் தத்தெடுக்கப் போறேன்" என ஆச்சரியமூட்டினார் சைலேஷ்.

"நான் மக்கள் தொகை பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவேன்" என திடீரென உணர்ச்சி வசப்பட்டார் மகேஷ். "அதுக்கு நீ என்னடா பண்ணுவ?" என ஆளாளுக்கு அவரை ஓட்ட ஆரம்பிக்க, சாட் சீரியஸ் டோனிலிருந்து ஜாலியின் திசைக்குத் திரும்பியது.

"இவன் ஒரு தடவை புரொபசர் ஒருத்தர்கிட்ட போய் சப்ஜெக்டுல டௌட் கேட்டான். அவரோ கூலாக, "அதைத் தெரிஞ்சுக்கிட்டு நீ என்ன பண்ணப் போற?"ன்னு சொல்லிட்டாரு. அதாவது பரவாயில்ல டௌட்டை என்கிட்ட கேட்கச் சொல்லியிருக்காரு. அதான் பையன் கதிப்பாகிட்டான்" என தன் நண்பனைக் கலாய்த்தார் வசந்த். "ஒரு தடவை ஸ்டேஜ்ல நாங்க பாடறப்போ, வாயிலயே ராக்கெட் விட்டாங்க. ஆனா இப்ப இந்தளவு வந்ததே பெருமையா இருக்கு!" புன்னகைத்தார் பவித்ரா.

"எல்லாம் சரி! உங்க நல்ல காரியங்கள் காலேஜ் - டேஸ் முடியற வரைதானா?" என மறித்தோம்.

"நிச்சயமா இல்ல! வருங்காலத்துல இதே டீமோட நிறைய நல்ல காரியங்களைப் பண்ணுவோம்" என்றனர் கண்களில் நம்பிக்கை மின்ன!

ஹாட்ஸ் ஆஃப் சஹானா! கீப் இட் அப்!

+ முகில்








# டேஸ்ட்.காம்

உச்சிவெயில் மண்டையைப் பிளக்கும் நேரத்தில் கோடம்பாக்கம் ஹைரோட்டில் சென்று கொண்டிருக்கிறீர்கள். 'இலேசாக நனைத்துக் கொண்டால் தேவலை' என உங்கள் தொண்டை நினைக்கிறதா? உடனடியாக அழைத்துச் செல்லுங்கள் மீனாட்சி கல்லூரிக்கு அருகிலுள்ள Shakti Foods-க்கு ஜாலியா.

இங்கு ஃப்ரூட் ஜூஸ், மில்க் ஷேக் ஐட்டங்களைச் சென்னையில் மற்ற இடங்களில் கிடைக்காததாகப் பார்த்து பார்த்து தயாரித்துத் தருவதாகவும், அதற்கேற்ற வரவேற்பும் கஸ்டமர்களிடமிருந்து வருவதாகவும் கூறுகிறார் இதன் உரிமையாளர் குமார். இவற்றில் முக்கியமானது BOYS SPECIAL (No Girls Special?) & இத்தாலியன் ட்விஸ்ட். இதில் ஆறு வகை பருப்புகளின் துருவல் தூவப்பட்டிருக்கும்.

டம்டம் பனானா, American Fizz, சொனாரிட்டா, போன்றவை Shakti Foods-ன் ஸ்பெஷல் ஐட்டம்ஸ். நம்ம சென்னை நாக்குகளுக்காகவே ஸ்பெஷலாகத் தயாரிக்கப்பட்டதுதான் The Chennai Cocktail. மற்றபடி எல்லா வகை Chat Itemsம் உண்டு. மொத்தத்தில் கல்லூரிச் சிட்டுகளுக்கு Time Pass செய்ய ரொம்ப ஜாலியான இடம் Shakti Foods (சீக்கிரத்துல குரோம்பேட்டைக்கும் வருதுங்க சக்தி ஃபுட்ஸ்)

ஷில் கலை

# டேபிள் டென்னிஸில் போரடிக்கும் கேம்!




ராமன், புவனேஸ்வரி, கேடன் பபூர் என்று இந்தியாவையே ஆட்கொண்ட சேம்பியன்களை தமிழ்நாடு கொண்டிருந்தாலும், இங்கு கிரிக்கெட், ஃபுட்பால் அளவிற்கு டேபிள் டென்னிஸ் வளர்ச்சி பெறவே இல்லை.

"அதுக்குக் காரணம் டென்னிஸ் மாதிரி இதில் பரபரப்பான நீண்ட 'ரேலி' இருக்காது. சின்ன பால், சின்ன டேபிள், சின்ன பேட்... என சிம்பிளாக இருந்தாலும், அதிகமா செலவு வைக்கக் கூடியதும் இதுதான்" என்றனர் கடந்த வாரம் லயோலாவில் நடைபெற்ற இரட்டையர் பிரிவில் வென்ற, ரஜத் கமல் - சுஜித். இந்திய ஜூனியர் அளவில் ரஜத்திற்கு முதல் ரேங்க். சுஜித்திற்கு எட்டாவது. இந்தியா சார்பாக டேபிள் டென்னிஸ் பிரிவில் ஏதென்ஸ் ஒலிம்பிக்கிற்கு தேர்வான சரத் கமல், ரஜத்தின் சகோதரர் என்ற ஆச்சர்யமான தகவல், சென்ற இடத்தில் நமக்குக் கிடைத்தது.

• சுஜித் - ரஜத் கமல்

"தமிழ்நாட்டிலேயே லயோலாவில்தான் விளையாட்டிற்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பார்கள். எப்பொழுது வேண்டுமானாலும் மேட்சிற்கும் ப்ராக்டிஸிற்கும் செல்லலாம். அட்டெண்டென்ஸில் பிரச்னை செய்யவே மாட்டார்கள்" என்ற பொழுது இருவரின் முகத்திலும் குறும்பு கொப்பளித்தது. (சரி சரி, சென்ற வாரம் 'ப்ராக்டிஸ்' என்ற பெயரில் 'வசூல் ராஜா' சென்றதை யாரிடமும் சொல்ல மாட்டோம். போதுமா?)

ஷில் கண்ணன்

✉ நிறைவேற்றவே வாய்ப்பில்லாத சேது சமுத்திர திட்டத்தில் கவனம் செலுத்துவதை விடுத்து மயிலாப்பூர் போன்ற உபயோகமான விஷயங்களைக் கவனிக்க அரசியல்வாதிகள் முன் வர வேண்டும்.

- rajarajendr1@ vsnl.com

✉ கார்ட்டூன் கார்னர் நத்திங் கார்னர். தமிழின் திறம் சிவப்பா? எனக்கு அப்படித்தோன்றவில்லை.

- சந்தியா புரசை

✉ 'ரயில்வே ஸ்டேஷனில் டிக்கட் கிடைக்கலை' மேட்டர் ஓகே. அரசு அலுவலகங்களிலும் பல்வேறு அவலங்கள் உள்ளன. அவற்றையும் Focus செய்தால் எங்க வோட்டு உங்களுக்குத்தான்!

- செந்தில், குளனமேடு

உங்கள் கருத்துக்களை Chennaiscan@kalkiweekly.com -க்கு மெயில் அனுப்பவும்.

**பூமராங்**

# 'ஜோதிகாதான் சூப்பர்!'

'விடாது சிரிப்பு' சீரியலில் ஒரு காட்சி. விஞ்ஞானி ஒருவர் கார் டிரைவரைப் பார்த்துக் கேட்கிறார். "உனக்கு science என்றால் என்ன தெரியுமா?" "ஓ. தெரியுமே. ஒருத்தன் தன் கையெழுத்தை ஒரு முறை போட்டால் அது சைன். ரெண்டு முறை போட்டா அது சைன்ஸ்!" இப்படி டைமிங்காக கடிக்க கிரேஸி மோகனை விட்டால் தமிழ்நாட்டில் வேறு யார் இருக்கிறார்கள்.

**• 'வசூல்ராஜா' பண்ணும்போது, முன்னாபாய் காமெடியை அப்படியே தமிழிலும் பயன்படுத்தினீர்களா?**

இல்லவேயில்லை. இந்தியில் அந்தளவுக்கு ஹியூமர் கிடையாது. அதிலிருக்கும் ஒரு டயலாக் கூட 'வசூல்ராஜா'வில் வரலை. அதுதானே எனக்கும் சேலஞ்சிங்கா இருக்கும்? "மனமிருந்தால் மார்கபந்து!" "கற்றோருக்கு 'செல்'லுமிடமெல்லாம் சிறப்பு" வசனங்களெல்லாம் இந்தியில் எங்கே இருக்கு? இதைவிட ஏராளமான ஜோக்ஸ் படத்தில் இருந்தது. நீளம் காரணமாக அதையெல்லாம் வெட்டி விட்டார்கள்.

**• காமெடியின் மகத்துவம் பற்றி?**

நகைச்சுவையினால் மனம் சந்தோஷத்தில் திளைக்கும் பொழுது நீங்கள் பாஸிட்டிவாகவே செயல்படுவீர்கள்.

**• ஜோக்கை சுடுவீங்களா?**

நகைச்சுவை சுடவே வேண்டாம் சார். அது ஒரு சமுத்திரம் மாதிரி. 'ஹோட்டலில் கொடுக்கப்பட்ட காபியில் ஈ விழுந்திருக்கு. அடுத்தது சர்வர் என்ன சொல்வார்'ங்கிற போட்டி வைத்ததற்கு ஒரு லட்சம் ஜோக்ஸ் வந்ததாம். மெனக்கெட்டால் புதுப்புது ஜோக்ஸ் நிச்சயம் கிடைக்கும். 'மேரேஜ் மேட் இன் சலூன்' நாடகத்துல சலூன்ல வேலை பார்த்த தலை வேறொரு வேலைத்துல இருப்பாரு. அப்போ ஒரு பெண் அவரிடம், "உங்களை எங்கோ பார்த்த மாதிரியிருக்கேன்னு" கேட்டா. அதுக்கு அவர், "வாய்ப்பே இல்லை. ஐ ஆம் ஒன்லி ஃபார் ஜெண்ட்ஸ்"னு சொல்ற கடைசி 'பஞ்ச்'சிங்கை இரவெல்லாம் யோசித்து காலையிலதான் எழுதினேன்.

**• 'விவேக்' பற்றி?**

இன்னைக்கு தமிழ் சினிமாவுல பூஜை போடும்போது வெத்தலை, பாக்கு, பூ, பழம், விவேக் கால்ஷீட்'ங்கிற லெவலுக்கு அவர் காமெடி கட்டாயத் தேவையாயிருக்கு. ஆனாலும் இன்னைக்கு வரைக்கும் அவரோட 'ஒர்க்' பண்ணினதில்லை. அதிர்ஷ்டவசமா அது நடந்துன்னா, வெறும் வாயில அவல் மெல்றவனுக்கு விவேக் கிடைச்ச மாதிரியிருக்கும்.

**• நீங்கள் எழுதுற வசனம் காமெடிதான் என்கிற முடிவுக்கு எப்படி வருவீங்க?**

இது மில்லியன் டாலர் கேள்வி. எனக்கே இந்தக் குழப்பம் இருக்குது. நான் எழுதுற வசனம் ஜோக்கா'ங்கிற குழப்பம் ஆடியன்ஸ் சிரிக்கிற வரைக்கும் தீராது.

**• உங்களுக்கு எந்த ஹீரோயினையும், எந்த ஹீரோயினுக்கு உங்களையும் பிடிக்கும்?**

ஊர்வசிக்கு என் காமெடிகள் ரொம்பப் பிடிக்கும். நேரிலேயே சொல்லியிருக்கிறார். எனக்குப் பிடிச்ச இளம் நடிகை ஜோதிகா. காரணம் பளிச் பளிச்னு பேசறதால. அந்த முகபாவங்களுக்காக ஒரு முழு நீள காமெடி படம் பண்ணலாம். அவங்களோடு படம் பண்ண மிகவும் ஆவலா இருக்கேன்.

**• பாலாவோட சீரியஸ் படங்கள் பற்றி உங்க கருத்து என்ன?**

பாலாவோட படங்களில் இன்னொரு ஜெயகாந்தன் தெரிகிறார். விநோதமான, விசித்திரமான கேரக்டர்களை நம் கண்முன் கொண்டு வருகிறார். நான் கூட இதுபோன்ற சீரியஸ் படங்களுக்கு வசனம் எழுதுவேன். ஆனால் கிரேஸி மோகன் என்ற பெயரை நம்பி வரும் ரசிகர்கள் ஏமாற்றமடைவார்கள். வேண்டுமானால் 'அழுகை' மோகன் என்று புனைபெயர் வைத்துக் கொள்ளலாம்.

**• அடுத்தது?**

அடுத்தது 'விடாது சிரிப்பு'வின் புரொடியூசர், இயக்குனருடன் இணைந்து கதை, திரைக்கதை, வசனம் உட்பட கிரேஸிமோகன் வழங்கும் 'பயணிகள் ஜாக்கிரதை' என்கிற புதுப்படத்திற்கு ஸ்கிரிப்ட் எழுதி வருகிறேன். புதுமுகங்களோடு ஊர்வசி, கோவை சரளா, வடிவேலு போன்ற காமெடி கேங் அதில் இருக்கும். இது மட்டும் ஜெயித்தால் ஒரு காமெடி தொழிற்சாலையே உருவாக்கி வருடத்திற்கு இரண்டு படங்கள் பண்ணுவேன். சந்தோஷமா!

✍ ச.ந. கண்ணன்

## சறுக்கிய திருமுருகன்!

'மெட்டி ஒலி' சீரியலின் ஒவ்வொரு அசைவையும் மிகுந்த கவனத்துடன் செய்துவரும் இயக்குநர் திருமுருகன், கடந்த வாரம் வியாழக்கிழமை ஒளிபரப்பான பகுதியில் ஒரு சிறு சறுக்கலைச் சந்தித்தார். அதாவது 'மெட்டி ஒலி' கதாபாத்திரங்கள் கோடைக்கானலுக்கு வரும் காட்சியில் ஒரு வேன் வருகிறது. அவ்வேனிலிருந்து இறங்குபவர்கள் மாணிக்கம், போஸ், மற்றும் பலர். அவ்வேனின் பின்புறத்தில் சன் டிவியின் சிம்பல் ஒட்டியிருந்ததைக் கவனிக்காமல் விட்டு 'மெட்டி ஒலி'யில் இயற்கைச் சூழ்நிலையைத் தவற விட்டதாக அதன் ரசிகர்கள் வருத்தமடைந்துள்ளனர்.

(மேரேஜ் வேற நெருங்குது! ஜாக்கிரதையா இருங்க திருமுருகன்!)

✍ முத்து



# ஆட்டோ டிரைவர்களின் ரத்தக் கண்ணீர்!

சென்னையின் மகத்துவங்களில் ஒன்று மஞ்சள் - கறுப்பு மேனி ஆட்டோக்கள். "ஆட்டோ டிரைவர்களுக்கு மரியாதையே தெரியாது" என்ற குற்றச்சாட்டுடன்தான் தங்கள் வாழ்க்கையில் 'சவாரி' செய்து கொண்டிருக்கிறார்கள் ஆட்டோ டிரைவர்கள். இதையும் தாண்டி அவர்களுக்கும் இதயமுண்டா? கண்ணீர்க் கதைகள் உண்டா? என்று சென்னை முழுக்க பரவியிருக்கும் காக்கி உடை நண்பர்களிடம் பேசிப் பார்த்த போது, மீட்டரின் சூட்டை விடப் பலமடங்கு கொதித்தெழுந்தார்கள்.

"சென்னை ஆட்டோ டிரைவர்கள் என்றாலே அராஜகப் பேர்வழிகள், நாணயம் அற்றவர்கள் என்றுதான் பப்ளிக் எங்களைத் தவறாகவே எடை போட்டு வைத்திருக்கிறார்கள். ஆனால் இன்று என்ன நடக்குது தெரியுமா, சவாரிக்கு வரும் பயணிகள்தான் எங்களைத் துன்புறுத்தி ஆட்டோ தொழிலை விட்டே சென்று விடலாமா என்று நோக வைக்கிறார்கள். டைடல் பார்க்கில் இருபதாயிரம் சம்பளம் வாங்கும் டை - ஷூ அணிந்த ஜென்டில்மேன் 'ஷேர் ஆட்டோவா? பத்து ரூபாய்க்கு வர்றியா'ன்னு கூலா கேட்கிறாரு. அதாவது இன்றைக்கெல்லாம் ஆட்டோ சவாரி என்றாலே அது எந்த தூரமாக இருந்தாலும் முப்பது நாற்பது ரூபாய்க்குள் முடிந்து விடுகிறது. காரணம்?

தட்டிக் கேட்க ஆளேயில்லாமல் பெருகிவிட்ட பர்மிட் வாங்காத ஷேர் ஆட்டோக்களும், வேன்களும்தான். இதில் ஐந்து பேர் மட்டுமே அனுமதி என்கிற அரசு விதியை மீறி, புளிமூட்டை போல் பதினைந்து பேரை வைத்து ஓட்டுகிறவர்களுக்கும், பத்து, பதினைந்து ரூபாய்க்குக் கூவி அழைக்கும் வேன்களுக்கும் யார் அனுமதி கொடுத்தது?

மூன்று வருடங்களுக்கு முன்பு ட்ராஃபிக்கைக் காரணம் காட்டி புது ஆட்டோக்களின் பர்மிட்டை நிறுத்தி வைத்தது அரசாங்கம். இதனால் 'சொந்த ஆட்டோ' என்கிற எங்கள் கனவு, அன்றே தகர்ந்து போனது. ஆனால் வருடத்திற்கு லட்சம் லட்சமாய் பெருகும் டூ - வீலர்களுக்கும் அதனால் உண்டாகும் விபத்துகளுக்கும் ஏதாவது மருந்துண்டா அரசிடம்?

ஒரு லிட்டர் பெட்ரோல் விலை இருபது ரூபாய்க்கு விற்ற போது 1 கி.மீக்கு 3.50 என்று நிர்ணயித்த அரசு, இன்று நாற்பது ரூபாய்க்கு மேல் பெட்ரோல் விலை ஏறிய பின்பும் உயர்த்தவில்லையே. இந்நிலையில் ஆட்டோ டிரைவர்கள் தானாக அதிகம் கேட்டாலும் ஏதாவது தவறு இருக்க முடியுமா? இதே அரசுதான் இரவு ஒன்பது மணியானால் குறைந்தபட்சம் இருபத்தைந்து ரூபாய்க்குத்தான் சவாரி போக வேண்டும் என்று பத்து வருடங்களுக்கு முன்பு ஆணையிட்டது. இதை எங்களால் இன்னாளிலும் நடைமுறைப்படுத்த முடிகிறதா?

பெங்களூரில் ஷேர் ஆட்டோ, வேன், ஆர்.டி.ஓ, போலீஸ் போன்ற எந்தவிதத் தொந்தரவுகளும் கிடையாது. இதனால் ஆட்டோ டிரைவர்களின் வாழ்க்கை அங்கு சுபிட்சமாக உள்ளது. ஆனால் நாங்கள் சவாரி போகிறோமோ இல்லையோ, தினமும் ஆட்டோ ஓனருக்கு 120 ரூபாய் வாடகை கொடுத்து, எங்கள் கை காசில் 4 லிட்டர் பெட்ரோல் போட்டு இதையும் மீறி கிடைக்கும் வருமானத்தில்தான் எங்கள் குடும்பத்தையே ஓட்ட வேண்டும். எங்காவது ஒரு ஆட்டோ டிரைவர் படிப்படியாக முன்னேறி வாழ்க்கையில் ஜெயித்த கதையை யாரேனும் கேட்டிருக்கிறீர்களா?

இரவு எந்த நேரமாயிருந்தாலும் அவசர உதவி என்றால் ஓடோடி வருவது ஆட்டோக்கள்தானே? ரோடுகளில் ஏற்படும் விபத்துகளில் அடிபட்டு சாகக் கிடப்பவர்களை ஒரே ஓட்டத்தில் மருத்துவமனைக்குக் கொண்டு சேர்த்தால், அங்கு டாக்டர்களும், போலீஸும் கேள்விகளால் துளைத்தெடுத்து, 'ஏன்டா உதவி செய்தோம்' என்கிற நிலைமைக்கு எங்களை ஆளாக்கி விடுகிறார்கள்.

எங்களின் அத்தனை குமுறல்களுக்கும் விடிவு காலம் ஏற்படப் போவதில்லை என்று எங்களுக்கும் தெரியும். காரணம் தி.மு.க.வோ, அ.தி.மு.க.வோ எந்த அரசு ஆட்சிக்கு வந்தாலும், சாமான்யர்களான எங்களை ஒழிப்பதில்தான் அதிக அக்கறை காட்டுகிறார்கள். இதையெல்லாம்விட பெரிய கொடுமையும் குற்ற உணர்ச்சியும் என்ன தெரியுமா? ஊர் உலகமெல்லாம் ஆட்டோவில் கூட்டிச் சென்று சுகப்படுத்தும் எங்களால், எங்கள் மனைவி, குழந்தைகளை ஆட்டோவில் கூட்டிச் செல்ல முடியாததுதான். காரணம், அந்த நேரத்தில் வேறொருவருக்கு சவாரி செய்து பெட்ரோலுக்குப் போட்ட காசையாவது மீட்கலாமே என்கிற எங்களின் இயலாமைதான்" என்று கண்ணீர் வடித்த ஆட்டோ டிரைவர்களைக் கண்டு திகைத்துப் போனோம் நாம்.

செந்தில்
வித்யன்

## போஸ்ட் கார்டு POLL

சென்னை வழக்கறிஞர்கள் போராட்டம்

- நியாயமானது
- வெற்றுக் கூச்சல்
- வெறும் விளம்பரத்திற்காகவே.

இந்த மூணுல உங்க சாய்ஸை போஸ்ட் கார்டுல அல்லது ஈ-மெயில்ல தட்டி விடுங்க. ரிசல்ட் அடுத்த வாரம்.

முகவரி: போஸ்ட் கார்ட் Poll,
சென்னை ஸ்கேன்,
47-NP, ஜவஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல்,
சென்னை - 600 097
chennaiscan@kalkiweekly.com

### சென்ற வார Poll ரிசல்ட்

இரயில்வே நிலையங்களின் உள்ளே அமைந்திருக்கும் மதச் சின்னங்கள் அகற்றப்பட வேண்டும் எனும் முடிவு:




## தூள் கிளிக்

📷 முகில்

## பாடிகாட் முனீஸ்வரன்!

சென்டா முதல் ஹியூண்டாய் வரை அனைத்து சர்வதேச ஆட்டோ மொபைல்களும், ஆட்டம் போடாமல் சமர்த்தாக சந்தனப் பொட்டு இட்டுக் கொண்டு, தலை வணங்கி நிற்கும் ஒரே இடம் பாடிகாட் முனீஸ்வரன் கோயில் தான். சென்னையிலும் அதன் சுற்றுப்புறத்திலும் இருப்பவர்கள், புது வண்டியை வாங்கியவுடன் இங்கே தான் முதன் முதலாக வந்து பூஜை போடுகிறார்கள்.

"பாடிகாட் கிட்ட பூஜை போட்டாச்சுனா, வண்டி எந்த ப்ராப்ளமும் இல்லாமல் ஓடும். ஆக்ஸிடெண்ட்டும் நடக்காது" என்கிறார் தமது ஆட்டோவிற்கு குழைத்துக் குழைத்து பொட்டு வைத்துக் கொண்டிருந்த பெருமாள் முருகன். நாளொரு காரும் பொழுதொரு ஆட்டோவுமாக, படு பிஸியாக இருக்கிறது இந்த முனீஸ்வரன் கோயில். சைக்கிளுக்கு பூஜை போடுபவருக்கு, கூடிய விரைவில் டூ வீலர் பாக்கியமும், டூவீலருக்கு பூஜை போடுபவருக்கு ஃபோர்டு பாக்கியமும் கிடைக்கும் என்பது இங்கு வரும் பக்தர்களின் நம்பிக்கை. சென்ட்ரல் ரயில் நிலையத்திலிருந்து பல்லவன் பஸ் டிப்போவிற்கு போகும் வழியில் இருக்கிறார் இந்த ஆட்டோ மொபைல் முனீஸ்வரர். சிறிது பிஸியான ஏரியாவாக இருப்பதாலும், இடத்தை அடைக்கும் என்பதாலும் இப்போதைக்கு கப்பல், ஹெலிகாப்டர், ராக்கெட் போன்ற கனரக வாகனங்களுக்கு இங்கே பூஜை போடுவதில்லை. ஒரு வேளை அனுமதித்திருந்தால் டைட்டானிக் மூழ்காமல் இருந்திருக்குமோ என்னவோ!

📷 + ✍ மருதன்

## வக்கிர விளம்பரம்

சென்னை மாநகராட்சிக்கு உட்பட்ட பகுதிகளில் மெகா சைஸ் விளம்பர போர்டுகளின் ஆதிக்கம் அதிகரித்துக் கொண்டே வருகிறது. தற்போது இந்த விளம்பர யுக்தியில் ஆபாசமும், வன்முறையும், வக்கிரப் புத்தியும் கணிசமாக கலக்கப்பட்டு வருகிறது. குறிப்பாக, ஒரு பொருளுக்கு எவ்விதத்திலும் தொடர்பே இல்லாத பெண்ணை ஆபாசமாக வரைந்திருப்பது, இரட்டை அர்த்தங்களைத் தரும் வார்த்தைகளை 'Logo' என்ற பெயரில் திணிப்பது, சிவப்பு நிறத்தை வெளிப்படுத்த அடிபட்டு கீழே கிடக்கும் ஒருவரின் தலை பிளந்து கசிந்து ஓடியிருக்கும் ரத்தத்தைக் காட்டுவது என ஏகப்பட்டவை. வருமானம் வருகிறது என்பதற்காக, இது போன்ற மலிவான விளம்பரங்களை அரசும், மாநகராட்சி நிர்வாகமும் கவனிக்காதது போல் இருப்பது சரியல்ல என்கிறார்கள் சென்னை மக்கள். சிந்திப்பார்களா வியாபாரிகளும், விளம்பர நிறுவனங்களும், அரசு அதிகாரிகளும்?



✍ ஸ்வரா


Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/PMG (CCR) 573/03-05 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 268/03-05 *
Registered as a Newspaper in Sri Lanka Supplement to the Kalki issue Dated 29.8.2004



வாங்கியாச்சா,
வாங்கியாச்சா...?






Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05 * Licensed to post without prepayment under PMGis Licence No. WPP 358 / 03 - 05 * Registered as a Newspaper in Srilanka



• மத்திய உள்துறை அமைச்சர் திரு. சிவராஜ் பாட்டீலிடம் இருந்து டைரக்டர் திரு. S.P. நாயுடு அவர்கள் விருது பெறுகிறார்.

பாரம்பரிய பெருமைமிக்க இயற்கை வைத்தியத்தை விஞ்ஞான பூர்வமாய் நடத்திவரும், தேசிய, **Outstanding services & achievement** விருது பெற்ற டைரக்டர் திரு. S.P. நாயுடு அவர்கள் தலைமையின் கீழ் நடந்துவரும் அடையார் இயற்கை மருத்துவ மையம்

## புற்று நோயாளிகளுக்கு ஒரு வரப்பிரசாதம்

ஆரம்ப நிலை புற்று நோய்க்கு சிறந்த நிவாரணம். Radiation Chemotherapy எடுத்துக் கொள்பவர்களுக்கு பக்க விளைவுகளிலிருந்து (முடி உதிர்தல், வாய்ப் புண், இரத்த சோகை, குமட்டல், வாந்தி) பெருமளவில் நிவாரணம். முற்றிலும் பக்க விளைவுகளற்ற மூலிகை மருந்துகள் மற்றும் இயற்கை மருத்துவ சிகிச்சை முறைகளால் நோய் பரவுவது தவிர்க்கப்படுகிறது.

1. **நேரில் வந்து எங்கள் மருத்துவமனையில் தங்குபவர்களுக்கு:** எங்கள் மருத்துவமனையில் 6 விதமான சிகிச்சைகள் தருகிறோம்.மேலும் கேன்சர் ஹெர்பல் லேகியம் மற்றும் கேப்சூல் தரப்படுகிறது. புற்றுநோயாளிக்கான பிரத்யேக உணவு வழங்கப்படும். அத்துடன் பிசியோதெரபி, யோகா, பிராணவாயு சிகிச்சை மற்றும் இரத்த ஓட்டத்தை சீராக்கி புத்துணர்ச்சி அளிக்கும் இயற்கை முறை சிகிச்சை அளிக்கப்படுகிறது.
2. **நேரில் வர முடியாதவர்களுக்கு:** நோயாளியின் தற்போதைய மருத்துவ நிலையைத் தெரிந்து கொண்ட பின் கேன்சர் ஹெர்பல் லேகியம் மற்றும் கேப்சூல் அனுப்பி வைக்கப்படும். அதற்காக நோயாளியைப் பற்றிய முழு விவரங்களையும் தெரிவிக்க வேண்டும்.

## PARKINSON'S - நோயாளிகளுக்கு ஓர் அறிவிப்பு

எங்கள் சென்டரில் பர்கின்சன் ஹெர்பல் லேகியம் மற்றும் கேப்சூல் முதலியவை ஆரம்ப நிலையில் உள்ளவர்களுக்கு (மூளையில் பேசல் கேங்கிலியே பகுதியில் உள்ள நியூரான்கள் அதிகம் பாதிப்படையாதவர்களுக்கு) மிகச் சிறந்த நிவாரணம் கொடுக்கின்றது. எங்கள் மருத்துவமனையில் தங்கி கை நடுக்கம், விறைப்புத் தன்மை, மற்ற வேக குறைபாடுகள் குறைய சிகிச்சை எடுத்துக் கொள்ளலாம்.

**ARTHRITIS-** மூட்டுவலி ◆ குதிகால்களில் எலும்பு வளர்ந்து நடக்க முடியாமல் வலி. ◆ கை கால்களில் மூட்டு வீக்கமும், வலியும் ◆ கை, கால் விரல் மூட்டுகளில் வீக்கமும் வலியும் ◆ கழுத்து வலி ◆ நடு முதுகின் கீழ்ப்பகுதியில் வலி. பல ஆண்டுகளாக இருந்தாலும் வித்தியாசமான இயற்கை வைத்திய முறையில், பக்க விளைவுகள் இல்லாமல் நலம் பெறச் செய்கின்றோம். இந்தியா மற்றும் வெளிநாடுகளில் இருந்தும் வியாதியஸ்தர்கள் வருகிறார்கள்.

ஆஸ்துமா, டயாபடீஸ், உடல் பருமன் குறைதல், வயிற்று உப்புசம், கண்களில் நீர் வரமை - சிறந்த இயற்கை முறை சிகிச்சை வழங்கப்படும். மற்றும் எங்களிடம் நாள்பட்ட இதர நோய்களுக்கும் ஆலோசனை கேட்கலாம்.

**எங்கள் மருத்துவமனையில் தங்கி பணியாற்ற குடும்ப பாரமற்ற மகளிர் தேவை**




# அடையார் இயற்கை வைத்திய மையம்
# ADYAR NATURE CURE CENTER ™



Regd. Hospital

No. 6, SECOND CROSS STREET, KASTURBHA NAGAR, ADYAR, CHENNAI - 20.
Phone:2441 3399, 2440 2470, Tele Fax: 044-2491 6650 (Opp. Gandhi Nagar Bus Terminus)
www.adyarnaturecure.com e-mail: adyarnaturecure@yahoo.com,

குறிப்பு: A/c, Delux A/c சாதா, தங்கும் அறைகள் மற்றும் ஜெனரல் வார்டு, கலர் டி.வி., போன் வசதியுடன் கிடைக்கும். சைவ உணவு வசதி மட்டும் உண்டு. முன்பதிவு அவசியம்.